17. நடி$_3$சே ராஜ்யமுலோநு பெரி
18. யமோர ரேவுந தூ$_3$தி$_3$ பெரி
19. கெல்கு பெரிகெ வொக்கம்டிகி ரெம்டு$_3$
20. மாவுல்நு விக்ரமம் ரேவு நஸ
21. கலமைந பெரிகெல்கு ந5? பெரி
22. க வொக்கம்டிகி காணி வம்த்துநாநு
23. கட்டட$_3$ சே$_0$சி$_0$நாரம்க்$_3$க$_3$நக யீ
24. மக$_3$மலந்கு வச்சிந ஆதா$_3$ய
25. ம் ராபு$_3$ச்சக திருமுட்டம் ஆதி$_3$வ
26. ராஹ ஸ்வாமி ஸந்நிதி$_4$நி தி$_3$நப்ரதி
27. ஸஹஸ்ர நாமார்ச்சந கோ$_3$புர தீ$_3$
28. பாராத$_4$ந் சேஸூக ஆசம்த்$_3$ரார்க
29. முகா$_3$யீத$_4$ர்மம் பரிபாலந
30. சே$_0$ஹூக்க வச்சேதி$_3$. தா$_3$ந பாலந
31. யோர் மத்$_3$யே தா$_3$நாச்ச்ரேயாநு பா
32. லநம் தா$_3$நாத் ஸ்வர்க்$_3$க$_3$மவாப்நோ
33. தி பாலநாத$_3$ச்யுதம் பத$_3$ம்
34. ஸ்ரீராம.





## 43. அனியாப்பூர் பாளையம் செப்பேடு

நாக. கணேசன், கரூர்.

**இடம்** : திண்டுக்கல் மாவட்டம் வளவி செட்டியப்பட்டி கிராமத்தில் பெ. பொன்னுசாமி (எ) பொன்னரிடம் உள்ளது.

**காலம்** : கி.பி. 1762(?) ஆம் ஆண்டு ஐப்பசி மாதம் 9 ஆம் நாள்.

**செய்தி** : பாலமுந்தைய நாயக்கருக்கும், லக்கய நாயக்கருக்குமிடையே நடந்த சண்டையில் பேய்சங்கன் ஆற்றிய வீரத்தைப் பாராட்டி கொடை அளிக்கப்பட்டுள்ளது. இந்நிகழ்வு சின்ன வசவப்ப கம்பய நாயக்கர் ஆட்சியின் போது நடைபெற்றுள்ளது. பேய்சங்கனின் வாரிசுகளுக்கு பாளையத்தில் 30 குழி நிலமும் அனியாப்பூரில் 30 குழி நிலமும் தானமாக வழங்கப்பட்டுள்ளது. தற்போது பேய் சங்கனின் வாரிசான பொன்னரிடம் இச்செப்புப் பட்டயம் உள்ளது. இச்செப்புப் பட்டயம் 35.5 செ.மீ. நீளமும், 16.5 செ.மீ. அகலமும் 975 கிராம் எடையும் கொண்டது.

1. சாலிவாகனசக்கார்தம் 1685? மேல்ச் செல்லா நின்ற விசு ௵ அற்பிய மீ திருவோண நட்சத்திரமும்
2. விசைய திசமையும் பெற்ற சுபதினத்தில் ஶ்ரீ மது ராமசெயம் இராமப்பக் கம்பயனாயக்கர் குமாரன் சின்ன வசவப்
3. பக் கம்பயன் எறதமான வாதலா னாளெயிலே திருவளயரியக் கட்டளையிட்டோம் இந்த ந(ம்)முடையாதினத்துக்கு பிள்ளை
4. பேற்ச் சங்கன் உத்திரவாதம் பண்ணினது இவனுடைய சிரிய தகப்பன் சின்னச் சங்ககவுண்டன் அழகுபாரை மேட்டுச் சண்ை
5. டயிலப் பட்டது அவனை ராமப்பக் கம்பயனாயக்கர் தன்டிகையின் பேரிலெடுத்து வந்து பளைய கோட்டையில் அவன் பெண்சா
6. தியுங் கூடப் பயணமாயிக் கொண்டம னாயக்கர் மாலையில் ரெண்டு பேரையுந் தகனம் பண்ணினார்கள் அவனுக்கு மூத்தவன் பெ
7. ான் னனென்று ஒருவன் அவனை ராணுவற்க் குரிபண்ணி பாலமுத்தயனாயக்கருக்கு ஒத்திகையனுப்பி விச்ச விடத்தில் மடுவூரு னாயக்கருக்கும் பால
8. முத்தயனாயக்கருக்குந் தாரிசமாய் வாருச் சண்டையான விடத்தில் பால முத்தயனாயக்க ராணுவமுரிஞ்சு பின்வாங்குமிடத்தில் இவன் உள்பழி
9. ச்சு மடுவூரு ராணுவத்தில்ப் புகுந்து வெட்டி இவனுங்காயமாய் பாலமுத்தய னாயக்கர் பல்லக்கிலே வச்சு அவனை இங்கனிப்பி விச்சார்களக்கா

10. யக்காரனை சின்னெவக் கம்பயனாயக்கர் வந்து பார்த்து தன் கைவஸமய் நூரு பொன் முஷத்ததி போட்டிருந்த வலயத்தையுங் குடுத்து க

11. யி வளகி காமாட்சிபு போட்டு அவனு விளுந்து போனான் அவன் பெண்சாதியுங் கூடச் சேர்ந்தாள். தேவதாயத்துக்க மா

12. னிய விட்டது பாளயத்தில்க் கல்லணையில்க் கல் விரையடி நஞ்சையு புஞ்சையிலம் முப்பது குளி நிலமுந் தோட்ட

13. மும் னாசாபசத்தியங்களாய் விட்டது இதற்க்குய் யாதாமொருதர் ஆற்ஷெதினை பண்ணினால் கெங்கைக் கறையி லெ

14. ல காரான் பசுவைக் கொன்ற பாவத்திலே போவர்கள் அதன் பிறகு சின்னெபக் கம்பயனாயக்கரவர்கள் லக்க

15. யனாயக்கரவர்கள் பேரிலப் போய் அவர்கள் லாயத்து குதிரையளையெல்லாங் கொண்டு வந்து கோட்டையிலே

16. கட்டிக் கொடு முத்தயனாயக்கரை ஒத்திகை யளைக்கப் போனார் அவர் வராதினாலே திரும்ப வருகையிலக் கே

17. காட்டைய லக்கயனாயக்க ராணுவம் சுத்திக் கொடு இருக்கயில் துரை குதிரை போட்டு வெட்டி அவருங் காய

18. ம் பட்டுக் காயத்தோடே கோட்டை வந்து சேர்ந்தார் அதன்பிறகு நன்மளை யளைச்சுப பட்டத்துக்கு வச்சு

19. த் தம்முடய பளிவாங்கச் சொல்லிப் போட்டுத் தெய்வீகமானார். அதன்பிறகு நானு அரசம்பலமாயிருந்

20. து தலையெடுத்துப் பிறபலமாய் அரிய தம்பி மகன் பேய்ச் சங்கன் பிறபலமானதுக்கு மேல் நன்முடய தலை

21. மயன் பளிவாங்கவேணுமென்று இவனை யளைச்சுச் சொல்லுமிடத்தில் நல்லது அப்படியே வாங்குரை சுவாமி லெ

22. யன்று சொன்னான் அதன் பிறகு இவன் போய் கிரிமிபட்டத்து அண்ணார்கள் வறத்துக்கு வந்திருந்தார்க

23. ள் அவனை ஆள்ப் புள்ளியரியாம லக்கயனாயக்கராக்கு மென்று தலை வெட்டிப் போடடு அவன் ஆயிதத்தை எ

24. டுத் கொன்று வந்து விட்டான் அதன் பிறகு அண்ணர்கள் பளிக்கு மதுரைக்கு ஒரு ராவுத்தனையு அந்த ஆயிதத்தையுங் கு

25. டுத்தனிப்பி விச்சுப் பளி தீரங் குடுத்தோம் அதன் பிறகு முப்பது பேர்ராணுவத்தைப் பிரிச்சுக் கொன்று ராத்திரியே பி

26. றப்பட்டுப் போய் முள்ளிப்பாடிக் கோட்டையேரி விளுந்து பேய்ச்சங்கன் அட பாலஇராமசந்திர னாயக்கர் பெண் வயத்து பி

27. ள்ளையைப் பட்டத்தில வச்சு இருந்து து அவர்தலையை வெட்டிப் போட்டுப் பின்னு அரமனையிலப் பூதுகுரபோது யென்ன

28. டா பேய்ச் சங்கர் வீட்டிலே பூதுகுராயென்று அம்மனவர்கள கேள்க்குமிடத்திலே என்த்தகப்பன பளிவாங்க வந்த பேய்ச்சங்

29. கன்னல்லவொன்று மயரைப் பிடித்திளுத்துப் பின் விட்டு அப்பாச் சின்ன லக்கயனாயக்கர் தலையை வெட்டுமிடத்தில் ஊழியக்காரிச்சி எ

30. ன் பிள்ளையடா அப்பா தொண்டி பிள்ளையா வெட்டவேணுமென்று அவள் சொன்னதற்கு அவரல்லவென்று குதிரைக் களுத்தை

31. தவிட்டுப் போட்டு வந்து விட்டான் அதன் பிறகு அந்தச் சின்ன லக்கய னாயக்கர் தலையெடுத்துப் பிறபலமாய்ப் பட்டத்திலிருக்கயில அதன் பி

32. றகு னானும் ஸ்ரீரிரங்கத்திலப் சுவாமி சேவிக்கப் போனவிடத்திலப் பிடிச்ச அரமனையார் வசத்தில் அப்பாசாரியார் வசத்தி

33. ல் ஒப்புக்குடுத்து ஸ்ரீரிரங்கத்திலிருக்குமிடத்தில் அப்பப் பேய்ச்சங்கன் அரமனை வலசையும் சேர்த்துக் கொண்டு பாலமுத்த

34. யனாயக்கரிடத்திலச் சேர்ந்தான் அதன்பிறகு வேசம் போட்டுக் கொன்று வந்து விலங்குக் காலோடே தூக்கி

35. க் கொண்டு போய்ப் பல்லவராயரிடத்தில்ச் சேர்ந்தான் ராணுவமெல்லாம் துரைக்கிட்டப் போய்ச் சேந்திருந்து து

36. காலம் வெருப்பாயிருந்தபடியினாலே சனங்களுக்குத் தாங்காமல் வெள்ளிப் பள்ளெயம் வஸத்திலே போட்டிருந்

37. த்த தங்க முஷத்ததியளெலலாமங் குடுத்துத் தாங்காமல்த் தவுதாயப்படுகிறது கண்டு அந்தச் சனங்

38. களை ஒருவிடத்திலே கூட்டி போய்க் காப்பாத்து றேனென்று பேய்ச்சங்கன் சொன்ன விடத்தில் நல்லதெ.

39. ன்று சம்மதிட்சுச் சகல சனங்களையும் இவன் பிறகுக் கூட்டியனுப்பி யெங்கேயாகிலும் கூட்டி பே

40. பாய்க் காப்பாத்தென்று பனுப்பினதுனாலே இவன் சாமைய னாயக்கர் சீர்மையிலே போய் சேர்ந்தா

41. ன் சனங்களை பரிஞ்சு போய்ச் சென்று சேதி கேட்டு லக்கயனாயக்கரவர்கள் முத்தய னாயக்கரை ஒத்தி கை

42. க பண்ணிக் கொன்று பளிவெட்ட வேணுமென்று திருவாப்பூரு யீச்சங்காட்டிலே போயடங்கினார்கள்

43. அந்தச் சேதி பொதியன் சேருவைகாறன் குடுமியாமலையில் சுவாமி சேவிக்க வந்தவனுக்கு அத்திச்சு

44. அந்தச் சேதி அவனிடத்திலிருந்த உடையான் குட்டியை யளைச்சு இ ச்சங்கயட்டிலே படை வந்து அ

45. டங்கியிருக்குது துரையை யெச்சரிக்கையாயிருக்கச் சொல்லிப் போட்டு வா வென்று அனுப்பி விச்சா

46. ன் அதன் பிறகு அடங்கிருக்கிற படை முதுவுப்பறத்திலே பொதியன் சேருவைகாரன் போய்ச் சண்டை

47. பண்ணி ரண்டு பாளையகாறரையும் முடுக்கி விட்டான் இருவகையிலேயும் படுசேதங்களாய் அவர்க

48. ள் முரிஞ்சு போனார்கள் யிந்தச் சேதி சாமையனாயக்கருக்கு அத்தி பேய்ச் சங்களை யளைச்சுச் சேதி சொன்

49. னார் மறுனாள் ராணுவங்களைப் பிரிச்சுக் கொண்டு வந்து லக்கய னாயக்க ராணுவத்திலப் புகுந்து வெட்டிச் சண்டை பண்

50. ணு மிடத்தில் இவனை ஒப்புக்கொள்ளப் பார்க்குமிடத்தில் இவன் அவர்கள் ராணுவத்தாரை எல்லாம் பிடிச்சு ஆயித்தப் பாட்டையு

51. ம் பிடுங்கிக் கொன்று குரியாயிருந்த முள்ளிபாடி வீரைய்யனையுங் காலிலே பிரியைக்கட்டி வீதி வீதியா யிளுத்து

52. முடுக்கி விட்டான் அப்பால இவன் ராணுவத்தைக் கோட்டையில் வச்சுப் போட்டு மோலைய கவண்டனிங்கிர குரும்பனி

53. டத்தில் இறுநூறு பொன் எடுத்துக் கொண்டு சாமையனாயக்கருடன் சொல்லிக் கொண்டு உருண்டை மருந்து வாங்கிக்

54. கொன்று இராத்திரியிலே வந்து அணியாப்பூரிலக் கோட்டையும் போட்டு நாலு பிடை சுவர் ஏறிச் சென்று பல்லவ

55. ராயரிடத்திலிருக்கயிலச் சொல்லியனுப்பி விச்சான் அப்பாலக் கோட்டை வந்து சேர்ந்தோம் இந்த வேகுஅத்தி லக்கயனாயக்கர

56. வர்கள் காமாட்சி னாயக்கர் முத்தயனாயக்கர் அரமனையார் முதலாகிய பேரையும் ஒத்திட்டுக் கொன்று பழிவெட்ட வறச்சே மு

57. த்தயனாயக்கரவர்கள் பச்சை ராவுத்த னை யனுப்பி விச்சு இப்ப யவர்கள் துரையெத் தப்பிப் போகச் சொல்லென்று சொல்லி

58. யனுப்பினார் அந்தச் சேதி கேட்டு ராணுவத்தைக் கோட்டையிலே வச்சுப் போட்டு அப்பால மலையிலே போயிருக்கயி

59. ல அவர்களும் அப்படியே வந்து கோட்டையை வளைந்து சண்டை பண்ணுமிடத்திலே இவன் முதுப்பறத்திலே புகுந்து வெட்

60. டி முடுக்கிவிட்டான் அதிலே பட்ட குரிக்காறர் வரிசகுட்டிம் மஞ்சன சின்னங் கண்னதளவாய் சமுத்திரத்தில் றங்கமணி

61. யகாரன் இவர்களெல்லாம் பட்டார்கள் இதன் பிறகுசிறுனாயக்கர் சொல்ப்படியினாலே கொசுகூரு ஆத்துக் கிராம

62. வாளைத் தோட்டம் அச்சுக்கட்டுப் பண்ணை வச்சுக் கையிவசப்படித்தினதைப் பாளானபோது இவன் கையிவசப்ப

63. டித்தின சந்தோசத்தினாலே குதிரை குடையும் கயிவள்கி காமாட்சியும் போட்டுப் பெரியாயிதமுங் குடுத்து வெகு

64. மான பண்ணி அணியாப்பூரில் முப்பது குளிப் பிஞ்சை நிலமு யிவனுக்கு பறிநாமத்துத் தீயிலேயிருந்துக் கட்டளையிட் டே

65. டாம் இதன்பிறகு லக்கயனாயக்க ராணுவம் வந்து நிரையும் பிடிச்சுக் கொண்டு போனார்கள் அந்த மறுநாள் பேய்ச்சங்

66. கன் ராணுவத்தைப் பிரிச்சுக் கொண்டு கௌக்கே மறவனேரியிலே நிரையும் பிடிச்சுக் கொன்று வருகையி

67. லக்கயனாயக்க ராணுவம் துடந்து வந்து சண்டை பண்ணி படுகளத்துக்கு வடபாரிசத்தில் பட்டான் பேய்ச்சங்கன் இவனுடை

68. டய சவரியங்களந்த மட்டு இதற்கு முன் பூறுவ வீகரன கேத்தப்பள்ளி நாளா இவனுடைய வன்முஷம் நன்முடயாதினத்துக்கு மூ

69. க்கு முனை குடுத்துப் பளி வாங்குன படியினாலே துரை மடக்கள வரிசையுங் குடுத்துச் சாபசத்தியங்களாய்

70. அறுபது குளி நிலமும(ா)ந் தோட்டமுங் கல்லணையு எண்ணெ எண்ணெக்குங் கல்லுங்காவெரி புல்லும் பூமிச

71. ந்திராயிதம் உள்ளமட்டு ஆண்டு அனுபவிட்சுக் கொள்ளவும் இதுவும் வீரமலை சுவாமி சத்த கன்னியளரியக்க

72. ட்டளையிட்டோம் இதற்க்குய் யாதாமொருவர் இஷகுபண்ணினால் கெங்கைக் கரையிலே ஏளு கா

73. ரன் பசுவைக் கொன்ற பாபத்திலே போவார்கள்

74. ஸ்ரீமதுராம செயும் வீரமலைப் பூமிக்குடைய கம்பய னாயக்கர்

# 44. புதுச்சேரி அடிமைச் சாதனம்* : மறு வாசிப்பு

ஓர்சே மா. கோபாலகிருஷ்ணன், பிரான்சு

தமிழகத் தொல்லியல் கழகம் பதிப்பித்து வரும் ஆவணம் இதழ் 8இல் (1977) ஆவணக் காப்பகத்தில் ஓர் அடிமைச் சாதனம்* என்ற தலைப்பில் எஸ்.ஜெயசீலா ஸ்டீஃபன் ஒரு கட்டுரை எழுதியிருந்தார்.

இதன் மூலம், 18 ஆம் நூற்றாண்டில் பிள்ளைகள் அடிமைகளாக விற்கப்பட்டனர் என்ற முக்கியமான தரவு பெறப்படுகின்றது. இக்கட்டுரை பற்றிய நம் கருத்துக்களையும் இந்த சாசனத்தால் பெறப்படும் புதிய தரவுகளையும் தெரிவிப்பதே நமது நோக்கமாகும்.

1980 ஆம் ஆண்டில் இரண்டாம் வீராநாய்க்கர், ஆனந்தரங்கப்பிள்ளை மற்றும் இவருடைய சந்ததியினர் ஆகியோருடைய நாட்குறிப்புகள் பற்றிய சுவடிகளை ஆராய்ந்த காலத்தில் குறிப்பாகப் பாரிசிலுள்ள சுவடிகளையும் புதுச்சேரியிலுள்ள சுவடிகளையும் ஒப்பு நோக்கும் குறிக்கோளுடன் புதுவை சென்று, தேசிய ஆவணக் காப்பகத்தில் இருக்கும் சுவடிகளையும் வாசித்துணர்ந்தோம். அப்பொழுது, 1783 ஆம் ஆண்டு, பறங்கிப்பேட்டையில் பிரெஞ்சுக்காரர் ஒருவரிடம் பிள்ளையை விற்கும் சாசனச் சுவடி யொன்றைப் பாரிசிலும், 1781 ஆம் ஆண்டு குழந்தையை விற்கும் இந்த சாசனத்தைப் புதுச்சேரியிலும் கண்டோம்.

பிறகு, ஆனந்தரங்கப்பிள்ளை நாட்குறிப்பு ஆய்வை மேலும் தொடர்ந்து கொண்டு வருங்காலத்தில் மேற்கூறிய கட்டுரையைப் பார்க்க நேர்ந்தது. அந்த வாசகத்தில் 'அரிக்கமேடு' என்று குறித்திருப்பதைக் கண்ட போது, முன்பு நாம் இப்படிப் படித்ததாக நினைவில்லை என்பதனால் மிகவும் ஆச்சரியப்பட்டோம். பிறகு வேறு பல பிழைகளும் இருப்பதை உணர்ந்தோம்.

இதே மாதிரி இதன்பால் கவனம் ஈர்க்கப்பட்ட வேறு ஆய்வாளர் மறுவாசிப்பு செய்வார்கள் என்று எண்ணியிருந்தோம். அதற்கு மாறாக, இதை அப்படியே எடுத்துக் கொள்ளும் வாயப்புகளே ஏற்பட்டுவிட்டதைக் கண்டு, இப்பொழுது நம்முடைய மறுவாசிப்பை இங்குக் கொடுக்கின்றோம்.

இங்கே, 18ஆம் நூற்றாண்டுக் கோப்பு 91:1 ஆம் எண்ணில் வரும் பக்கத்தின் நகலில் இடது பக்கம் தமிழிலும் வலது பக்கம் பிரெஞ்சிலுமாக (தமிழ் வாசகத்தின் கீழ் பகுதி இல்லை) இரு வாசகங்கள் இருக்கின்றன.

---

பதினெட்டாம் நூற்றாண்டில் சாசனத்தைச் 'சாதனம்' என்றே எழுதி வந்ததாகத் தெரிகின்றது. சில 19ஆம் நூற்றாண்டுச் செப்பேடுகளிலும் கூட இதைக் காணலாம்.

தமிழ்ப் பகுதியின் மறுவாசிப்பு பின்வருமாறு : முதலில் வெளியிடப்பட்ட வாசிப்பை இடது பக்கத்திலும், நம்முடைய வாசிப்பை வலது பக்கத்திலும் கொடுத்திருக்கின்றோம்.

| | |
|---|---|
| 1781 ஆம் ஆண்டு நொவம்பர் மீ 25உ செல்லும் பிரபவ வருஷம் | 1781 ஆம் ஆண்டு நொவம்பர் மீ 25உக்கு செல்லும் பிலபவ வருஷம் |
| கார்த்திகை மீ 3 புதுவை மாநகரம் ஊர் சவுத்ரி அவர்கள் முன்பாக | கார்த்திகை மீ 13உ புதுவை மாநகரம் ஊர் சவுத்ரி நயினார் அவர்கள் முன்பாக |
| மரியம்மாளுக் கரிக்கமேடு பள்ளி பொன்னன் பெண் ஜாதி | மரியம்மாளுக்கு கூனிமேடு பள்ளி பொன்னன் பெண்ஜாதி |
| தயிலம்மை கிறைய சாசன முறிக்கொடுத்த படி எண் பெண் பேர் | தயிலம்மை கிறைய சாதனமுறி கொடுத்த படி என் பெண் பேர் |
| கவுதித்தாள் (வ)யது 5 ஜாதி பள்ளிச்சி சேர்ந்தவள் இவள் | கவுதித்தாள் வயது 5 ஜாதி பள்ளிச்சி சேந்தவள் இவளை |
| கொள்வாருளரோ கொள்வாருளரோ வென்று கூறுகையில் | கொள்வாருளரோ கொள்வாருளரோ வென்று கூறுகையில் |
| மரியம்மாள் நானே கொள்வேனென்று பின் கூறுகையில் (யின்) | மரியம்மாள் நானே கொள்வேன் என்று பின் கூறுகையில் யிம்பி |
| றான் சந்துகம்பில் பொருந்தி...... மொழிந்தனாலும் பொமத்தினுதர் | றான் சந்து தம்பில் பொருந்தி ஏ?க மொழிமொழிந்ததனாலும் பொமத்தினுதர் |
| முன்பாக நிச்சயித்த றாசி புதுச்சேரி ரூ.2 இந்த ரூ. இரண்டுக்கு | முன்பாக நிச்சயித்த றாசி புதுச்சேரி ரூ.2 இந்த ரூபாய் இரண்டுக்கு |
| விலையறவித்துப் பொருள்படி கொண்டேன். இதுவே | விலையறவித்துப் பொருள்பத்திக் கொண்டேன். இதுவே |
| விலையாகவும் இதுவே விலை கிறையமாகவும் புத்திர பௌத்திர | விலையாகவும் இதுவே விலை கிறைய மாகவும் புத்திர பௌத்திர |
| பாரம்பரியம்மாள் இந்த சிறை தாமே யனுபவித்துக் கொள்கிறது. | பாரம்பரியமாய் இந்த சிறை தாமே யனுபவித்துக் கொள்கிறது. |
| இந்தப்படி சம்மதித்து மரியம்மாளுக்கே பொன்னன் மேற்படி | இந்தப்படி சம்மதித்து மரியம்மாளுக்கே பொன்னன் மேற்படி |
| பெண்ஜாதி தயிலம்மை ஓம்கிறைய சாதனமுறி கொடுத்தேன். சாக்ஷி | பெண்ஜாதி தயிலம்மை ஓம்கிறைய சாதனமுறி கொடுத்தேன். சாக்ஷி |
| சேர்வைக்கார முத்துநாயக்கர், சீட்டு எழுதின நன்மைக்கு சாவடி ஊர் | சேர்வைக்கார முத்துநாயக்கர், சீட்டு எழுதின நன்மைக்கு சாவடி ஊர் |
| கணக்கு நயினியப்ப பிள்ளை கணக்கு நடராயன் கையெழுத்து. | கணக்கு நயினியப்ப பிள்ளை கணக்கு நடராயன் கையெழுத்து. |

இதனால், கூனிமேட்டில் வாழ்கின்ற பொன்னன் என்ற 'பள்ளி'யின் பெண்ஜாதி தயிலம்மை. கவுதித்தாள் என்கின்ற தன் ஐந்து வயதுப் பெண்ணை விலை கூற, 1781ஆம் ஆண்டு நவம்பர் மா. 25ஆம் தேதியன்று, மரியம்மாள் என்னும் பெண்மணி, புதுவை சவுத்ரி (choultry) நயினார் முன்பாக, முத்து நாயக்கர் என்பவரின் சாட்சியுடன் ரூ.2க்கு கிறையம் செய்து கொள்வதாக நயினியப்ப பிள்ளை, நடராயன் என்ற இரு கணக்கர் கையொப்பமிட்டார்கள் என்பதை அறிகின்றோம்.

இதன் சமூகப் பிரச்னையைப் புரிந்து கொள்வதற்கு, சற்றே அக்காலத்தில் ஏற்பட்டிருந்த வரலாற்றுப் பின்புலத்தை அறிந்து கொள்வது மிகவும் உபயோகமாக இருக்கும்.

1776ஆம் ஆண்டு அமெரிக்க சுதந்திரப் பிரகடனத்துக்குப் பிறகு ஏற்பட்ட போரின்போது, 1778ஆம் ஆண்டில் பிரெஞ்சுக்காரர் அமெரிக்கர் பக்கம் சேர்ந்து, ஆங்கிலேயருக்கு எதிராகப் போர் செய்தனர். அப்போது தென்னிந்தியாவிலும்கூட இரு தரப்பினருக்கும் போர் மூண்டு, 1778 அக்டோபர் மாதக் கடைசியில் ஆங்கிலேயர் புதுச்சேரியைக் கைப்பற்றிக் கொண்டனர்.

அதன்பின், 1783ஆம் ஆண்டில், திப்பு சுல்தானின் ஒப்புதலுடன் பறங்கிப்பேட்டைக் கடற்கரையில் இறங்கிய பிரெஞ்சுக்காரருக்கும் கடலூரில் அதிகாரம் பெற்றிருந்த ஆங்கிலேயருக்கும், வண்டிப்பாளையத்திலே மும்முரமாகப் போர் நிகழ்ந்து கொண்டிருக்கும் சமயம், ஐரோப்பாவில் வெர்சாய் சமாதான ஒப்பந்தம் (Treaty of versailles) கையெழுத்தாகிவிட்டது என்ற செய்தி வந்து, இரு தரத்தாரும் சண்டையை நிறுத்திவிடுகின்றனர். பிறகு, பிரெஞ்சுக் கப்பற்படைத் தலைவர் கப்பிரென் (Suffren) தம் நாட்டுக்குத் திரும்பும் போது, ஐதர்அலி, திப்புசுல்தான் ஆகியோர் ஆங்கிலேயரை எதிர்த்துப் போர் செய்த காலகட்டத்தில், பஞ்சத்திலும் வறுமையிலும் வாடிக் கொண்டிருக்கும் தமிழர்கள் பலரைப் பறங்கிப்பேட்டை, கடலூர் மற்றும் புதுச்சேரி கடற்கரை யொட்டிய இடங்களில் பார்க்கின்றார். எனவே, கைக்கோளர் தொழிலில் ஈடுபட்டிருக்கும் சுமார் 60 பேர்களை, தம்முடைய கப்பலில் அழைத்துச் செல்கின்றார். ஐரோப்பிலுள்ள மால்ட்டா (Malta) தீவில் பஞ்சு நூற்கவும் துணி நெய்யவும் அவர்கள் உபயோகமாக இருப்பார்கள். அது அவர்களுக்கு வாழ்வாதாரமாக இருக்கும், வெப்பமான அந்தத் தீவில் பஞ்சுச்செடிகள் வளர்த்து, அவர்களுடைய உதவியுடன் புதிய தொழில் முறையையும் உருவாக்கலாம் என்பது அவர் எண்ணம்.

முதல் வாசிப்பில் ஏற்பட்டுள்ள எல்லா பிழைகளும் அச்சுப் பிழைகள் என்று கொள்ளமுடியாது எனலாம். அவைகளிற் சில சாதாரணமானவை யென்றாலும் மற்றவை முக்கியம் வாய்ந்தவையாகும்.

மேலே எடுத்துச் சொன்னது போல் அரிக்கமேடு பள்ளிக்குப் பதிலாக கூனிமேடு பள்ளி யென்று கொள்ள வேண்டும்.

1781-1782 ஆண்டை பிலவ வருஷமென்று சுலபமாகக் கணித்திருக்க முடியுமாகையால், இதைப் பிரபவ என்று எடுத்துக் கொண்டதின் காரணம் புரியவில்லை.

மற்ற இடங்களில் வரும் எழுத்துக்களைச் சற்றே கவனமாகப் படித்திருந்தால் சரியாகப் படித்திருக்க முடியும். அவசரமாக எழுதாமல் மறுவாசிப்பு செய்திருந்தாலும் இப்பிழைகளைத் தவிர்த்திருக்கலாம்.

இத்துடன் நம் ஆய்வினால் பெற்ற சில புதிய தெரிவுகளையும் மேலும் எழும் கேள்விகளையும் முன்வைக்கின்றோம்.

அந்தக் கைக்கோளர் பலர் 'பள்ளி-களின் பெயர்களைக் கொண்டிருப்பதையும், ஒருவர் 'தயிலம்மை' என்று சொல்லப்படுவதையும் இங்கு நாம் குறிப்பட வேண்டும். இவரும் மேலே வரும் சாசனத்தில் குறிப்பிடப்படுபவரும் ஒருவரே என்று அறுதியிட்டுக் கூறுவதற்கு போதிய ஆதாரங்கள் இல்லாவிடினும், இந்தப் பெயர் அக்காலத்தில் அதிக புழக்கத்தில் இருந்தது எனக் கொள்ளலாம்.

புதுவை ஆனந்தரங்கப்பிள்ளையைப் பற்றித் தெரிந்தோருக்கு, நயினியப்பிள்ளை பற்றிய குறிப்புகள் வருவதும் தெரிந்திருக்கும். இவர் குருவப்பிள்ளையின் மகனாவார். குருவப்பிள்ளையின் தகப்பனாரின் பெயரும் நயினியப்ப பிள்ளையே. இந்த முதலாம் நயினியப்ப பிள்ளை பிரெஞ்சு கவர்னர் எபேர் (Hebert) போன்றோரிடம் மிகவும் கஷ்டப்பட்டுக் கடைசியில் புதுச்சேரிச் சிறையில் அநியாயமாகக் காவல் வைக்கப்பட்டு இறந்தவர். அவருடைய மகனார் தம் தந்தையின் பெயருக்கு ஏற்பட்ட களங்கத்தைத் துடைப்பதற்கும் நீதி கேட்பதற்கும் சீமை என்று சொல்லப்பட்ட பிரான்சுக்குக் கப்பல் வழி சென்று, அக்கால மகாராஜாவிடமே தம் வாதத்தை எடுத்துச் சொல்லி, நீதி பெற்றுத் திரும்பியவர். அங்கிருந்த சமயம், அவர் பிரெஞ்சு ராஜகுமாரனை ஞானத்தந்தையாகக் கொண்டு கிறித்துவ மதத்தைத் தழுவியவர்.

சாசனத்தில் வரும் நயினியப்பபிள்ளை அப்படிப்பட்ட குருவப்பிள்ளையின் பிள்ளையாக, அதாவது முதல் நயினியப்பபிள்ளையின் பேரனாக இருப்பின், இவரை இரண்டாம் நயினியப்பபிள்ளை யென்று கொள்ளலாம். குருவப்பிள்ளை கடைசி காலத்தில், மிகவும் ஏழையாக யிருந்து வைப்பாட்டி வைத்துக் கொண்டு வாழ்ந்து மறைந்ததால், அவருடைய வைப்பாட்டி வழி வந்த பிள்ளையான இரண்டாம் நயினியப்ப பிள்ளை இந்த 'கணக்கு' உத்தியோகத்தில் இருந்திருக்கலாம் என்று நினைக்க இடமுள்ளது. இது தற்சமயம் நமது யூகமேயாதலால், மேலும் சில ஆதாரங்கள் கிடைத்தால் மட்டுமே இந்தக் குடும்பத் தொடர்புத் தரவை உறுதி செய்யமுடியும்.

'புதுவை சவுத்ரி நயினார்' என்ற சொற்றொடர் நாட்குறிப்பு எழுதியுள்ள இரண்டாம் வீராநாய்க்கரின் தந்தையும் பாட்டனாரும்

முப்பட்டனாரும் இரண்டாம் நயினாராக (அதாவது, தமிழரின் நீதிக்குக் காவல்துறைத் தலைவரான நயினாருக்கு அடுத்தவராக) இருந்தவர்கள் என்பதையும் நினைவூட்டுகின்றது. 1781ஆம் ஆண்டில் தந்தை ராஜகோபால் நாயக்கர் இரண்டாம் நயினாராக இருந்தார்.

'தயிலம்மை' என்ற 'பள்ளிச்சி', 'பெண்ஜாதி' என்றெல்லாம் வருவதை நோக்குங்கால் சில தரவுகளும் கிடைக்கின்றன.

'பெண்ஜாதி' என்ற சொல்லில் வரும் 'ஜாதி' என்பதன் பொருளை நாம் இப்பொழுது கொள்ளும் பொருளோடு ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். மேலும், 'ஜாதி' என்ற சொல் வரும்போதெல்லாம் உயர்ந்த ஜாதி, தாழ்ந்த ஜாதி, ஜாதியற்றவர் என்ற சொற்றொடர்ப் பொருளில் மட்டும் இப்பொழுது உபயோகிக்கப்பட்டு வருகின்றது. ஆனந்தரங்கப்பிள்ளை நாட்குறிப்பிலும் இரண்டாம் வீராநாய்க்கர் நாட்குறிப்பிலும், 'பிரெஞ்சு ஜாதி', 'புடுத்துகீசு ஜாதி' என்ற சொற்றொடர்களில் வரும் 'ஜாதி' என்ற சொல்லை nation என்ற பொருளில் அவர்கள் உபயோகித்திருக்கின்றனர். பாரதியார், வேறு சில பழைய சுவடிகளில் இருப்பது மாதிரி, அதே சொல்லை உபயோகித்து, 'பறவை ஜாதி' என்று எழுதும்போது, அதற்கு species என்ற பொருள் கொள்கின்றார். இப்படியாக ஒரே சொல் காலம் மாற மாற வேறு பொருள் கொள்வது மொழியியலில் தெரிந்ததெனினும், நம் நாட்டுச் சமுதாயத்துக்கு முக்கியமான இந்த சொல்லின் பொருள் மாறுவது குறிப்பிடத் தக்கதாகும்.

நம்முடைய மறுவாசிப்பிலும் யூகங்களிலும் சில பிழைகள் இருக்கக்கூடும். சில கேள்விகளும் எழுப்பட்டிருக்கின்றன. ஆகவே, எதிர்காலத்தில் மற்றவரும் மேலும் சிறப்பான முறையில் வாசித்து ஆய்வுக்கு உரம் சேர்க்க வேண்டுகின்றோம்.

# 45. வேந்தன்பட்டி ஊரணிக் கல்வெட்டு

எ.என்.செல்வகணபதி, ராசிபுரம்

**இடம்** : புதுக்கோட்டை மாவட்டம், திருமயம் வட்டம், வேந்தன்பட்டி கிராமத்தில் உள்ள மார்ப்படைச்சான் ஊரணியின் மேல்கரையில் உள்ள கல்.

**காலம்** : 1.7.1919

**செய்தி** : கல்வெட்டு இருக்குமிடத்தில் சுமார் ஐந்து ஏக்கர் நிலப்பரப்பில் குளம் வெட்டப்பட்டுள்ளது. கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு என்ற நான்கு பகுதிகளிலும் இறங்கி ஏறும் படிக்கட்டுகள் உள்ளன. அதற்குள் கிணறு ஒன்றும் உள்ளது. இக்குளம் தோண்டுவதற்காக பெரிய கருபஞ்செட்டியார் வகையறா தச்சு செய்ததைக் கூறுகிறது.

1. ஓம்
2. பெரி. அரு.
3. பெரிய கருப்பஞ் செ
4. டடி யார் வகையறா
5. கலி ௲ 50 வசித்தா
6. ர்தி ௲ வைகாசி மீ
7. 19வ ரூ 1.7.1919
8. ஞாயிற்றுக்கிழமை
9. காலை ஷ 5 க்ஷ மேல்
10. 7இகுள் மிதுன லக்கி
11. னதில் தச்சு செய்தது
12. சுகில இ அற்பசி மீ 3
13. புண்யாவாசனம்
14. செய்தது
15. யுவ இ ஆவணி மீ
16. ம உ திங்கள் கிழமை
17. காலை ஊஉகுமேல்
18. யகுள்
19. துலாலக்னத்தில்
20. தடாகம் பிரதி
21. ஷ்டை செய்தது
22. இந்த ஊரணி
23. தண்ணீரின்றி வற்றிய
24. காலத்தில் தூர்
25. வாரச் செய்து
26. பிராமணாளைக்
27. கொண்டு புண்யாவாசனம்
28. செய்து தான்
29. ஜெல மோக்க
30. வேண்டியது

# 46. ஓலை ஆவணங்கள்

த.த.தவசிமுத்து, ஆறுமுகநேரி

46 : 1

**இடம்** : தூத்துக்குடி மாவட்டம், ஸ்ரீவைகுண்டம் வட்டம் மீறான்குளம்.

**காலம்** : கி.பி. 1899 ஆடி மாதம் 13 ஆம் நாள்.

**செய்தி** : 2.5 × 35 செ.மீ. அளவுள்ள ஓலையில் இருபுறமும் எழுதப்பட்டு உள்ளது. ஓலையில் ஆவணத்தின் பெயர் 'கைக்கணக்கு' என்று காணப்படுகிறது. கடையனோடையைச் சேர்ந்த காலப்பெருமாள் சாம்பான் என்பவர் மீறான்குளம் ஏசுவடியான் நாடான் என்பவரிடம் ரூ.3 கடனாகப் பெற்று 1899 ஆடி முதல் 1900 தை மாதம் முடிய ஒரு ரூபாய்க்கு அரை ரூபாய் வட்டி தருவதாகவும் தை மாதத்தில் தரவில்லையெனில் அதன்பிறகு வட்டிக்குவட்டி கூட்டி ரொக்கம் முதலுடன் தருவதாகவும் உறுதி கூறி ஓலை எழுதிக் கொடுத்துள்ளார்.

**முன்பக்கம்**

1. 1074 ஹு ஆடி மீ 13 உ ஸ்ரீவைகுண்டம் தாலுகா மீறான் குளத்திலிருக்கும் சுடலைமுத்து நாடான் மகன் பேசுவடியா நாடானுக்கு
2. மேற்படி யூரிலிருக்கும் முருகன் சாம்பான்மகன் கடையனோடை காலபெருமாள் சாம்பான் யெழுதிக் கொடுத்த கைக்கணக்கு
3. யென்னவென்றால் நாளது தேதியில் தங்களிடத்தில் கடனாக வாங்கினது ரூ.3 இந்த ரூபாய் மூணுக்கும் ரூ 1 வட்டி ரூ.½ வீதம்
4. வட்டி கூட்டி 1075 ஹு தை மாதம் 30 உ குடுத்து போதுவேனாகவும் மேற்படி வாயிதாவில் குடுக்க தவ்றினால் மேல்கண்ட

**பின்பக்கம்**

5. வட்டியுடன் வட்டிக்கு வட்டி சகிதம் தங்களுக்கு வேண்டும் போது றொக்கம் குடுத்து போந்துவேனாகவும் இந்தபடிக்கு காலபெருமாள்
6. ............ இந்த கீறல்
7. இந்த கைகணக்கு யெளுதினேன் சி.வேதநாயகன் பிள்ளை.

46 : 2

**இடம்** : தூத்துக்குடி மாவட்டம், திருச்செந்தூர் வட்டம், பெரியகுளம்.

**காலம்** : கி.பி. 1922 மாசி மாதம் 19 ஆம் நாள்.

**செய்தி** : 3.5 செ.மீ. × 30 செ.மீ. அளவுள்ள ஓலையில் இருபுறமும் எழுதப்பட்டுள்ளது. குப்பான்பிள்ளை என்பவர் (கணக்கு அலுவலர்) ஊர் புறம்போக்கில் உள்ள நான்கு பனைமரங்களுக்கு ஏசுவடியான் நாடானிடம் தீர்வையாக மூன்று அணா (3/16 ரூபாய்) பெற்றுக் கொண்ட ரசீது.

**முன்பக்கம்**

1. 1098 ம் ௵ மாசி மாதம் 19 தேதி திருச்செந்தூர் தாலுகா மீறான்குளம் சறகம் பெருமாள் குள
2. த்திலிருக்கும் திருமலையப்பிள்ளை யவர்கள் குமாறர் குப்பான் பிள்ளையேன் மேற்படி தாலுகா மீறான்குளம் கி
3, றாமத்திலிருக்கும் காலபெருமாள் நாடானென்ற ஏஸ்வடியா நாடான் மகன் யேஸ்வடியா நாடனு
4. க்கு 45ம் நிம்பர் புறம்போக்கில் நிற்கிற பனை 4க்கு தீருவை பனப்பற்று ரசீது யென்ன வென்றால்
5. நாளது தேதியில் தீற்வை வகைக்கி வரவு அணா மூணு இந்த அணா மூன்றுக்கும் குப்பான்பிள்ளை
6. - மு.சிவசுப்பிறமணிய பிள்ளை

**பின்பக்கம்**

7. இது யெழுதியது சிதம்பர குற்றலாம் பிள்ளை சிவசுப்பிறமணிய பிள்ளையவர்கள் குமாறர்
8. பெருமாள் குளம்.

**46 : 3**

**இடம்** : தூத்துக்குடி மாவட்டம், சாத்தான்குளம், வில்லிசைப்புலவர் சுப்பிரமணியத்திடம் உள்ளது.

**காலம்** : கி.பி. 1910 மாசி மாதம் 32 ஆம் நாள்.

**செய்தி** : 3.5 செ.மீ. × 30 செ.மீ. அளவுள்ள ஓலையில் ஒரு பக்கம் ஒரு பகுதியில் மட்டும் எழுதப்பட்டுள்ளது. ஓலையின் மறு பகுதி ஓரம் சிதைந்துள்ளது. இட்டமொழியைச் சேர்ந்த பாட்டையா என்பவர் பெ.வெள்ளையா நாடார் மனைவியிடம் 1 கழஞ்சு எடையுள்ள தங்க மோதிரம் ரூ.4க்கு ஈடாக வைத்து மாதம் ஒன்றுக்கு வீசம் (1/16) ரூபாய் வட்டி கொடுத்துள்ளார்.

1. 1086 ௵ மாசி *மீ* 32 உ யிட்ட முளி
2. பாட்டய்யா பெ.வெள்ளையா நாடார் மனைவி வசம்
3. தங்க வட்ட மோதிரம் களஞ்சி 1க்கு யீடாக
4. மேற்படியாள் வசம் ரூ.4 யிந்த ரூபாய் நாலு
5. க்கும் *மீ* 1க்கு வட்டி ரூ.1/16 — 4.

# 47. செங்கடல் துறைமுகப்பட்டினத்தில் தமிழ்பிராமி பானைப் பொறிப்பு கண்டுபிடிப்பு

எகிப்துநாட்டில் செங்கடலை ஒட்டியுள்ளது குசேர்-அல்-காதிம் (Quseir-al-Qadim). இங்கு அண்மையில் பிரிட்டீஷ் தொல்லியல் ஆய்வாளர்கள் நடத்திய அகழாய்வில் தமிழ்பிராமி எழுத்துப் பொறித்த உடைந்துபோன பானையின் பகுதி ஒன்று கண்டறியப்பட்டுள்ளது. ஏற்கனவே இவ்விடத்தில் கி.பி. முதல் நூற்றாண்டைச் சார்ந்த தமிழ்பிராமி எழுத்து பொறிப்புள்ள பானையோடுகள் இரண்டு கிடைத்துள்ளன. தற்போது இங்கு கிடைத்த சிவப்பு மட்கலத்தில் ஒரு சொல் இரு முறை பொறிக்கப்பட்டுள்ளது. இலண்டன் அருங்காட்சியகத்தினைச் சார்ந்த ரோபர்டா தோம்பர் (Roberta Tomber) இப்பானை இந்தியநாட்டைச் சார்ந்தது எனக் கண்டறிந்து தமிழ்ப் பல்கலைக்கழக வீ.செல்வகுமார் மற்றும் ஐராவதம் மகாதேவன் ஆகியோருக்கு அனுப்பி வைத்தார்.

Pa ṉai o ṟi     Pa ṉai o ṟi

ப னை ஒ றி     ப னை ஒ றி









இப்பானையோட்டுப் பொறிப்பை ஆய்வுசெய்த ஐராவதம் மகாதேவன் இதனைப் 'பானை ஒறி' என்று படித்து உறியில் தொங்கவிடப்பட்ட பானை என்று பொருள் கூறியுள்ளார். 'ஒறி' உறி என்பதன் வேறுவடிவமாகக் கொண்டுள்ளார். இந்தப் பானைப் பொறிப்பு கி.மு. முதல் நூற்றாண்டைச் சார்ந்தது என்றும் கூறியுள்ளார். ஆனால் இப்பானைப் பொறிப்பினைப் 'பனை ஒறி' என்று வாசிக்கலாம். 'பனை ஓறி' என்பவன் பெயராக இதனைக் கொள்ள வேண்டும். இப்பானையோட்டுப் பொறிப்பில் முதல் எழுத்தாக வரும் 'ப' என்ற எழுத்தினை 'பா' என்று நெடிலாக படிக்க முடியாது. 'ப' வின் பக்கவாட்டில் நெடிலைக் குறிக்கும் பக்கக்கோடு இல்லை. எனவே 'பனை' என்றே இப்பொறிப்பின் முதல் பகுதியைப் படிக்க வேண்டும். பிற்பகுதியில் வரும் 'ஒறி' என்பதை 'ஓறி' என்றும் படிக்கலாம். எப்படிப் படித்தாலும் இது ஓர் ஆட்பெயரைக் குறிக்கிறது எனலாம். ஏற்கனவே குசேர்-அல்-காதீம், பெரனிக்கே போன்ற செங்கடல் துறைமுகங்களில் கிடைத்த தமிழ்பிராமி பொறிப்புகளில் ஆட்பெயரே குறிக்கப்படுகிறது. அம்முறையில் 'பனை ஒறி' என்பவனுக்குரிய சேமிப்பு மட்கலன் என்று இதற்குப் பொருள் கூறலாம். சங்க இலக்கியம் கூறும் ஓரியின் பெயரை இச்சொல் நினைவூட்டுகிறது.

யவனரோடு தமிழ் வணிகர்கள் கடல்வாணிகத்தில் ஈடுபட்டனர் என்ற சங்க இலக்கியச் செய்தியைப் இப்புதிய கண்டுபிடிப்பும் ஏற்கனவே குசேர்-அல்-காதீம், பெரனிக்கே முதலிய இடங்களில் கண்டறியப்பட்ட தமிழ் பிராமி பானைப் பொறிப்புகளும் உறுதிப்படுத்துகின்றன.

**வெ.வேதாசலம், மதுரை**

# 48. பட்டணம் அகழாய்வு - 2007

வீ.செல்வகுமார், தஞ்சாவூர்
பி.ஜெ.செரியன், கேரளா
கே.பி.ஷாஜன், கேரளா

கேரள மாநிலம் ஏர்ணாகுளம் மாவட்டத்தின் வடக்கே பரவூருக்கு அருகில் பட்டணம் என்ற ஊரில் காணப்படும் வாழ்விடமே சங்க, கிரேக்க மற்றும் ரோமானிய இலக்கியங்களில் குறிப்பிடப்படும் முசிறி எனப்படும் சங்க காலத் துறைமுகமாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது. கேரள வரலாற்று ஆய்வுக் கழகம் இங்கு 2007இல் நடத்திய அகழாய்வில் பல முக்கிய தடயங்களை வெளிக் கொண்டு வந்தது.

ஊரின் வடகிழக்குப் பகுதியில் நான்கு அகழாய்வுக் குழிகளும், ஒரு சோதனைக் குழியும் சுமார் 123 சதுர மீ பரப்பளவில் தோண்டப்பட்டன. இங்கு ஐந்து பண்பாட்டு நிலைகள் காணப்பட்டன.

முதல் காலகட்ட பண்பாடு இரும்புக்காலம் வரலாற்று ஆரம்ப காலத்தைச் சேர்ந்ததாகும். இங்கு கருப்பு-சிவப்பு மற்றும் சிவப்பு நிற பானை ஓடுகளும், இரும்புப் பொருட்களும் காணப்படுகின்றன. இக்காலகட்டத்தில் செங்கற் கட்டிடங்கள் பயன்படுத்தப்படவில்லை. பொருண்மை முடுக்க நிறநிரல் அளவையியல் கார்பன் காலக்கணிப்பு முறை (Accelarator Mass Spectormetry C - 14) மூலம் கிடைத்த இரண்டு கால அளவுகள் மூலம் இப்பண்பாடு கி.மு.500க்கு முன்பு தொடங்கியிருக்கலாம் எனவும், கிடைக்கும் ரோமானிய பானை ஓடுகளின் அடிப்படையில் இது கி.மு. இரண்டாம் நூற்றாண்டு வரை நிலவியிருக்கலாம் எனவும் கருதலாம்.

இரண்டாம் காலகட்டப் பண்பாடு வரலாற்றுக் காலத்தின் தொடக்கத்தைச் சேர்ந்ததாகும். இதில் சொரசொரப்பான சிவப்பு நிற, ரௌலட்டட் பானை ஓடுகள், செங்கற் கட்டிடங்கள், சுடுமண்ணால் செய்யப்பட்ட தரைப்பகுதி, சுடுமண் உறைகிணறு, மூன்று வடிகால்கள் (channels) உள்ள கூரை ஓடுகள், கல் மற்றும் கண்ணாடி மணிகள், இரும்பு ஆணிகள், செம்பு மற்றும் ஈயப் பொருட்கள் போன்றவை காணப்படுகின்றன. மேலும் இங்கு கண்டுபிடிக்கப்பட்ட படகு துறை, ஒற்றைமரப் படகு (dug out canoe), மரத்தூண்கள் இக்காலத்தைச் சேர்ந்தவையே. இக்காலம் கி.மு. இரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து கி.பி. நான்காம் நூற்றாண்டு வரை நிலவியிருக்கலாம் எனக்கருதலாம்.

மூன்றாம் காலகட்டப் பண்பாடு இடைக் காலத்தைச் சேர்ந்ததாகும். இதில் நீல நிறக் கண்ணாடிக்கலவை பூசப்பட்ட மேற்கு ஆசியாவைச் சார்ந்த பானை வகைகளும், கண்ணாடி மணிகளும் கிடைக்கின்றன. இது கி.மு. ஐந்தாம் நூற்றாண்டு முதல் பத்தாம் நூற்றாண்டு வரை நிலவியிருக்கலாம் எனக் கருதலாம்.

நான்காம் காலகட்டப் பண்பாடு நவீன காலத்தைச் சேர்ந்ததாகும். இதில் சீனாவைச் சேர்ந்த நீல நிற ஓவியம் தீட்டப்பட்ட பீங்கான் பானை வகைகள் கிடைக்கின்றன. மேலும் 19-ம் நூற்றாண்டைச் சேர்ந்த கொச்சிப்புத்தன் எனப்படும் வெள்ளிக்காசும் முன்பு இங்கு கிடைத்தது குறிப்பிடத்தக்கது. இது கி.பி. பதினைந்தாம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டது.

இங்கு கி.பி. பத்தாம் நூற்றாண்டு முதல் பதினைந்தாம் நூற்றாண்டு வரை மக்கள் வாழ்ந்ததற்கான தடயங்கள் கிடைக்கவில்லை. இக்கால கட்டத்தில் பெரியார் ஆற்றின் வடகரையில் அமைந்துள்ள கொடுங்களூர் முக்கியத்துவம் பெற்றிருந்ததாகத் தெரிகிறது.

இந்த அகழாய்வில் கிடைத்த மிக முக்கியமான சான்று நன்கு வடிவமைக்கப்பட்ட படகுத் துறையாகும். இது சுமார் 2 மீ உயரமுடையது. இதில் தண்ணீரை ஒட்டிய விளிம்பில் செங்கல்லாலான சுமார் 35 செ.மீ. அகலமுள்ள சுவர் அரண்போல அமைந்துள்ளது. இச்சுவருக்கு பின் உள்ள பகுதி நன்கு பொடியாக்கப்பட்ட செம்பாறாங்கல் மற்றும் களிமண் கலவை கொண்டு செய்யப்பட்டுள்ளது. இந்த படகுத் துறையின் மேலே செங்கற்களாலான தளம் அமைக்கப்பட்டிருப்பது போலத் தோன்றுகிறது. இப்படகுத் துறையை ஒட்டி படகு கட்டுவதற்காகப் பயன்படுத்தப்பட்ட தேக்கு, மற்றும் பல மரங்களால் செய்யப்பட்ட தூண்கள் நடப்பட்டுள்ளன. செங்கற் சுவருக்கு அப்பால் உள்ள பகுதி தண்ணீர் மட்டத்திற்கு கீழ் உள்ள பகுதியாகும். இதன் விளைவாக மரம், இலை போன்ற உயிருள்ள பொருட்கள் நன்கு பாதுகாக்கப்பட்ட நிலையில் கிடைத்துள்ளன.

படகுத் துறையை அடுத்து தண்ணீர் மட்டத்திற்கு கீழ் உள்ள மண் படிவுகளில் சுமார் 6 மீ. நீளம், அரை மீட்டர் அகலமுள்ள ஒற்றை மரத்தில் குடைந்து உருவாக்கப்பட்ட படகின் அடிப்பகுதி கண்டுபிடிக்கப்பட்டது. இதில் சில துளைகளும், காலப்போக்கில் செப்பனிடப் பயன்பட்ட மரத்துண்டின் பகுதிகளும் உள்ளன. பொருண்மை முடக்க நிறநிரல் அளவையில் கரிப்பகுப்பாய்வின் மூலம் இப்படகு கி.மு. முதல் நூற்றாண்டைச் சேர்ந்தது எனக் கணித்துள்ளனர்.

அகழாய்வில் 6×4 மீ. அளவுக்கும் அதிகமான பரப்பளவுள்ள 36×16×4.5 செ.மீ. அளவுள்ள செங்கற்களால் கட்டப்பட்ட ஒரு கட்டிடத்தின் அடிப்பகுதி கிடைத்துள்ளது. இக்கட்டிடத்தின் மேற்பகுதியில் பல குழிகள் காணப்பட்டன. இவை மரத்தூண்கள் நடுவதற்காகப் பயன்படுத்தப் பட்டிருக்கலாம். இக்கட்டிடம் படகுதுறையை அடுத்து காணப்படுகிறது. இது ஒரு தானியக்கிடங்காகப் பயன்படுத்தப்பட்டிருக்கலாம்.

ஆம்போரா எனப்படும் மதுச்சாடி, அரிட்டைன் (Terra sigillata), ரோமானிய கண்ணாடிப் பாத்திரங்கள், பச்சை மற்றும் நீல நிற கண்ணாடிக் கலவை பூசப்பட்ட (Parthian/Sassanian/Egyptian(?) Green glazed pottery) மேற்கு ஆசியாவைச் சார்ந்த பானை வகைகள் இங்கு கிடைத்தன.

செம்பாலான இரண்டு சங்ககாலச் சேரர் காசுகள் இங்கு கிடைத்துள்ளன. இக்காசுகளின் ஒருபக்கத்தில் யானை மற்றும் மங்கலச்

சின்னங்களும் மறுபக்கத்தில் வில்லும் அம்பும் மற்றும் அங்குசமும் காணப்படுகின்றன.

இக்காலத்தில் இங்கு பளிங்கு (quartz crystal), கார்னீலியன் (Carnelian), போன்ற கற்களைப் பயன்படுத்தி புடைப்பு செதுக்குருவம் உள்ள பதக்கம் (cameo), மோதிரக்கல், மணிகள் செய்ததற்கான தடயங்கள் கிடைத்துள்ளன. பெரில் (beryl), சோப்புக்கல் (soap stone) ஆகிய கற்களாலான மணிகளும் செய்யப்பட்டுள்ளன. பட்டணம் அகழாய்வு அரிக்கமேடு, அழகன்குளம் ஆகியவற்றை ஒத்த ஒரு சிறந்த சங்ககாலத் துறைமுகப் பட்டணமாக இருந்தது என்பதைப் புலப்படுத்துகின்றது.





சுடுமண் உறைகிணறு



படகுத் துறை

# 49. ஆனைக்கரை (கேரளா) அகழாய்வு

கேரள மாநிலம் பாலக்காடு மாவட்டத்தில் பாரதப்புழா (பொன்னானி) ஆற்றின் கரையில் உள்ள ஆனைக்கரை என்ற இடத்தில் பெருங்கற்கால ஈமச்சின்னங்கள் காணப்படுகின்றன. இங்கு கோட்டயம் மகாத்மாகாந்தி பல்கலைக்கழகத்தால் 2008 மே மாதம் ஒரு குடைக்கல்லும், ஒரு கல்வட்டமும் அகழாய்வு செய்யப்பட்டன. நான்கு பெரிய செம்பாறாங்கல்லில் செதுக்கப்பட்டு அமைக்கப்பட்ட குடைக்கல்லின் கீழ் இரும்புப் பொருட்களும், சிவப்பு நிற பானைகளும், எலும்புத் துண்டுகளும் கிடைத்தன. கல்வட்டத்தில் மூன்று தாழிகள் எலும்பு மற்றும் ஈமப் பொருட்கள் காணப்பட்டன. இப்பெருங்கற்கால சின்னங்களுக்கருகில் மண்படிவுகளில் கிடைத்த பானை ஓடுகள் இச்சின்னங்களுக்கு அடுத்துள்ள பகுதிகளில் மக்கள் வாழ்ந்திருக்கலாம் என்பதைப் புலப்படுத்துகின்றன. மேலும் பெருங்கற்காலச் சின்னங்களுக்குக் கீழே காணப்பட்ட செம்மண் படிவுகளில் பளிங்குக் கற்களால் செய்யப்பட்ட நுண்கற்கருவிகள் காணப்பட்டன. இவை நுண்கற்காலத்தைச் சேர்ந்தவையாகும். இதுபோன்ற நுண்கற்காலக் கருவிகள் தென்தமிழ் நாட்டிலும் கேரளாவில் கொல்லங்கோடு போன்ற இடங்களிலும் கிடைத்துள்ளன.





Three chambered Stone circle


Urns after scooping


Spear head with bone

Arrow head


Potteries, Iron lamp and tripod


Microliths

வீ.செல்வகுமார், தஞ்சை.

# 50. திண்டுக்கல் மாவட்டத்தில் குடைவரைக் கோயில்கள் கண்டுபிடிப்பு

வி.ப.யதீஸ்குமார், புதுச்சேரி

திண்டுக்கல் மாவட்டத்தில் ஒட்டன்சத்திரத்திலிருந்து தாராபுரம் செல்லும் வழியில் கள்ளிமந்தையும் என்னும் ஊர் அமைந்துள்ளது. இவ்வூரிலிருந்து வடமேற்கே ஐந்து கி.மீ. தொலைவில் கூந்தம்பூண்டிவலசு உள்ளது. இவ்வூரில் உள்ள பெருமாள்கோவில் மலையின் வடக்கு மற்றும் தெற்குப் பகுதியில் முற்றுப்பெறாத மூன்று குடைவரைகள் காணப்படுகின்றன.

**முதல் குடைவரை**

இக்குடைவரைகளில் இரண்டு வடமேற்கு நோக்கிய நிலையில் உள்ளன. வலப்பக்கம் உள்ள குடைவரை நீள்சதுர அமைப்பில் குடையப்பட்டுள்ளது. சிறிய முன்முகப்புடன் மண்டபத்தைக் குடைய முற்பட்டு குடைவரைப் பணி முற்றுப் பெறாமல் நிறுத்தப்பட்டுள்ளது. இம்மண்டபம் ஐந்து அங்கங்களாகப் பிரிக்கும் வகையில் குடைவிக்கும் முயற்சியும் மேற்கொள்ளப்பட்டுள்ளது. பக்கச் சுவர்களில் அரைத்தூண்கள் இரண்டு அமைக்கவும் இரு வாயிற்காப்போர் சிற்பங்களை அமைப்பதற்கான இடம் குழிவு செய்யவும் இக்குடைவரையில் முயற்சி செய்யப்பட்டுள்ளது. இக்குடைவரை தரைமட்டத்திலிருந்து இரண்டடி உயரத்தில் இருப்பதால் குடைவரை மீது ஏறுவதற்கு வசதியாக குடைவரையின் நடுப்பகுதியில் கைப்பிடியுடன் கூடிய படிக்கட்டுக்கள் இருபக்கங்களிலும் செல்வதற்கு ஏற்றவாறு எடுக்கப்பட்டுள்ளன. கைப்பிடி அரைவட்ட வடிவில் குடையப்பட்டுள்ளது.

**இரண்டாவது குடைவரை**

இக்குடைவரை முதல் குடைவரைக்கு அருகிலேயே குடைவதற்காக நீள் சதுரமாக வெட்டப்பட்டுள்ளது. நீள் சதுர அமைப்பில் சதுரம்சதுரமாக பாறைகள் குடையப்பட்டு குடைவரைப் பணி நிறுத்தப்பட்டுள்ளது. இக்குடைவரையின் அமைப்பு முதல் குடைவரையின் அமைப்பை ஒத்து அமைந்துள்ளது.

**மூன்றாவது குடைவரை**

மூன்றாவது குடைவரை பெருமாள் மலையின் தெற்குப்பகுதியில் உள்ளது. இக்குடைவரை தூண்கள் வெட்டுவதற்கு சிறிய அளவில் குடைந்த நிலையில் உள்ளது.

இக்குடைவரைகளின் காலம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டாக இருக்கலாம். முற்றுப்பெறாத இக்குடைவரை அருகில் கல்வெட்டுக்கள் எவையும் கிடைக்கவில்லை. எனவே திட்டவட்டமான காலத்தைக் கணிக்க இயலவில்லை.

தமிழ்நாட்டில் பாண்டியர்களும், பல்லவர்களும் குடைவரைக் கலைக்குப் பேராதரவு நல்கியவர்கள். இதுவரை கொங்குநாட்டின் தென்பகுதியில் குடைவரைகள் எவையும் கண்டுபிடிக்கப்படவில்லை. கொங்கு நாட்டில் நாமக்கல், கருவூர் அருகில் உள்ள தான்தோன்றி மலை ஆகிய இரண்டு இடங்களில் மட்டுமே குடைவரைகள் உள்ளன.

இப்பொழுது கண்டுபிடிக்கப்பட்ட முற்றுப்பெறாத குடைவரைகளின் பணி எக்காரணம் கொண்டு நிறுத்தப்பட்டது என்பதை அறிய இயலவில்லை. இருப்பினும் இக்குடைவரைகளின் அமைப்பை நோக்கும் பொழுது இக்குடைவரைகளை மிக நேர்த்தியாகவும், குடைவரை மண்டபத்தை மிகப் பெரிய அளவிலும் அமைப்பதற்கான திட்டம் இருந்துள்ளது. மண்டபத்தின் உள்பகுதியில் தமிழகத்தின் பிற குடைவரைகளில் காணப்படும் கருவறையைப் போன்று குடைய திட்டம் இருந்திருக்க வேண்டும்.

இவ்வூருக்கு அருகில் உள்ள கப்பலூர்பட்டியில் கொங்குச் சேரர் கோக்கண்டன் மாந்தரன் கல்வெட்டு உள்ளது. இப்பகுதி ஒன்பதாம் நூற்றாண்டில் கொங்கு சேரர்களின் கீழ் இருந்துள்ளது. கோக்கண்டன் இரவி, கோக்கண்டன் மாந்தரன் போன்ற கொங்குச் சேரர்களின் காலத்தில் இப்பணி மேற்கொள்ளப்பட்டிருக்க வேண்டும்.

மேலும் கொங்கு நாட்டில் உள்ள நாமக்கல், கருவூர் அருகிலுள்ள தான்தோன்றிமலைக் குடைவரைகளின் அமைப்பை நோக்கும் போது புதிதாக கண்டுபிடிக்கப்பட்ட முற்றுப்பெறாத குடைவரைகள் மூன்றும் மிகப்பெரிய அளவில் குடைவதற்குத் திட்டமிடப்பட்டுள்ளதை அறியமுடிகிறது. தான்தோன்றி மலைக்குடைவரையும் முற்றுபெறாத குடைவரையாகும். இக்குடைவரையிலும் நாமக்கல் குடைவரைகளிலும் குறைந்த அளவு தூண்களே உள்ளன. ஆனால் இப்புதிய குடைவரைகளில் ஐந்து தூண்கள் அமைக்க முயற்சி நடந்துள்ளது. இதுபோன்று ஐந்து தூண் அமைப்புடைய குடைவரைகள் தொண்டை மண்டலத்தில் பல்லவர் குடைவரைகளில் பல்லாவரம், மாமண்டூர், மாமல்லை ஆகிய இடங்களில் உள்ளன.

தமிழ்நாட்டில் முற்றுப்பெறாத குடைவரைகள் பல காணப்படுகின்றன. மாமல்லபுரம், புதுக்கோட்டை மாவட்டத்தில் நார்த்தாமலை மற்றும் வந்தவாசி அருகில் திரைக்கோயில் ஆகிய இடங்களில் உள்ளன.

(களஆய்வின் போது தமிழ்ப்பல்கலைக்கழக கல்வெட்டியல் மற்றும் தொல்லியல்துறை பேராசிரியர் ந.அதியமான், இந்தியத் தொல்லியல் துறை கல்வெட்டாய்வாளர் முனைவர் சு.இராசவேலு மற்றும் தமிழக தொல்லியல்துறை கல்வெட்டாய்வாளர் முனைவர் வெ.வேதாசலம் ஆகியோர் குடைவரைகளை நேரடியாகப் பார்த்து ஆய்வு செய்தனர்.)






குடைவரையின் முகப்புத்தோற்ற வரைபடம்



குடைவரையின் குறுக்கு வெட்டு வரைபடம்



# 51. அத்தாளநல்லூர் முற்காலப் பாண்டியர் துவாரபால ஆயுத புருஷர்களின் சிற்பங்கள்

சு.கண்ணன், அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

திருநெல்வேலி மாவட்டத்தின் அம்பாசமுத்திரம் வட்டத்தில் அண்மையில் மேற்கொள்ளப்பட்ட கோயில் களஆய்வின்போது இவ்வட்டத்திலுள்ள அத்தாளநல்லூர் கஜேந்திர வரதப்பெருமாள் கோயிலின் மூலவர் சன்னதியின் மகாமண்டப வாயிலருகே முற்காலப் பாண்டியர்களின் காலத்தைச் சார்ந்த இரண்டு துவாரபாலர்களின் சிற்பங்கள் (கி.பி. 9ஆம் நூற்றாண்டு) கண்டறியப்பட்டன. அடிப்படையில் இச்சிற்பங்கள் துவாரபாலர் உருவங்களாகப் படைக்கப்பட்டிருந்தாலும் இவற்றின் மேற்பகுதியில் பொறிக்கப்பட்டுள்ள விஷ்ணுவின் ஆயுதங்களான சக்கரமும் சங்கும் இவற்றை ஆயுத புருஷர்களாகவும் சித்தரிக்கின்றன. பொதுவாக பழந்தமிழ் இலக்கியங்களில் சுவை நய பாங்கிற்காக இருபொருட் சிலேடை (double entendre) என்னும் இலக்கிய உத்தி கையாளப்பட்டுள்ளது. பின்னர் இவ்வகை உத்தி சமயம் மற்றும் இலக்கியம் சார்ந்த கலைப்படைப்புகளிலும் இடம் பெற்றது.[1] அவ்வகையில் சிற்பக்கலைஞர்கள் தாம் உருவாக்கிய படைப்புகளில் இருபொருள் உணர்த்தும் சிற்பங்களைப் படைத்தனர் என்பதற்கு இத்துவாரபால - ஆயுத புருஷர்களின் சிற்பங்கள் சான்றாக விளங்குகின்றன.

அத்தாளநல்லூர் கஜேந்திர வரதப்பெருமாள் கோயிலின் மகாமண்டபத்தில் தற்சமயம் உதிரியாக வைக்கப்பட்டுள்ள இத்துவாரபால - ஆயுத புருஷர்களின் சிற்பங்கள் முன்னர் இக்கோயிலின் தெற்குப் பிரகாரத்திலுள்ள முற்காலப் பாண்டியர்களின் காலத்தைச் சார்ந்த ஆதிநாதர் கோயிலின் அர்த்தமண்டப நுழைவாயிலின் இருமருங்கிலும் இடம் பெற்றிருந்திருக்க வேண்டுமெனத் தெரிகிறது. இச்சிற்பங்களிரண்டும் வடிவமைப்பிலும் கலைத்தன்மையிலும் பிற முற்காலப் பாண்டியர் சிற்பங்களிலிருந்து நன்கு மாறுபட்டு காணப்படுகின்றன. அதே சமயம் இவ்விரண்டு சிற்பங்களும் விஜயவாடா மற்றும் காவேரிப்பாக்கத்திலுள்ள முறையே கீழைச்சாளுக்கிய (கி.பி. 7ஆம் நூற்றாண்டு) மற்றும் பல்லவ (கி.பி. 9ஆம் நூற்றாண்டு துவாரபாலர்களின் சிற்பங்களை மிகவும் ஒத்தமைந்துள்ளன.[2]

---

1. G.Sethuraman, "Double Entendre in the Sculptures of Tamilnadu upto 1200 A.D." Facets of Indian Art and Culture (Madurai: J.J.Publications, 1995), p. 35.

2. C.Sivaramamurti, Royal Conquests and Cultural Migrations in South India and Deccan, (Calcutta: Indian Museum, 1955), pl. IX a and d (Kaveripakkam), and c (Vijayawada).

கஜேந்திர வரதப்பெருமாள் கோயில் மகாமண்டபத்தின் நுழை வாயிலின் இடதுபக்கமுள்ள துவாரபால - ஆயுத புருஷர் அதிபங்க நிலையில் இடது காலை தரையில் ஊன்றி, வலது காலை முன்புறத்தில் குறுக்கே மேலே தூக்கி கதாயுதத்தின்மீது வைத்தவாறு இரண்டு கரங்களுடன் காட்சியளிக்கிறார். இவர் அணிந்துள்ள மகுடத்தின் மேற்பகுதியில் விஷ்ணுவின் ஆயுதமான சக்கரம் பொறிக்கப்பட்டுள்ளது. இத்துவாரபால - ஆயுத புருஷரின் வலது கரம் தர்ஜனி முத்திரையிலும், இடது கரம் கதாயுதத்தின்மீது வைத்தவாறும் அமைக்கப்பட்டுள்ளது. இச்சிற்பத்தின் கம்பீரமான தோற்றமும், சதைப்பற்றான முகமும், உடலில் அமைந்துள்ள கூரான வளைவுத்தன்மையும், அணிகலன்களில் காணப்படுகின்ற நேர்த்தியான நுண்ணிய அலங்கார வேலைப்பாடுகளும் சாளுக்கியர்கள் மற்றும் பல்லவர்களின் விஜயவாடா மற்றும் காவேரிப்பாக்கத்திலுள்ள துவாரபாலர்களின் கலைப்பாணியை வெகுவாகப் பிரதிபலிக்கின்றன. இச்சிற்பத்தை பிற முற்காலப்பாண்டியர் சிற்பங்களிலிருந்து நன்கு வேறுபடுத்திக் காட்டுகின்றன.





கஜேந்திர வரதப்பெருமாள் கோயில் மகாமண்டபத்தின் நுழைவாயிலின் வலதுபக்கமுள்ள துவாரபால - ஆயுத புருஷர் ஆபங்க நிலையில் இரண்டு கால்களையும் தரையில் ஊன்றி, வலது காலை மட்டும் சற்று உயர்த்தியவாறு இரண்டு கரங்களுடன் காணப்படுகிறார். இவரின் மகுடத்தின் மேலே மலர்மாலையால் சூழப்பட்ட விஷ்ணுவின் படைக்கலனான சங்கு வெட்டப்பட்டுள்ளது. இத்துவாரபால - ஆயுத

புருஷரின் வலது கரம் கதாயுதத்தின்மீது வைத்தவாறும் இடது கரம் விஸ்மய முத்திரை காட்டியவாறும் காணப்படுகிறது.

இவ்விரண்டு துவாரபால - ஆயுத புருஷர்களின் சிற்பங்களில் காணப்படுகின்ற உடலமைப்பு, சாந்தமான முகபாவம், ஆடை - அணிகலன்களின் அலங்கார வேலைப்பாடுகள் போன்ற சிற்பவியல் தன்மைகளை அடிப்படையாகக் கொண்டு இவற்றின் காலத்தை கி.பி. 9ஆம் நூற்றாண்டு என வரையறை செய்யலாம். இச்சிற்பங்களிரண்டும் தக்காண மற்றும் பல்லவர்களின் ஆட்சிப்பகுதியிலிருந்து பாண்டியநாட்டில் பரவிய கலை வடிவங்களும் கலைப்பாணியும் பாண்டியர்களின் குடைவரை மற்றும் ஒற்றைக்கல் கோயில்களில் மட்டுமன்றி அவர்களின் துவக்ககால கட்டுமான கோயிற்கலைகளிலும் புகுந்துள்ளன என்பதைச் சுட்டிக்காட்டுகின்றன.

கி.பி. 11ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கஜேந்திர வரதப்பெருமாள் கோயில் கி.பி. 16 ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் திருத்தி விரிவுபடுத்தி கட்டப்பட்டதாகத் தெரிகிறது. இக்கோயிலின் மகாமண்டப நுழைவாயிலின் இருபுறமும் உள்ள தூண்களின் கீழ்சதுரப்பகுதியில் இரண்டு சிறிய வடிவ துவாரபால - ஆயுத புருஷர்களின் உருவங்கள் புடைப்புச் சிற்பங்களாக வடிக்கப்பட்டுள்ளன. இவையிரண்டும், கி.பி. 16ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சிற்பி முற்காலப் பாண்டியர்களின் எழிலார்ந்த துவாரபால - ஆயுத புருஷர்களின் சிற்பத்தின் அழகைக் கண்டு வியந்து படைத்தவையாகும். ஆனால் இச்சிற்பங்களிரண்டும் முற்காலப் பாண்டியர்களின் உன்னதமான சிற்பங்களின் சாதாரண 'மாதிரிகளாகவே' விளங்குகின்றன.

# 52. ஆண்டிப்பட்டி பகுதியில் தொல்லியல் ஆய்வுகள்

வி.ப.யதீஸ்குமார், புதுச்சேரி

### கொட்டோடைப்பட்டி

இவ்வூர் தேனி மாவட்டம், ஆண்டிப்பட்டி வட்டத்தில் உள்ளது. ஆண்டிப்பட்டியிலிருந்து வடமேற்காக 17 கி.மீ. தொலைவில் வைகை ஆற்றின் வலப்புறத்தில் அமைந்துள்ளது. கொட்டோடை என்ற சிறிய ஓடை ஆண்டிப்பட்டி மலையில் தோன்றி இவ்வூரின் கிழக்குப்புறமாகச் சென்று வைகை ஆற்றில் புலிமான்கோம்பை என்ற ஊருக்கருகில் கலக்கிறது. கொட்டோடைப்பட்டியில் நுண்ணிய கற்கால கருவிகள், பாறை ஓவியங்கள் மற்றும் பெருங்கற்கால ஈமச்சின்னங்கள் கண்டறியப்பட்டுள்ளன.

### நுண்ணிய கற்கால கருவிகள்

இவ்வூரின் மேற்குப் புறத்தில் அமைந்துள்ள ஆண்டிப்பட்டி, மலைத் தொடரின் அடிவாரத்தில் நுண்ணிய கற்கால கருவிகளான கிழிப்பான்கள், சுரண்டிகள் மற்றும் கருவிகள் செய்யப்பயன்படும் செர்ட் வகை மூலக்கற்கள் ஆகியன காணப்படுகின்றன. பெருங்கற்கால ஈமச்சின்னமான கல்வட்டத்துடன் கூடிய கற்பதுக்கைகள், முதுமக்கள் தாழிகள் போன்றவை இவ்வூரின் தென்புறமாக உள்ள மேட்டுநிலத்தில் நிறைய காணப்படுகின்றன.

### பாறை ஓவியங்கள்

கொட்டோடைப்பட்டியில் நுண்ணிய கற்கால கருவிகள் கிடைக்கும் இடத்திற்கு அருகே இயற்கையான குகையின் மேற்புறத்தில் பாறை ஓவியங்கள் உள்ளன. இதில் ஒருவன் விலங்கின்மேல் அமர்ந்த நிலையில் இடக்கையில் கடிவாளம் போன்ற கயிறை பிடித்தவாரும், வலக்கையில் ஆயுதத்தை ஓங்கிய நிலையிலும் வரையப்பட்டுள்ளது. எதிர்புறத்தில் அழிந்த நிலையிலான மனித உருவம் காணப்படுகிறது. இவ்வோவியங்களின் மேற்புறத்தில் ஓடத்தில் ஆறு மனிதர்கள் கையைத் தொங்கவிட்ட நிலையில் நிற்கின்றனர். இதில் ஐவர் தலைப்பகுதி ஓடத்தின் விளிம்பின் உட்புறத்தில் உள்ளன. இவ்வோவியங்கள் வெள்ளை வண்ணத்தில் தீட்டப்பட்டுள்ளன.

### மூணாண்டிப்பட்டி

இவ்வூர் கொட்டோடைப்பட்டியிலிருந்து மேற்காக ஐந்து கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரிலும் பெருங்கற்கால சின்னங்களும் பாறை ஓவியங்களும் உள்ளன. இவ்வூரின் தென்கிழக்கிலுள்ள மலைக்குன்றில் இயற்கையான குகை உள்ளது. இக்குகையில் சுமார் 2 மீட்டர் நீளத்திற்கு காவி மற்றும் வெள்ளை வண்ணத்தில் ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன. காவி வண்ணத்திலான ஓவியத்தில் மிருகத்தின் உருவம் அழிந்த நிலையில் காணப்படுகின்றது. இவ்வோவியங்களின் மேல் வெள்ளை நிறத்தில் உள்ள 11 மனித உருவங்களில் நான்கு மனித உருவங்கள் ஆயுதத்தை ஓங்கிய நிலையில் சண்டையிடும் நிலையில் உள்ளன.

# 53. நாமக்கல் வட்டாரத்தில் புதிய நடுகற்கள்

சி.செல்வகுமார், புதுச்சேரி

பழைய சேலம் மாவட்டத்தில் இருந்து ஏற்கனவே பல நடுகற்கள் கண்டறியப்பட்டு சேலம் அரசு அருங்காட்சியகத்தில் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. இப்பகுதியில் முதலாம் பராந்தக சோழன் காலத்தைச் சேர்ந்த கூலிப்பட்டி நடுகல்லே காலத்தால் முந்தியது ஆகும். அண்மையில் நாமக்கல் வட்டாரப்பகுதியில் மேற்கொண்ட களஆய்வில் ஏழு நடுகற்கள் கண்டறியப்பட்டுள்ளன. கல்வெட்டுகள் எதுவும் காணப்படாத நிலையில் சிற்ப அமைதியைக் கொண்டு இந்நடுகற்களின் காலத்தைத் கணிக்க வேண்டியுள்ளது.

**கீரம்பூர் - நடுகல்**

நாமக்கல் வட்டம், கீரம்பூர். காலம் கி.பி. 14 ஆம் நூற்றாண்டு. கீரம்பூர் எட்டுக்கையம்மன் கோயில் அருகில் ஊமைக்கவுண்டர் என்பவரின் தோட்டத்தில் வாள் ஏந்திய வீரனின் நடுகல் ஒன்று உள்ளது. ஊர் மக்கள் இக்கல்லை நவாப் என்றும் எட்டுக்கையம்மன் கோயிலுக்கு நிலத்தைத் தானமாக கொடுத்தவர் நினைவாக வைக்கப்பட்ட சிலை என்றும் கூறுகின்றனர். இந்நடுகல்லில் வீரன் போர்க்களத்திற்குச் செல்வது போல் காட்சி அமைந்துள்ளது. வீரனின் வலது கையில் வாளினைப் பற்றியவாறும், இடது கை வாளினை உறையிலிருந்து எடுப்பது போன்றும் உள்ளது. இடது கால் முன்வைத்து நடப்பதுபோல் உள்ளது. வீரனின் தலையில் கிரீடம், காதில் வளையம், கையில் வளையல், இடுப்பில் குறுவாள், கீழ்ஆடை உள்ளன.



**வில்லிபாளையம் - நடுகல்**

பரமத்திவேலூர் வட்டம், வில்லிபாளையம். காலம் கி.பி. 17 ஆம் நூற்றாண்டு. வில்லிபாளையம், பிள்ளைக்களத்தூர் ஆகிய ஊர்களின் எல்லையில் கருங்காளிபாளையம் கிராமத்தில் வில் வீரன் நடுகல் உள்ளது. இந்நடுகல்லைக் கருப்பனார் என்றும், எல்லைக்கருப்பன் என்றும் அழைக்கின்றனர். வீரனின் வலது கையில் கூர்மையான குறுவாளும், இடது கையில் வில்லும், வலது பக்கம் இடுப்பில் கத்தியும் உள்ளன. வீரன் தலைக்கொண்டை சாய்வாக உள்ளது. காதில் வளையம், கழுத்தில் வளையம், அணிகலன்கள், கீழ்ஆடை உள்ளன.



**எஸ்.வாழவந்தி - நடுகல்**

பரமத்திவேலூர் வட்டம், எஸ்.வாழவந்தி. காலம் கி.பி. 17 ஆம் நூற்றாண்டு.

மாரியம்மன் கோயிலுக்குக் கிழக்குப் பக்கம் கோழிப்பண்ணைக்கு அருகில் இரண்டு நடுகற்கள் உள்ளன. ஒன்று புலிக்குத்திப்பட்டான் கல், இரண்டாவது நடுகல் குதிரை வீரன் நடுகல் ஆகும். இவ்விரு நடுகல்லும் வழிபாட்டில் உள்ளன. வீரன் புலியுடன் போராடுவது காட்சியாக உள்ளது. புலியின் தொண்டையில் கத்தியைக் குத்தி, புலியின் வாயைப் பிடித்து

பிளப்பது போல் உள்ளது. உச்சிக்கொண்டை, காதில் குண்டுமணிதோடு, கீழ்ஆடை உள்ளது. இந்நடுகல்லை குலதெய்வமாக சிலர் வணங்குகின்றனர்.

கந்தசாமி என்பவரின் வீட்டின் சுற்றுச்சுவர் அருகில் குதிரை நடுகல் ஒன்று உள்ளது. இந்நடுகல்லில் குதிரை வீரன் உட்பட நான்கு வீரர்கள் உள்ளனர். வீரன் ஒருவன் வெண்குடை பிடித்து உள்ளான். ஒருவன் ஈட்டி வைத்துள்ளான். குதிரை வீரனின் வலது கையில் வாளும், இடது கையில் குதிரையின் கடிவாளமும் உள்ளன. அனைத்து வீரர்களுக்கும் உச்சிக்கொண்டை உள்ளது.



**எஸ். வாழவந்தி அய்யன்தோட்டம் - நடுகல்**

பரமத்திவேலூர் வட்டம், எஸ்.வாழவந்தி. காலம் கி.பி. 17 ஆம் நூற்றாண்டு. எஸ்.வாழவந்தியில் அய்யன்தோட்டம் என அழைக்கப்படும் இடத்தில் தலைப்பகுதி சிதைந்த நிலையில் ஒரு நடுகல் உள்து. வீரனின் இடது கையில் ஈட்டி ஏந்தி வலது கையை இடுப்பில் வைத்துள்ளான். கீழ் ஆடை மட்டும் உள்ளது. இந்நடுகல் ஊர் காவலனாக இருக்கலாம்.

**மணப்பள்ளி - நடுகல்**

பரமத்திவேலூர் வட்டம், மணப்பள்ளி. கி.பி. 16 ஆம் நூற்றாண்டு. மணப்பள்ளி பெருமாள் கோயில் முன்பக்கம் வடக்கு நோக்கியவாறு பன்றிகுத்திக்கல் ஒன்று உள்ளது. இந்நடுகல்லை கருப்புசாமி, கருப்பனார் என அழைக்கின்றனர். இந்நடுகல்லில் வீரனின் நீண்ட ஈட்டி காட்டுப் பன்றியின் வயிற்றில் குத்தி வெளியே வந்துள்ளது. வீரனின் தலையில் கொண்டை, கைகளில் கடகவளையம், இடுப்பில் சிறிய குறுவாள் ஆகியவை உள்ளன.



**மேல்சாத்தம்பூர் - நடுகல்**

திருச்செங்கோடு வட்டம், மேல்சாத்தம்பூர். காலம் கி.பி. 17 ஆம் நூற்றாண்டு. காளியம்மன் கோயில் முன்புறம் நத்தக்காடு என்ற இடத்தில் தெற்கு நோக்கி கற்பலகைகளால் மூன்று புறமும் அடைத்து மேற்புறம் கல்லால் மூடி அமைத்த அறையில் இரண்டு நடுகற்கள் உள்ளன. இப்பகுதியில் வசிக்கும் மக்கள் இதனைக் குறத்திக்கல் மாடம் என்று அழைக்கின்றனர். முதல் நடுகல்லில் வீரனின் வலது கையில் உள்ள ஆயுதம் தெரியவில்லை. இடது கை "ட" வடிவில் அமைந்துள்ளது. வீரனின் தலையில் உச்சிக் கொண்டை, இடுப்பில் ஒரு துணி வடம் உள்ளன. முழங்கால் வரை ஆடை உள்ளது. இரண்டாவது நடுகல்லில் வீரனின் முகம் சிதைந்துள்ளது. வலது கையில் உள்ள ஆயுதம் தெரியவில்லை. இடது கையில் கேடயம் உள்ளது. கீழ்ஆடை முழங்கால் வரை உள்ளது. இந்நடுகல் அமைந்துள்ள பகுதியில் பரவலாக சிவப்பு நிற பானை ஓடுகள் கிடைக்கின்றன.



# 54. காவிரிப்படுகையில் புதிய தொல்லியல் ஆய்வுகள் 2007 - 2008

வீ.செல்வகுமார், தஞ்சாவூர்

கடந்த ஆண்டில் மேற்கொண்ட கள ஆய்வின் (ஆவணம் 18; 139-140) தொடர்ச்சியாக இந்த ஆண்டும் காவிரிப்படுகையில் கள ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. இதன் மூலம் கீழ்க்கண்ட தொல்லியல் தடயங்கள் கண்டுபிடிக்கப்பட்டன (அட்டவணை காண்க).

## பழங்கற்கால மற்றும் நுண்கற்கால இடங்கள்

தஞ்சாவூரைச் சுற்றியுள்ள பல இடங்களில் செம்மண் படிவுகளுக்குக் கீழேயும், செம்பாறாங்கல் (laterite) அடுக்கிற்கு மேலேயும் காணப்படும் சரளைக்கல் படிவுகளில் (gravel), வெட்டுக்கத்திகள் (cleavers), சுரண்டிகள் (scrapers), மூலக்கற்கள் (cores), செதில்கள் (chips) போன்ற பழங்கற்காலக் கருவிகள் கண்டுபிடிக்கப்பட்டன. இவை குறைந்த தரமுள்ள குவார்ட்சைட் கற்களால் செய்யப்பட்டவை. இவை பழங்கற்கால மக்கள் இப்பகுதியிலும் தென் தமிழ்நாட்டிலும் வாழ்ந்திருக்கலாம் என்பதை வலியுறுத்துகின்றன.

இச்சரளைக்கல் படிவுகளின் சில இடங்களில், சுரண்டிகள், மூலக்கற்கள், செதில்கள் போன்ற நுண்கற்கருவிகள் மட்டுமே காணப்படுகின்றன. சில இடங்களில் நுண்கற்கருவிகள் சரளைக்கல் படிவுக்கு மேலேயுள்ள செம்மண் படிவுகளிலும் காணப்படுகின்றன. இவை குவார்ட்ஸ் கற்களால் செய்யப்பட்டவை.

## வரலாற்றுக்கால கண்டுபிடிப்புகள்

இரும்புக்கால மற்றும் இடைக்கால வாழ்விடங்கள், மதகுகள், சிற்பங்கள், பிற்காலத் தமிழ்க் கல்வெட்டுகள் பல இடங்களில் கண்டுபிடிக்கப்பட்டன. திருவையாறுக்கு அருகே கண்டியூருக்குக் கிழக்கே உள்ள மணல்மேடு-செங்கமேடு பகுதியில் அமர்ந்த சிங்கம் உள்ள பல்லவர்காலத் தூணின் அமைப்பை ஒத்த ஒரு தூணின் அடிப்பகுதி, வீரசிங்கம்பேட்டையில் குடமுருட்டி ஆற்றிலிருந்து தண்டாங்கோரை மற்றும் நல்லுச்சேரி கிராமங்களுக்குச் செல்லும் சோறுடையான் வாய்க்கால் தலைப்பில் உள்ள இடைக்கால மதகு மற்றும் செங்கமேடு வாய்க்கால் தலைப்பில் காணப்படும் இடைக்காலச் சிற்பம் ஆகியன கண்டறியப்பட்டன.

அட்டவணை

| இடம் | வட்டம், மாவட்டம் | கண்டுபிடிப்புகள் |
|---|---|---|
| மனோஜிபட்டி | தஞ்சாவூர், தஞ்சாவூர் | பழங்கற்காலக் கருவிகள் மற்றும் தொழிற்கூடம் |
| பிள்ளையார்பட்டி | ,, | பழங்கற்கற்காலக் கருவிகள் |
| திருக்கானூர்பட்டி | ,, | ,, |
| வேங்குராயன் குடிக்காடு | ,, | ,, |
| ரெட்டிப்பாளையம் | ,, | இடைக்கால வாழ்விடம், இரும்பு தொழிற்கூடம் |
| இனாத்துக்கான்பட்டி | ,, | நுண்கற்கருவிகள் |
| புனல்குளம் | கந்தர்வகோட்டை புதுக்கோட்டை | ,, |
| வளவன்பட்டி | ,, | நுண்கற்கருவிகள்; பிற்காலத் தமிழ் கல்வெட்டு |
| நாகத்தி | திருவையாறு தஞ்சாவூர் | நத்தம் இரும்புக்கால வாழ்விடம், அய்யன் கோவில் இடைக்காலச் சிற்பம், தெலுங்கு (அ) கன்னடக் கல்வெட்டு |
| அம்மன்கோயில் பேட்டை-ராஜேந்திரம் | ,, | பிற்காலத் தமிழ்க் கல்வெட்டு, இடைக்கால வாழ்விடம் |
| மணல்மேடு-செங்கமேடு | ,, | நாலுமுக சாமி கோயில் மேட்டில் இடைக்கால வாழ்-விடம் மற்றும் அமர்ந்த சிங்கம் உள்ள தூணின் அடிப்பகுதி மற்றும் உடைந்த சிலைகள் |
| வீரசிங்கம்-பேட்டை | ,, | குடமுருட்டி ஆற்றிலிருந்து தண்டாங் கோரைக்குச் செல்லும் சோறுடையான் வாய்க்கால் தலைப்பில் சோழர்கால மதகு; உடைந்த சிற்பங்கள் |
| மணல்மேடு | ,, | குடமுருட்டி ஆற்றிலிருந்து திருவேதிக்குடிக்குச் செல்லும் வாய்க்கால் தலைப்பில் சோழர்கால மதகின் பகுதிகள் |
| செங்கமேடு | ,, | குடமுருட்டி ஆற்றிலிருந்து அரசூருக்குச் செல்லும் வாய்க்கால் தலைப்பில் உள்ள மதகில் சோழர்காலச் சிற்பம் |
| புள்ளமங்கை, பசுபதி கோவில் | பாபநாசம், தஞ்சாவூர் | லிங்கத்தடி மேடு அருகில் இடைக்கால வாழ்விடம், மற்றும் லிங்கம் |
| தெற்குநத்தம் | ஒரத்தநாடு, தஞ்சாவூர் | இடைக்கால வாழ்விடம் |



அமர்ந்த சிங்கம் உள்ள தூணின் அடிப்பகுதி, மணல்மேடு



சோறுடையான் வாய்க்கால் தலைப்பில் சோழர்கால மதகு,
வீரசிங்கம்பேட்டை

# 55. பழனிப்பகுதியில் இரும்புக்கால வரலாற்றுக்காலத் தடயங்கள்

கா.ராஜன், புதுச்சேரி
வி.ப.யதீஸ்குமார், புதுச்சேரி

### தாமரைக்குளம்

பழனியிலிருந்து தென்மேற்காக 8 கி.மீ. தொலைவில் இவ்வூர் அமைந்துள்ளது. இவ்வூரின் மேற்குப்புறமாக பொருந்தலாறு வடக்கு நோக்கி ஓடுகின்றது. இவ்வாற்றின் வலக்கரையில் இரும்புக்கால வாழ்விட மண்மேடு கண்டறியப்பட்டுள்ளது. கருப்புசிவப்பு, சிவப்பு, பளபளப்பாக்கப்பட்ட கருப்புநிற மற்றும் செம்பழுப்புப் பூச்சு மட்பாண்டத் துண்டுகள் இம்மண்மேட்டில் அதிக அளவில் காணப்படுகின்றன. மேலும் சிவப்புநிற வடிகட்டிகள் தாங்கிகள், தட்டுகள் மற்றும் விளையாட்டுப் பொருட்கள் காணப்படுகின்றன. இங்கு காணப்படும் மட்பாண்டச் சில்லுகளில் பலவகையான குறியீடுகள் காணப்படுகின்றன. இவை மண்மேட்டின் தென்மேற்குப்பகுதியில் அதிக அளவில் காணப்படுகின்றன. மண்மேட்டின் மேற்குப்புறமாக முதுமக்கள் தாழிகள் மற்றும் எலும்புத்துண்டுகள் காணப்படுகின்றன.

மேலும் இவ்வூரில் திரிபுராந்தகர் செப்புத் திருமேனியும், நடராசர் செப்புத் திருமேனியும், பைரவர், சப்தமாதர் சிற்பங்களும் கண்டெடுக்கப் பட்டுள்ளன. வணிகக்குழுவைச் சேர்ந்த ஐநூற்றுவரின் வணிகக்குழு சின்னங்களுடன் கூடிய 12-ம் நூற்றாண்டு கல்வெட்டும் கண்டறியப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.





### பொருந்தல்

இவ்வூர் பழனியிலிருந்து தென்மேற்காக 12 கி.மீ. தொலைவில் பொருந்தலாற்றின் இடக்கரையில் அமைந்துள்ளது. இவ்வூரின் மருதகாளியம்மன் கோயிலின் பின்புறமாக ஒரு மண்மேடு உள்ளது. இம்மண்மேட்டினைப் பாசிமேடு என்று இவ்வூர் மக்கள் அழைக்கின்றனர். பாசிகள் செய்யப்பயன்படும் பாசிமணிகள், உடைந்த வளையல் துண்டுகள், பாசிகள் செய்யப்பயன்படும் உலைகள், அவற்றின் எச்சங்கள் மண்மேட்டின் மேற்பரப்பில்

காணப்படுகின்றன. இம்மண்மேட்டின் மேற்குப்புறமாக தென்னைமரங்கள் வைக்க குழி தோண்டியபோது சுமார் 1.10 மீ. ஆழத்தில் செங்கல் கட்டிடங்கள் கண்டறியப்பட்டன. இக்கட்டிடப் பகுதிகள் இரண்டு செங்கற்கள் வரிசையில் கிழக்கு மேற்காக அமைந்துள்ளன. இச்செங்கற்கள் 20 செ.மீ. அகலமும், 30 செ.மீ. நீளமும் கொண்டுள்ளன. மேலும் இங்கு கருப்பு சிவப்பு, சிவப்பு, கருப்பு நிற மட்பாண்ட துண்டுகள் காணப்படுகின்றன. எனவே இவ்வாழ்விடம் வரலாற்று தொடக்ககால வாழ்விடமாக இருக்கலாம் என கருதலாம். மேலும் சங்க இலக்கிய நூல்களான புறநானூற்றில் சேர அரசனைப் பாடிய புலவரும், அகநானூற்றில் 19 மற்றும் 351 பாடல்களைப் பாடிய புலவருமான பொருந்தில் இளங்கீரனார் இவ்வூரைச் சேர்ந்தவராகக் கருதலாம். (புறம் - 53, அகம் 19,351).



இவ்வூரிலுள்ள மருதகாளியம்மன் கோயிலின் படிக்கல்லில் 11ஆம் நூற்றாண்டு கல்வெட்டு உள்ளது. கல்வெட்டின் இடது பகுதி உடைந்த நிலையில் காணப்படுகிறது.

1. ..... ..... ..... ..... உராவி
2. ..... ..... ..... ..... பொருந்
3. ..... ..... ..... ..... இராஜா
4. ..... ..... ..... ..... ரோம
5. ..... ..... ..... ..... யார்புர
6. ..... ..... ..... ..... ச்சாமுட(ட)
7. ..... ..... ..... ..... இராஅழ
8. ..... ..... ..... ..... ருளஅரி
9. ..... ..... ..... ..... க்விஞ்
10. ..... ..... ..... ..... பட ஒரு
11. ..... ..... ..... ..... நாள் ஒரு
12. ..... ..... ..... ..... குறுணி
13. ..... ..... ..... ..... ப்புவ
14. ..... ..... ..... ..... இருகல்
15. ..... ..... ..... ..... க்கும்
16. ..... ..... ..... ..... செந் .....
17. ..... ..... ..... .....

# 56. அம்பாசமுத்திர வட்டத்தில் தொல்லியல் ஆய்வுகள் - 2008

மோ.பிரசன்னா, புதுச்சேரி பல்கலைக்கழகம்

**நத்தம்**

அம்பாசமுத்திரத்திலிருந்து பாபநாசம் செல்லும் வழியில் வண்டிமறிச்சான் கோயில் பேருந்து நிறுத்தத்திலிருந்து வடக்கே 3 கி.மீ. தொலைவில் தாமிரபரணியாற்றங்கரையின் வடகரையில் நத்தம் என்ற பகுதி அமைந்துள்ளது. இப்பகுதியில் 10 ஏக்கர் பரப்பளவில் இரும்புக்கால பண்பாட்டு எச்சங்களான முதுமக்கள் தாழிகள், கருப்புசிவப்பு, கருப்பு, சிவப்பு பானை ஓடுகள், கருப்பு நிற தாங்கிகள், பளபளப்பான சிவப்புநிற பானைஓடுகள், எலும்புத்துண்டுகள் போன்றவை பரந்துபட்ட அளவில் காணப்படுகின்றன.

**ஊர்காடு**

அம்பாசமுத்திரத்திலிருந்து கல்லிடைக்குறிச்சி செல்லும் வழியில் 2 கி.மீ. தொலைவில் இவ்வூர் அமைந்துள்ளது. இவ்வூரின் வடக்குப்பகுதியில் அமைந்துள்ள காலனி வீடுகளின் அருகே முதுமக்கள் தாழிகள் பல மேலோட்டமாகத் தெரிகின்றன. இங்கு பரவலாக கருப்புசிவப்பு, கருப்பு, சிவப்பு பானை ஓடுகள் காணப்படுகின்றன. தற்பொழுது இப்பகுதி விவசாயப் பகுதியாக மாறிவிட்டதால் பெரும்பாலானவை அழிக்கப்பட்டு விவசாய நிலமாக்கப்பட்டுள்ளன.

**கல்லிடைக்குறிச்சி**

அம்பாசமுத்திரத்திலிருந்து திருநெல்வேலி செல்லும் சாலையில் 3 கி.மீ. தொலைவில் கல்லிடைக்குறிச்சி கோட்டைத்தெரு அமைந்துள்ளது. இப்பகுதியின் மேற்கே அமைந்துள்ள காலனி வீடுகளுள்ள பகுதியில் பல முதுமக்கள் தாழிகள் இருந்துள்ளன. தற்பொழுது அங்கு முதுமக்கள் தாழிகளின் உடைந்த பகுதிகள் மற்றும் கருப்புசிவப்பு பானை ஓடுகள் காணப்படுகின்றன.

**காக்க நல்லூர்**

அம்பாசமுத்திரத்திலிருந்து தென்காசி செல்லும் சாலையில் 8 கி.மீ. தொலைவில் இப்பகுதி அமைந்துள்ளது. இவ்வூரில் 10 ஏக்கருக்கு மேலான பரப்பளவில் முதுமக்கள் தாழிகள் காணப்படுகின்றன. இங்கு முதுமக்கள் தாழிகள், கருப்புசிவப்பு, கருப்பு, சிவப்பு பானை ஓடுகள், கிண்ணங்கள், சிதைந்த நிலையில் காணப்படும் இரும்பு ஆயுதங்கள் போன்றவை காணப்படுகின்றன.

**கொட்டாரக்குறிச்சி**

அம்பாசமுத்திரத்திலிருந்து திருநெல்வேலி செல்லும் சாலையில் வீரவநல்லூர் மார்க்கமாக திருப்புடைமருதூர் செல்லும் பாதையில் 6 கி.மீ. தொலைவில் கொட்டாரக்குறிச்சி அமைந்துள்ளது. இவ்வூரின் மேற்குப்பகுதியில் முதுமக்கள் தாழிகள் காணப்படுகின்றன. அதனுடன் கருப்புசிவப்பு, சிவப்பு பானை ஓடுகள் காணப்படுகின்றன. சுமார் 5 ஏக்கர் பரப்பளவிற்குமேல் முதுமக்கள் தாழிகள் காணப்பட்டதற்கான எச்சங்கள் கிடைக்கின்றன.

**பூவங்குறிச்சி**

பாபநாசத்திலிருந்து கடனாநதி அணைக்கு செல்லும் வழியில் 8 கி.மீ. தொலைவில் இவ்வூர் அமைந்துள்ளது. இவ்வூரின் மேற்குப்பகுதியில் முதுமக்கள் தாழிகள் காணப்படுகின்றன. அங்கு பரவலாக கருப்புசிவப்பு பானை ஓடுகள், முதுமக்கள் தாழியின் உடைந்த பகுதிகள் போன்றவை காணப்படுகின்றன.



# 57. ஒல்லையூரில் தொல்லியல் ஆய்வுகள்

**M.காயத்திரி தேவி,** புதுக்கோட்டை

சங்க இலக்கியத்தில் இடம்பெற்ற ஒல்லையூர் புதுக்கோட்டை மாவட்டத்தில் இன்று ஒலியமங்கலம் என்ற பெயரில் உள்ளது. இன்றைய ஒல்லையூரின் தென்மேற்கில் சுமார் அரை கிலோ மீட்டர் தொலைவில் உள்ள வெள்ளாளப்பட்டியின் தென்புறம் காணப்படும் குரங்குபட்டரை என்ற இடத்தில் உள்ள பெருங்கற்கால பண்பாட்டு (கல்மூடிகளுடன் கூடிய) தாழிகளும் ஒல்லையூருக்கு மேற்கில் இன்றைய ஒல்லையூர் பாசன குளத்திற்குள் கல்வட்டங்கள் இல்லாது காணப்படும் 50க்கும் மேற்பட்ட கற்பதுக்கைகளும், அதற்கு மேற்கில் உள்ள சேர்வாரன்பட்டிக்கு வடமேற்கில் ஒல்லையூரில் இருந்து சுமார் 2 கிலோ மீட்டர் தூரத்தில் செம்புறைக் கல்லாலான கல்வட்டங்களை உடைய குரங்கு பட்டரைகளும், கல்வட்டங்கள் இல்லாத கல்பதுக்கைகளும் ஒல்லையூரின் பழமைக்கு சான்று.

சங்க புலவர்களில் ஒருவரான குடவாயில் கீரத்தனார் என்பவரால் பாடப்பட்டவன் பெருஞ்சாத்தன் (புறம் 242). இவன் வாழ்ந்த ஊர் ஒல்லையூராகும். சங்க கால பாண்டியர்களில் ஒருவரான பூதப்பாண்டியன் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் என்ற அடைமொழியோடு அழைக்கப் பட்டவன். பூலாங்குறிச்சி கல்வெட்டு "னொல்லையூருக் கூற்றத்து வேள் கூரு" என்ற குறிப்பைத் தருகிறது. சங்க காலத்தில் நாடென்றளவில் இருந்த ஒல்லையூர் பூலாங்குறிச்சிக் கல்வெட்டில் ஒரு கூற்றத்தின் பெயராகத் திகழ்ந்ததைப் பூலாங்குறிச்சிக் கல்வெட்டு தெரிவிக்கிறது.

ஒலியமங்கலம் வரகுணஈஸ்வரம் கோவிலுக்கு மேற்கில் உள்ள நிலப்பரப்பில் மத்திய கால பானை ஓடுகளும் கோவிலுக்குத் தென்புறத்தில் சாம்பல்மேடும், பானை ஓடுகளும் நிறைந்த அளவில் கிடைக்கின்றன. இச்சாம்பல் மேட்டில் மண் பொம்மை, வெண்கலத்தாலான மான் உருவங்களும் கிடைத்துள்ளன. பல நூற்றாண்டுகளின் பண்பாட்டு வளர்ச்சியை கொண்ட ஊராக விளங்குவதால் இங்கு அகழ்வாராய்ச்சி செய்தால் ஒல்லையூரின் பழம் பெருமை உலகம் அறிந்திட வாய்ப்பு ஏற்படும்.



# 58. ஆமூரில் தொல்லியல் ஆய்வுகள்

கி.குமார், சென்னை

காஞ்சிபுரம் மாவட்டம் செங்கல்பட்டு வட்டத்தில் திருப்போரூருக்கு தென்மேற்கே சுமார் 8 கி.மீ. தொலைவில், திருப்போரூர் - திருக்கழுக்குன்றம் சாலையில் ஆமூர் என்கிற பழம்பெருமை வாய்ந்த ஊர் அமைந்துள்ளது. இவ்வூரில் ஏராளமான தொல்லியல் தடயங்கள் கவனிப்பாரற்ற நிலையில் காணப்படுகின்றன. ஆமூரில் பெருங்கற்படைக் காலம் எனப்படும் இரும்புக் காலம் முதல் மக்கள் தொடர்ந்து வாழ்ந்து வந்துகொண்டிருப்பதற்கான ஆதாரங்கள் அதிக அளவில் கிடைத்துள்ளன.

## பெருங்கற்படை சின்னங்கள்

சுமார் 2500 ஆண்டுகளுக்கு முன் சிறப்புற்று விளங்கிய பெருங்கற்படைக் காலம் எனப்படும் இரும்புகாலத்தைச் சேர்ந்த சின்னங்கள் இவ்வூரில் அதிக அளவில் காணப்படுகின்றன. இவ்வூருக்குத் தெற்கேயுள்ள பெரிய ஏரியிலும், ஊருக்குத் தென்மேற்கே உள்ள காப்புக்காட்டிலும் ஐம்பதுக்கும் மேற்பட்ட கல்வட்டங்களுடன் கூடிய கற்கிடக்கைகள் (Dolmenoid cist) கல்பதுக்கை (Cist burial) ஈமத்தாழிகள் (Urn) போன்ற சின்னங்கள் காணப்படுகின்றன. தற்போது ஒரு சில சின்னங்கள் மட்டுமே நல்ல நிலையில் காணப்படுகின்றன. பெரும்பாலானவை சிதைந்த நிலையில் காணப்படுகின்றன. இச்சின்னங்களுக்கு அருகே கருப்பு-சிவப்பு, சிவப்பு, கருப்பு நிற மட்பாண்ட ஓடுகள் காணப்படுகின்றன. இரும்புக் கழிவுகளும் (Iron Slags) ஆங்காங்கே காணப்படுகின்றன.

ஆமூருக்குத் தென்மேற்கேயுள்ள ஈச்சம்பள்ளம் என்ற இடத்திற் கருகிலுள்ள காப்புக்காட்டிலும் ஏராளமான பெருங்கற்படைச் சின்னங்கள் காணப்படுகின்றன. இங்கு கல்வட்டங்கள், கற்கிடக்கைகள், ஈமத்தாழிகள், ஈமப்பேழைகள் ஆகியவை அதிக அளவில் காணப்படுகின்றன. சுடுமண்ணால் செய்யப்பட்ட நீண்ட பெட்டியைப் போன்ற ஈமப்பேழைகள் (Sarcophagus) பல கால்களுடன் காணப்படுகின்றன. இவ்வகையான ஈமத்தாழிகளும், ஈமப்பேழைகளும் கற்கிடக்கைகளின் உட்பகுதியிலும், வெளிப்புறத்திலும் அருகருகே காணப்படுகின்றன. மேற்கண்ட ஈமச்சின்னங்களின் உட்குதியிலும் வெளிப்புறத்திலும் கருப்பு-சிவப்பு, கருப்பு மற்றும் சிவப்பு நிறத்தாலான மட்பாண்டங்கள் உடைந்த நிலையில் காணப்படுகின்றன.

## வாழ்விடப் பகுதி

தற்போது ஊர் அமைந்துள்ள பகுதியிலேயே இரும்புக் காலம் முதற்கொண்டு மக்கள் தொடர்ந்து வாழ்ந்துவருகின்ற வாழ்விடப்பகுதி அமைந்துள்ளது. இப்பகுதியில் இரும்புகாலத்தைச் சேர்ந்த கருப்பு, சிவப்பு, கருப்பு மற்றும் சிவப்பு நிறத்தாலான பானை ஓடுகளும் பிற்காலத்தைச் சேர்ந்த பல்வேறு வகையான பானை ஓடுகளும், செங்கற் துண்டுகளும்

ஏராளமாகக் காணப்படுகின்றன. இவ்வூர் பல்லவர் மற்றும் சோழர் காலத்தில் ஆமூர் என்ற பெயரிலும் பின்னர் ஆமூரான சுப்ரமணிய சதுர்வேதி மங்கலம் என்ற பெயரிலும் அழைக்கப்பட்டமையை கல்வெட்டுகளின் மூலம் அறியலாம். மேலும், இவ்வூரில் இறையான் கோயில் என்கிற சிவன் கோயில், அருளாளப் பெருமாள் என்கிற விஷ்ணு கோயில் மற்றும் சுப்பரமணியர் கோயில் ஆகியவைகள் இருந்தனவென்பதை இவ்வூரில் கிடைத்துள்ள கல்வெட்டுகளிலிருந்து அறியலாம். ஆனால், இக்கோயில்கள் எதுவும் தற்போது இல்லை. சிவன் மற்றும் பெருமாள் கோயில்கள் பிற்காலத்தில் மாற்றியமைக்கப்பட்டுள்ளன. ஆனால் ஏரிக்கரைக்கருகே சுப்பிரமணியர் கோயில் முற்றிலுமாக சிதைந்து காணப்படுகிறது.

**சிற்பங்கள்**

ஆமூர் ஊருக்கு வடகிழக்கே அமைந்துள்ள சிவன் கோயிலின் பின்புறத்தில் மூத்ததேவியின் சிற்பமொன்று காணப்படுகிறது. சுமார் 3 அடி உயரமும் 1½ அடி அகலமும் கொண்ட கற்பலகையில் இச்சிற்பம் செதுக்கப்பட்டுள்ளது. இச்சிற்பத் தொகுதியின் உருவ அமைதியைக் கொண்டும் ஆடை அணிகலன்களின் அமைப்பைக் கொண்டும் இதனை கி.பி.8-9 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பல்லவர் கால சிற்பமென கருதலாம்.

ஆமூர் ஊருக்கு வடகிழக்கே ஒரு கி.மீ. தொலைவில் வயல்வெளியில் 3½ அடி உயரமுள்ள பிள்ளையார் சிலை ஒன்று முட்புதரில் காணப்படுகிறது. இச்சிலை கி.பி. 10 ஆம் நூற்றாண்டின் கலைப்பாணியில் காணப்படுகிறது. சோழர் காலத்தைச் சேர்ந்த தட்சிணாமூர்த்தி மற்றும் துர்க்கையின் சிலைகள் சிவன் கோயிலுக்கு அருகே உடைக்கப்பட்ட நிலையில் காணப்படுகின்றன. விஜயநகர காலத்தைச் சேர்ந்த பைரவர் மற்றும் சூரியன் சிலைகள் சிவன் கோயிலின் வளாகத்தினுள் உள்ள சிறிய கோயில்களில் வைத்து வழிபடப்பட்டு வருகின்றன.

**கல்செக்குகள்**

சுமார் ஐந்தடி உயரமுடைய இரண்டு கல்செக்குகள் இவ்வூரில் காணப்படுகின்றன. ஒரு செக்கு மூலாத்தம்மன் கோயிலருகிலும், மற்றொன்று பிள்ளையார் கோயிலருகிலும் முட்புதர்களில் காணப்படுகின்றன.





# 59. கொரிய நாட்டின் கங்குல் எழுத்துக்களும் தமிழ்பிராமி எழுத்துக்களும்

இராசு பவுன்துரை, தஞ்சாவூர்

கங்குல் அல்லது கங்குக்மல் என்பது கொரிய மொழியின் பெயராகும். சீன எழுத்துக்களைப் பயன்படுத்திய கொரியர்கள் இடைக்காலத்தில் குறிப்பாக கி.பி. 12-13 ஆம் நூற்றாண்டில் இவர்களது கால்குமேல் (கங்குல்) மொழிக்குரிய எழுத்துக்களைப் பயன்படுத்தத் தொடங்கினர். இவர்களது எழுத்து வரிவடிவங்களைத் தொகுத்துக் காணும்பொழுது உயிர் எழுத்துக்களுக்கு ஒரு வகை வடிவமும் மெய் எழுத்துக்களுக்கு பிறிதொரு வகை எழுத்து வடிவத்தையும் அமைத்துள்ளனர். இதில் மெய் எழுத்துக்களுக்குரிய வடிவங்கள் தமிழகத்து அல்லது தென்னிந்தியப் பண்பாட்டுத் தொடர்புடைய பிராமி எழுத்துக்களைப் பின்பற்றியதாகக் கருதத்தக்க வண்ணம் உள்ளன. இதில் ப, ம, ஆகிய இரண்டும் மாற்றங்களுடன் வருவதும் பிற எழுத்துக்கள் மிகச் சிறிய மாற்றங்களுடன் காணப்படும் பாங்கினைப் பெற்றுள்ளன. இம்மாற்றங்கள் பிராமி எழுத்தின் தொடர்ச்சியான வளர்ச்சியில் அதனிடையே இயல்பாக ஏற்பட்ட மாற்றமா? அல்லது தேவைக்கேற்ப ஏற்பட்ட மாற்றமா? மட்பாண்ட வரிவடிவத்துடன் இணைந்து வளர்ந்த வரிவடிவங்களா? என எண்ணத் தோன்றும். ஆயினும் பிராமி எழுத்திற்குரிய மெய் எழுத்துக்களின் வடிவம் அல்லது சாயல் நிலை கொரிய மொழியின் எழுத்துக்களில் காணமுடிகின்றது. உயிர், மெய் ஆகிய இருவேறு எழுத்துவடிவங்களை அமைத்துக் கொண்ட முறையால் சீன, ஜப்பானிய மொழிகளின் எழுத்துக்களிலிருந்து இதன் எழுத்து வரிவடிவங்களும் வேறுபடுகின்றன.

| BRAMHMI SCRIPT | | HUNGUL SCRIPT | |
|---|---|---|---|
| 𑀓 | க | ㄱ | k/g |
| 𑀦 | ந | ㄴ | n |
| 𑀝 | ட | ㄷ | t/d |
| 𑀶 | ற | ㄹ | r/l |
| 𑀫 | ம | ㅁ | m |
| 𑀧 | ப | ㅂ | p/b |
| 𑀘 𑀘 𑀘 | ச | ㅅ | s |
| 𑀗 | ங | ㅇ | ng/ah |
| 𑀚 | ஜ | ㅈ | j |
| 𑀯 𑀯 | வ | ㅊ | ch |
| 𑀢 | த | ㅋ | kh |
| 𑀧 | ப | ㅌ | th |
| 𑀳 | ஹ | ㅍ | ph |
| | | ㅎ | h |

# 60. புதுக்கோட்டை மாவட்டக் குடைவரைக் கோயில்கள்*

ஜெ.ராஜாமுகமது, புதுக்கோட்டை

பெருங்கற்காலப் பண்பாட்டுச் சின்னங்களும், சமண முனிவர்கள் வாழ்ந்த பிராமி எழுத்துடன் கூடிய குகைத்தளங்களும், சங்க இலக்கியங்கள் குறிக்கும் சில நாட்டுப் பகுதிகளும், ஊர்களும், புதுக்கோட்டைப் பகுதியில் உள்ளன.[1] எனவே, புதுக்கோட்டைப் பகுதி வரலாற்றுத் தொன்மைச் சிறப்பு மிக்கதாகும். இயற்கையாகவே புதுக்கோட்டைப் பகுதியில் பாறைகளும், குன்றுகளும், மலைகளும் மிகுதி. பல ஊர்ப் பெயர்கள் மலையுடன் தொடர்பு கொண்டுள்ளன.[2]

தமிழ்நாட்டை ஆண்ட மன்னர் குலங்களில் பெரும்பாலோரின் ஆட்சி புதுக்கோட்டையில் நிலவியதற்கான சான்றுகள் கிடைக்கின்றன. சங்க காலத்தில் இப்பகுதியின் தென்பகுதி பாண்டியப் பேரரசுக்கும், வடபகுதி உறையூர் சோழப் பேரரசுக்கும் உட்பட்டிருந்தன.

பாண்டியன் கடுங்கோனின் (கி.பி. 590-620) முதல் பாண்டிய பேரரசில் புதுக்கோட்டைப் பகுதி உட்பட்டிருந்தது. அவனது மேலாண்மைக்குட்பட்டு முத்தரையர் போன்ற சிற்றரசர்கள் இப்பகுதியை ஆண்டிருக்க வேண்டும். கோச்சடையன் ரணதீரன் காலத்துக் (கி.பி. 710-740) கல்வெட்டு[3] குடுமியான்மலையிலும், மாறன்சடையன் முதலாம் வரகுணன் காலத்துக் கல்வெட்டு (கி.பி. 765-815) திருக்கோகர்ணத்திலும்[4] குடுமியான்மலையிலும்,[5] நீர்ப்பழனியிலும்[6] புதுக்கோட்டைக்கு அருகிலுள்ள கவிர்நாட்டுக் கண்மாயிலும்[7] கண்ணனூரிலும் காணப்படுகின்றன. முதலாம் பாண்டியப் பேரரசின் கடைசி மன்னனது காலம் வரை (கி.பி. 946-964) இப்பகுதி பாண்டியரின் ஆளுகையில் இருந்தது. இம்மன்னர்கள் தங்களது அரசியல் திறனோடு தங்களது கலைத்திறனையும் இங்கு பதிந்து வைத்துள்ளனர். பல்லவ மன்னர்கள், இரண்டாம் நந்திவர்மன் (கி.பி. 710-765) தந்திவர்மன் (கி.பி. 775-826) நிருபதுங்கவர்மன் (கி.பி. 849-875) ஆகியோரது கல்வெட்டுகளும், இங்கு காணப்படுவதால் சிற்சில பகுதிகளில் பல்லவரின் ஆதிக்கம் தலையெடுத்திருந்ததைக் காட்டுகின்றன.

கி.பி. 10 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் எழுச்சி பெற்ற சோழப் பேரரசின் விஜயாலய சோழன் (கி.பி. 871-967) காலத்திலிருந்து ஆதிராஜேந்திரன் காலம் (கி.பி. 1068-1071) வரை சோழர்களின் ஆட்சிச் சிறப்பைக் கண்டது புதுக்கோட்டை. சோழர்களுக்கு உட்பட்ட சிற்றரசர்களாக இப்பகுதியில் கொடும்பாளூர் வேளிர் ஆட்சி செய்துள்ளனர். சாளுக்கிய சோழரின் ஆட்சி குறித்த கல்வெட்டுகளும் இங்கு காணப்படுகின்றன.

---

* கோயிலூர் ஆதினம் அறக்கட்டளைச் சொற்பொழிவு, கோவை ஆவணம் எண் : 18 வெளியீட்டு விழாவில் நிகழ்த்தியது.

பதிமூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து, இரண்டாவது பாண்டியப் பேரரசின் ஆட்சிக்குட்பட்டு, கி.பி. 1357 வரை தொடர்ந்திருந்தது. இக்கால அரசியல் சமுதாயப் பொருளாதார வரலாற்றினை இங்கு கிடைக்கும் ஏராளமான கல்வெட்டுகள் தெளிவுபடுத்துகின்றன. சிறிது காலம் மதுரையைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட (கி.பி. 1334-1371) டெல்லி சுல்தான்களின் ஆட்சிக்குட்பட்டிருந்தது. கி.பி. 1371ல் விஜயநகர ஆட்சியின் கீழ் வந்தது. விஜய நகர மன்னர்களின் பிரதிநிதிகளாக, பின்னர் 16-ஆம் நூற்றாண்டு முதல் நாயக்கர்கள் ஆட்சி செய்தனர். 1660ஆம் ஆண்டு வாக்கில் புதுக்கோட்டையில் தொண்டைமான்களின் ஆட்சி நிறுவப்பட்டு 1947 ஆம் ஆண்டு வரை நீடித்திருந்தது.

புதுக்கோட்டை பகுதியில் பல்வேறு மன்னர்களின் ஆட்சி நிலைபெற்றிருந்ததால் இப்பகுதி தமிழகத்தின் கலை அருங்காட்சியகமாக விளங்கியது. இங்கு குடைவரைக் கோயில்களோடு பாண்டிய, சோழ விஜயநகர நாயக்க மன்னர்களது கட்டுமானக் கோயில்களும் ஏராளமாக உள்ளன. தமிழக ஓவியக் கலைக்கு எடுத்துக்காட்டான ஓவியங்கள் உள்ளன. தமிழக இசை வரலாற்றிற்குச் சான்றான செய்திகளும் நிறைய உண்டு.

இந்தியாவில் குடைவரைக்கலை கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் தொடங்கியதாக அறிகிறோம். இக்கலையைப் புகுத்திய பெருமை மௌரிய அசோகனைச் சாரும். (கி.மு. 300) பௌத்த, சமண கலைகளிலிருந்து பின்னர் இக்கலைப்பாணியைப் பின்பற்றி குப்தர் கலை வளர்ச்சி பெறலாயிற்று. இந்தியாவில் சுமார் 1200க்கும் மேற்பட்ட குடைவரைகள் உள்ளன. இவற்றில் தமிழ்நாட்டில் மட்டும் 67 குடைவரைகள் காணப்படுகின்றன.[9] புதுக்கோட்டைப் பகுதியில் பதினாறு உள்ளன. இது இப்பகுதியின் தொல்லியல் சிறப்பிற்குப் பெருமை சேர்க்கிறது.

தக்காணம் மற்றும் வட இந்தியப் பகுதிகளுடன் தமிழ்நாட்டை ஆண்ட பல்லவர் மற்றும் பாண்டியர் கொண்டிருந்த அரசியல் தொடர்பினால் குடைவரைக் கலைத் தென்புலத்திற்கு வரலாயிற்று. பல்லவ மன்னன் மகேந்திரவர்மன் காலத்திலிருந்து கருநாடக சாளுக்கியர்களுடனும், ராஷ்டிரகூடர்களுடனும் பல போர்கள் நிகழ்ந்துள்ளன. இதேபோன்று பாண்டிய மன்னன் கோச்சடையன் ரணதீரன் காலத்திலிருந்து அவனது பேரன் ஸ்ரீவல்லபன் காலம் வரை கருநாடக, கங்க பகுதிகளுடன் பல போர்கள் நிகழ்ந்துள்ளன. இப்பகுதிகளுக்கிடையே அரசியல் காரணங்களினால் ஏற்பட்ட இத்தகைய தொடர்பின் காரணமாக கலைப் பரிமாற்றங்களும் ஏற்பட்டன. கலைஞர்களுக்கு வழித்தடம் உருவானது.

தக்காணத்திலிருந்து தமிழகத்திற்கு வந்த குடைவரைக் கலையினை தமிழகத்தில் அறிமுகம் செய்தவன் பல்லவ மகேந்திரவர்மன் ஆவான் என்ற கருத்து நிலவுகிறது. இம்மன்னன், தான் குடைவித்த மண்டகப்பட்டு குடைவரைக் கல்வெட்டில் செங்கல், மரம், உலோகம் மற்றும் சுதை ஆகிய அழியும் பொருட்களைத் தவிர்த்து அக்குடைவரையை நிர்மாணித்ததாக சொல்லப்பட்டிருக்கிறது. இதன் அடிப்படையில் குடைவரைக் கலையைத் தமிழகத்தில் முதன்முதலில் அறிமுகப்படுத்தியது பல்லவரே எனவும்

சொல்லப்படுகிறது. இதுபோன்றதொரு செய்தி வேறெங்கும் காணப்படவில்லை. ஆனால், இக்கல்வெட்டில் மகேந்திரவர்மன்தான் தமிழகத்தில் முதன்முதலாக குடைவரைக் கலையைப் புகுத்தினான் என்ற வகைக்கான செய்தியும் இல்லை எனவும், இதற்கு முன்பே 6-ஆம் நூற்றாண்டிலேயே தமிழகத்தில் பிள்ளையார்பட்டியில் குடைவரை எடுக்கப்பட்டுள்ளதாக ஆய்வாளர்கள், அறிஞர்கள் பலர் கூறுகின்றனர். பிள்ளையார்பட்டி குடைவரைக்கு இக்கால வரம்பை நிர்ணயிக்க அங்கு காணப்படும் ஒரு கல்வெட்டின் எழுத்தமைதி மட்டுமே அடிப்படையாகக் கொள்ளப்படுகிறது.

கோயில்களின் தூண்களிலுள்ள போதிகை அமைப்பு கால நிர்ணயத்திற்குப் பெரிதும் பயன்படுகிறது. சாளுக்கிய பகுதியில் கி.பி. 578 இல் எழுப்பிக்கப்பட்ட குடைவரைக் கோயில்களில் தரங்க போதிகை அமைப்பு காணப்படுகிறது. மகேந்திரவர்மனின் குடைவரைகளில் சற்று பிந்திய காலத்தில் தான் இவ்வமைப்பு இடம் பெறுகிறது. (திருச்சி, சீயமங்கலம்). ஆனால் பல்லவரது சமகால மன்னர்களான பாண்டியர் குடைவரைகளில் தரங்க போதிகை வளர்ச்சியுற்ற நிலையில் காணப்படுகிறது. பிள்ளையார்பட்டி குடைவரையிலும் தரங்கபோதிகை வளர்ச்சியுற்ற நிலையில் காணப்படுகிறது. இக்குடைவரையின் காலத்தை இரா.நாகசாமி கூறுவது போல் 5-ஆம் நூற்றாண்டு எனக் கொண்டால் தக்காணத்திற்கு மட்டுமல்லாது, வட இந்தியாவில் உள்ள வேறு சில குடைவரைகளுக்கும் பிள்ளையார்பட்டியையே முன்மாதிரியாக ஏற்க வேண்டி வரும் எனவும், அல்லது ஐ.மகாதேவன் போன்றவர்கள் இங்குள்ள கல்வெட்டின் காலத்தை கி.பி. 6 ஆம் நூற்றாண்டு எனக் கூறியிருப்பதையும் கு.சேதுராமன் சுட்டிக்காட்டுகிறார்.[10] இச்செய்திகளைக் கொண்டு பிள்ளையார்பட்டி குடைவரையின் காலத்தை நிர்ணயம் செய்திருப்பது குறித்து பெரும் ஐயப்பாடு எழுகிறது. இந்தக் குடைவரையில் காணப்படும் ஒரு கல்வெட்டின் எழுத்தமைதியைக் கொண்டு கால நிர்ணயம் செய்யப்பட்டுள்ளது. குடைவரையை எடுப்பித்த மன்னன் காலம், மரபு ஆகிய எதையும் சுட்டாத இக்கல்வெட்டு ஒன்றை மட்டுமே கொண்டு, குடைவரையின் காலத்தை நிர்ணயம் செய்வதை விட, இதன் கலையம்சம், இப்பகுதியின் அரசியல் வரலாறு, பிறபகுதியுடன் தொடர்பு ஆகியவற்றை தொடர்புபடுத்தி, இது குறித்து மீளாய்வு செய்தால் இக்குடைவரையின் காலம் குறித்து தெளிவு கிடைக்கும். எனினும் பல்லவமகேந்திரனின் சமகால பாண்டிய மன்னனான மாறன்சேந்தன் காலக் கல்வெட்டு (கி.பி. 617) மலையடிக்குறிச்சி குடைவரையில் காணப்படுவதால் ஏறத்தாழ இக்காலகட்டத்தில் பாண்டி நாட்டிலும், குடைவரைக்கலை வழக்கத்திற்கு வந்ததாகக் கொள்வது ஏற்புடையதாகும்.

புதுக்கோட்டையை உள்ளடக்கிய பாண்டிய நாட்டு பகுதியில் குடைவிக்கப்பட்ட குடைவரைகளில் சாளுக்கிய ராஷ்டிரக்கூட கலை அமைப்பைப் பின்பற்றியும், மேலும் பல சிறப்பு அம்சங்களும் சேர்க்கப்பட்டு உள்ளன. வாதாபி, ஐஹோல் கோயில்களில் அபிஷேக நீர் வெளியே செல்ல

பிரநாளங்கள் அமைக்கப்பட்டுள்ளன.[11] இது போன்ற அமைப்பு பாண்டி நாட்டு குடைவரைகளில் காணப்படுகின்றன. சமகால பல்லவர் கோயில்களில் இவை காணப்படவில்லை. ஆகம விதிகளின்படி பாண்டி நாட்டு குடைவரைகளில் வழிபாடு நடைபெற்றதை இது காட்டுகிறது. கருவறையில் சிவலிங்கம் அமைக்கும் மரபு தக்காணப் பகுதியிலிருந்து பாண்டிய நாட்டிற்கு பரவியது. பாண்டிய நாட்டின் பெரும்பாலான குடைவரைகளில் கருவறைகளில் தாய்ப்பாறையிலேயே சிவலிங்கம் அமைக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. இறைவன் பிரதிஷ்டை செய்யப்பட்டு சம்ப்ரோக்ஷணம் என்னும் நீர்த்தெளிக்கும் சடங்கு நடைபெற்றதாக ஆனைமலைக் கல்வெட்டு குறிப்பிடுகிறது.[12] மேலும் பாண்டியர் குடைவரைகளில் இறைவடிவங்களும் அதிகம் காணப்படுகின்றன. மகேந்திரவர்மன் கலைப்பாணியினை ஒட்டி முகப்புத் தூண்கள் கீழும், மேலும் நான்கு பட்டையாகவும் நடுவில் எட்டு பட்டையாகவும் வடிக்கப்பட்டுள்ளன. உண்மையில் இது சாளுக்கியர் கலைப்பாணியே ஆகும். ஏழு அன்னையர் (சப்தமாதர்) விநாயகர், மூத்ததேவி (ஜேஷ்டா) வழிபாடு சாளுக்கிய நாட்டிலிருந்து பாண்டிய நாட்டிற்குள் நுழைந்தது. பாண்டியநாட்டுக் குடைவரைகள் பெரும்பாலானவற்றில் விநாயகர் புடைப்புச் சிற்பம் காணப்படுகிறது. நரசிம்மவர்ம பல்லவன் வாதாபி படையெடுப்பின் போது அங்கிருந்து விநாயகர் சிற்பத்தினைத் தமிழகத்திற்கு கொண்டு வந்து அறிமுகப்படுத்தியதாகச் சொல்லப்படுகிறது. இது குறித்து நிறைய கருத்து வேறுபாடுகளும் உண்டு. வாதாபி குடைவரை எண் ஒன்றில் (கி.பி 578) விநாயகர் சிற்பம் நின்ற நிலையிலும்,[13] சாளுக்கியரின் பந்ததந்திரபாது சிவன்கோயில் (கி.பி. 635-642) தேவகோட்டத்திலும் விநாயகர் வலம்புரியாகவும், நான்கு கைகளுடனும் காட்டப்பட்டுள்ளார்[14] என்ற செய்திகள் இங்கு கவனிக்கத்தக்கது. எனவே இக்கால கட்டத்திற்குப் பின்பே விநாயகர் வழிபாடு பாண்டிய நாட்டிற்கு வந்ததாக கொள்வது ஏற்புடையதாகும். குடைவரையின் கருவறையின் முன்பு மண்டபங்கள் அமைத்திருப்பது பாண்டிய நாட்டு கலைச் சிறப்பாகும். இத்தகைய கலை அம்சங்களுடன் கூடிய குடைவரைகள் காவேரி ஆற்றிற்கு தெற்கிலிருந்து பாண்டி நாட்டின் கடைசி எல்லை வரை நிறைய காணப்படுகின்றன. இவை ஒவ்வொன்றும் தனித்தன்மையுடன் விளங்குகின்றன. புதுக்கோட்டைப் பகுதி குடைவரைகள் முன் சொன்னவாறு பொதுவான பாண்டிய நாட்டு குடைவரைக் கலை அம்சங்களுடன் அமைந்துள்ளன.

புதுக்கோட்டைப் பகுதியில் 17 குடைவரைகள் காணப்படுகின்றன. ஒரு சிறிய மாவட்ட எல்லைக்குள் இத்தனை குடைவரைகள் அமைத்திருப்பது இப்பகுதியில் ஆட்சி செய்த மன்னர்களின் கலையார்வத்தைக் காட்டுவதாக அமைவதோடு, இக்கலையின் சோதனைக் களமாகவும் விளங்கியதை தெரிந்து கொள்ள முடிகிறது. புதுக்கோட்டை மாவட்டத்தில் கீழ்க்கண்ட ஊர்களில் குடைவரைகள் காணப்படுகின்றன. பூவாலைக்குடி, மலையடிப்பட்டி தேவர்மலை, திருமயம் ராயவரம், திருக்கோகர்ணம், குன்றாண்டார்கோவில், நார்த்தாமலை குடுமியான்மலை மற்றும் மாங்குடி மலையக்கோவில் (கிழக்கு) குடைவரை, திருமயம் மேல்குடைவரை, மாங்காடு, ராயவரம், பூவாலைக்குடி ஆகிய ஊர்களிலுள்ள

குடைவரைகள் மலையில் நேரடியாக குடைவிக்கப்பட்ட கருவறைகளுடன் மட்டும் அமைந்துள்ளன (Cella Type). திருமயம், (சிவன்) மலையக்கோவில் (தெற்கு) ஆகிய குடைவரைகள் மண்டபத்தின் ஓர் ஓரத்தில் கருவறையுடன் அமைந்துள்ளன. மலையடிப்பட்டி சிவன் குடைவரையில், மண்டபத்தின் ஒரு மூலையில் கருவறை அமைந்துள்ளது. இறைவடிவங்கள் நிறைந்து காணப்படுவது புதுக்கோட்டை குடைவரைகளின் சிறப்பாகும். இத்தகைய இறைவடிவங்கள் சில தமிழகத்தில் முதன்முதலாக இங்குதான் அறிமுகப் படுத்தப்பட்டன என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. ஏழு தாய்மார் (சப்தமாதர்) சிற்பங்கள் சாளுக்கிய நாட்டிலிருந்து தமிழகத்திற்கு வந்து மலையடிப்பட்டியிலும், திருக்கோகர்ணத்திலும் அறிமுகம் பெறுகின்றன. பல குடைவரைகளில் விநாயகர் சிற்பம் காணப்படுகிறது. ஒரு சில குடைவரை தவிர ஏனையவற்றில் தாய்ப் பாறையிலேயே சிவலிங்கமும் அதன் பீடமும் அமைக்கப்பட்டுள்ளன. லிங்க பீடம் சதுரம், எட்டுப்பட்டை, வட்டம், ஆகிய வடிவத்தில் அமைக்கப்பட்டுள்ளன. அபிஷேக நீர் விழுவதற்கு கோமுகிக்குக் கீழ் ஒரு சிறிய பள்ளம் வெட்டப்பட்டுள்ளது. (பின்னாளில் எல்லாக் குடைவரைகளிலும் இந்தக் குழியினை மூடிவிட்டு அதன் மீது நீர் செல்ல புதிய தாரை அமைத்து நீர் வெளியே செல்ல ஏற்பாடு செய்துள்ளனர். பல குடைவரைகளில் இசை குறித்த செய்திகளடங்கிய கல்வெட்டுக்கள் உள்ளன. பல குடைவரைகளில் நந்தி காணப்படுகிறது. பல்லவரது குடைவரைகளில் நந்தி இல்லை. தேவர்மலையில் பாசுபதலகுலிச தொடர்பினால் லகுலிசர் சிற்பம் காணப்படுகிறது.

தொடக்க கால பாண்டிய பேரரசு பல சிற்றரசுகளை உள்ளடக்கி இயங்கி வந்தபடியால் உறுதியற்றிருந்தது. எனவே பாண்டியரின் குடைவரைகள் பலவற்றின் காலத்தைக் கணிக்க இயலவில்லை. புதுக்கோட்டையிலும் இதே நிலைதான். பூவாலைக்குடி, நார்த்தாமலை (பலியிழிச்சுரம்) மலையடிப்பட்டி (சிவன்-வாகிசுவரர்) ஆகிய குடைவரைகளில் மட்டுமே, குடைவித்த மன்னர் குறித்த செய்திகள் கிடைக்கின்றன. ஏனைய குடைவரைகளின் காலத்தை கலை அமைப்பு, வழிபாட்டு நடைமுறைகள், பிற வரலாற்றுச் செய்திகள் ஆகியனவற்றைக் கொண்டு கணிக்க வேண்டியுள்ளது. பாண்டியன் நெடுஞ்சடையன் காலத்தில் பல குடைவரைகள் எழுப்பிக்கப்பட்டன. புதுக்கோட்டை குடைவரைக் கோயில்கள் எழுப்பிக்கப்பட்ட காலந்தொட்டு மன்னர்கள் மற்றும் மக்களின் ஆதரவைப் பெற்று வழிபாட்டில் தொடர்ந்து இருந்து வந்துள்ளன. இது தக்காண குடைவரைகளிலிருந்து முற்றிலும் மாறுபட்டதொரு நிலையாகும். பல்லவரின் பெரும்பாலான குடைவரைகளிலும் இந்நிலையைக் காண இயலவில்லை. பல ஊர்களில் குடைவரையை உள்ளடக்கி பிற்காலத்தில் கட்டுமானங்கள் பல எழுந்துள்ளன. குடைவரைகள் எழுப்பிக்கப்பட்டக் காலத்தில் சைவமும், வைணவமும் எழுச்சி பெற்றன. திருமங்கை ஆழ்வார் திருமயத்திலுள்ள அரங்கனைப் பாடியுள்ளார். சைவ சமய அதிதீவீர காளமுக, பசுபத லகுலிச மகேச்வர பிரிவுகளும் இங்கு செல்வாக்கு பெற்றிருந்தன. சமணம் வலுவிழுந்து போனது. புதுக்கோட்டை

குடைவரைகளை பாண்டிய மன்னர்களும், முத்தரையர்களும் போற்றியுள்ள செய்திகள் தெரியவருகின்றன.[15] சித்தன்னவாசல் குடைவரை சமணம் சார்ந்தது. திருமயம் மற்றும் மலையடிப்பட்டி குடைவரை ஒவ்வொன்று வைணவத்திற்கும், ஏனையவை சைவத்திற்கும் உரியன. புதுக்கோட்டை குடைவரைகளைக் குறித்த சில சிறப்புச் செய்திகள் இங்கு ஆய்வு செய்யப்படுகின்றன.

**திருமயம் - மலைக்குடைவரை**



திருமயம் கோட்டைக்குச் செல்லும் மலைப்பாதையில் மேற்கு நோக்கியுள்ள குன்றில் கீழிருந்து சுமார் 15 அடி உயரத்தில் சிறியதொரு குடைவரை குடைவிக்கப்பட்டுள்ளது. குடைவரைக்குச் செல்ல தற்போது ஏணி அமைக்கப்பட்டுள்ளது. சிறிய கருவறை மட்டும் உண்டு. உள்ளே தாய் பாறையிலேயே எடுக்கப்பட்டுள்ள சதுரவடிவான ஆவுடையுடன் கூடிய லிங்கம். வடக்கு நோக்கியுள்ள கோமுகியை ஒரு குள்ள மனித உருவம் தாங்கி நிற்கிறது. நேர்த்தியாக செய்யப்பட்டுள்ள இக்குடைவரை வாயிலின் இடது பக்கத்தில் பரிவாதினி என்ற எழுத்துடைய கல்வெட்டு உள்ளது. எழுத்துக்கள் மிகவும் அழிந்த நிலையில் உள்ளன. வேறு கல்வெட்டுகள் இல்லை. இக்குடைவரை கி.பி. 8 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் எடுக்கப்பட்டதாகக் கொள்ளலாம். புதுக்கோட்டை மாவட்டத்தின் காலத்தால் முற்பட்ட குடைவரை இதுவாகலாம் என சு.ராஜவேலு கருதுகிறார்.[16] ஆயினும் இதுவும் ஏனை குடைவரையின் சமகாலத்தைச் சேர்ந்தது எனக் கொள்ள வேண்டியுள்ளது.

### பூவாலைக்குடி

திருமயம் வட்டத்தில் உள்ள பூவாலைக்குடியில் மிகத் தாழ்வனதொரு சிறிய குன்றில் ஒரு குடைவரை குடைவிக்கப்பட்டுள்ளது. குன்றில் நேரடியாக கருவறை மட்டும் உள்ளது. கருவறையின் வெளியே உள்ள பாறையின் இருமருங்கிலும் கோட்டம் போன்ற அமைப்பு காட்டப்பட்டுள்ளது. குடைவரையின் உள்ளே சதுர வடிவில் தாய்ப் பாறையில் வடிக்கப்பட்ட சிவலிங்க பீடம் உள்ளது. இறைவனின் பெயர் புஷ்பவனேசுவரர் என்பதாகும். முத்தரைய சிற்றரசன் பூதிக்களரி ஆயின அமரூன்றி முத்தரையன் இக்குடைவரையை எழுப்பித்ததாக இங்குள்ள கல்வெட்டு தெரிவிக்கிறது.[17] இவன் இரண்டாம் பரமேஸ்வர வர்ம பல்லவன் (கி.பி. 700-710) மற்றும் பாண்டியன் கோச்சடையன் ரணதீரன் சடையன் மாறனுக்கும் சமகாலத்தவன் ஆவான்.[18] இங்குள்ள குலோத்துங்க சோழன் காலத்து கல்வெட்டு, இறைவனைப் பூவாலைக்குடி மகாதேவர் எனவும், (பு.க. 222) குலசேகர பாண்டியன் காலக் கல்வெட்டு திருப்பூவாலைக்குடி உடைய நாயனார் (பு.க.440) எனவும் அழைக்கிறது. குன்றின் மேற்கு முகத்தில் விநாயகர் புடைப்புச் சிற்பம் காணப்படுகிறது. இதன் உருவ அமைப்பு இதனுடைய பழைமையைக் காட்டுவதாக உள்ளது. எழிலான இதன் அமைப்பு பிற குடைவரைகளில் காணப்படும் விநாயகர் சிற்பங்களிலிருந்து வேறுபடுகிறது.

### மாங்குடி



குளத்தூர் வட்டத்தில், குடுமியான்மலைக்கு அருகிலுள்ள மாங்குடியில் மிகச் சிறியதொரு, தாழ்வான குன்றில் கருவறை மட்டும் உள்ள குடைவரை குடைவிக்கப்பட்டுள்ளது. குகையின் உயரம் 5½ அடி நீளம் சுமார் 4 அடி, அகலம் 2 அடி. சிறியதொரு வாயில் உள்ளே விநாயகர் உருவம் (பிற்கால

கலையமைப்பில்) புடைப்புச் சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளது. கல்வெட்டுக்கள் ஏதும் இல்லை. இதுவும் தொடக்ககாலக் குடைவரை ஆகலாம்.

## மலையக்கோவில் (கிழக்கு குடைவரை)



திருமயம் வட்டம், மலையக் கோவிலில் உள்ள நெடிய குன்றின் கிழக்குச் சரிவில் சிறியதொரு குடைவரை உள்ளது. இதில் கருவறை மட்டும் உள்ளது. வாயிலின் இருமருங்கிலும் மாடம் போன்ற அமைப்பு காட்டப் பட்டுள்ளது. குடைவரைக்கு முன்னால் இருந்த அர்த்த மண்டபம், மகா மண்டபம் ஆகியன அழிந்துபட்டதற்கான அடையாளங்கள் காணப்படுகின்றன. சிவலிங்க பீடம் எட்டு பட்டையாக உள்ளது. கிழக்கு நோக்கியுள்ள இறைவனின் பெயர் ஸ்ரீவரமுடைய நாயனார் என இங்குள்ள குலசேகர பாண்டியனின் கல்வெட்டு கூறுகிறது. வடக்கு நோக்கியுள்ள கோமுகியை கீழிருந்து ஒரு சிங்கம் தாங்கியுள்ளது. வாயிலின் இடது பக்கம் 'பரிவாதினி' என்ற கல்வெட்டும், அதன்கீழ் இரண்டு கல்வெட்டுகளும் உள்ளன.[19] (கற்கபப்படுவதுகாண், குணசேனன் செய்வித்த பரிவாதினி) இக்கல்வெட்டில் கிரந்தம், வட்டெழுத்து, தமிழ் எழுத்துக்கள் கலந்து வந்து உள்ளது கவனிக்கத்தக்கது. குணசேனா என்பது பல்லவ மகேந்திரவர்மனின் புனைப்பெயர் எனவும். எனவே இக்கோயிலைக் குடைவித்தவன் மகேந்திரவர்மன் எனவும் சில ஆய்வாளர்கள் கூறியிருப்பது மறு ஆய்விற்குரியது.

## ராயவரம்

திருமயம் வட்டம், ராயவரத்தில் மிகச் சிறியதொரு தாழ்வான அழகானதொரு சிறிய குடைவரை எடுக்கப்பட்டுள்ளது. உள்பகுதி முழுதும் முற்றுப்பெறாத நிலையில் உள்ளது. இக்குடைவரை காலத்தால் மிகவும்

பிற்பட்டதாகும். இங்கு கல்வெட்டு ஏதும் இல்லை. இறைவன் மலைக்கொழுந்தீசுவரர் என வழங்கப்படுகிறார்.




**நார்த்தாமலை - பழியிலி ஈச்வரம்**

நார்த்தாமலை மேலமலையில் விஜயாலய சோழீச்வரம் கட்டுமான கோயிலுக்கு எதிரே மேற்கே உள்ள குன்றில் அமைந்துள்ள குடைவரை. இந்தச் சிறிய குடைவரையில் கருவற்ற மட்டும் காணப்படுகிறது. குடைவரை 8 அடி நீளம், 7½ அடி அகலம் 6½ அடி உயரம் கொண்டது. உள்ளே வட்ட வடிவிலான சிவலிங்கம் வைக்கப்பட்டுள்ளது. இது தாய்ப் பாறையில் செய்யப்பட்டது அல்ல. இக்கோயிலுக்குரிய அழகிய துவாரபாலகர் சிற்பங்கள் ஆகியன 1940 ஆம் ஆண்டு வாக்கில் இங்கு அகழ்வாய்வு செய்த போது கண்டுபிடிக்கப்பட்டு இங்கு வைக்கப்பட்டுள்ளன. குடைவரையின் முன்பு காணப்படும் பழுதடைந்த மண்டபத்தின் அடிப்பகுதியில் காணப்படும் பல்லவர்காலக் கல்வெட்டு ஒன்று ஸ்ரீகோயில் என்று அழைக்கப்படும் இக்குடைவரையைக் குடைந்தெடுத்தவன் விடேல் விடுகு முத்தரையன் மகன் சாத்தன் பழியிலி ஆவான் எனக் கூறுகிறது. இவன் பல்லவ மூன்றாம் நந்திவர்மன் (கி.பி. 826-849) மற்றும் ஸ்ரீமாறவல்லபாண்டியன் (கி.பி. 815-862) ஆகியோரது சம காலத்தவன் ஆவான். இவனது பெயரிலேயே இது பழியிலிஈச்வரம் என அழைக்கப்படுகிறது. குடைவரைக்கு முன் முகமண்டபம், நந்தி மண்டபம், பலிபீடம் அமைத்தவன் சாத்தம் பழியிலியின் மகன் மீனவன் தமிழ்திரையன். சாத்தம் பழியிலியின் மகள் பழியிலி சிறிய நங்கை இக்கோயிலில் வழிபாட்டுக்கு கொடையளித்துள்ள செய்தியும் தெரிய வருகிறது.[20] ஒரு கோயில் எடுக்கப்பட்டு அது நின்று நிலைக்க முழுமையான அறங்களை மன்னர்கள் செய்துள்ளதை இதன் மூலம் அறிந்து கொள்ளுகிறோம்.

## குடுமியான்மலை

புதுக்கோட்டையிலிருந்து 16 கி.மீ. தூரத்திலுள்ள குடுமியான்மலைக் குன்றின் கிழக்குச் சரிவில் கிழக்கு நோக்கி மேலக்கோயில் என்ற குடைவரை அமைக்கப்பட்டுள்ளது. கல்வெட்டுகளில் இது திருமேற்றளி என்றும், மேற்றளி என்றும் குறிப்பிடப்படுகிறது. குடைவரையின் நீள் சதுர மண்டப முகப்பில் இரண்டு தூண்களும், இரண்டு அரைத் தூண்களும் உள்ளன. இவை கலசம், கம்பம் ஆகிய அங்கங்களைச் கொண்டு விளங்குகின்றன. மேலைச் சாளுக்கியரின் குடைவரைகளில் காணப்படும் தூண்களின் அமைப்பில் தூண்களின் முகப்பில் அழகிய தரங்க போதிகை அழகுடன் அமைக்கப்பட்டுள்ளது. குடைவரையின் அர்த்த மண்டபத்தின் வடக்கு. தெற்கு சுவர்களில் இரு கைகளுடன் கூடிய அழகிய துவார பாலகர் சிற்பங்கள் உள்ளன. இச்சிற்பங்கள் பாம்பு சுற்றியதொரு கதை மீது சாய்ந்து நிற்பது போல் வடிக்கப்பட்டுள்ளன. ஒரு சிற்பம் மட்டும் முப்புரிநூலுடன் காணப்படுகிறது. கைகளில் சர்ப்பவளையும் உள்ளது. வாயிலுக்கு இடதுபுறச் சுவற்றின் கீழ்ப்பகுதியில் வலம்புரி விநாயகர் சிற்பம் அமைந்துள்ளது. கருவறையின் உள்ளே தாய்ப்பாறையிலேயே குடைவிக்கப்பட்ட சதுர வடிவ ஆவுடையார் லிங்கத் திருமேனி காணப்படுகிறது. கல்வெட்டுக்கள் இவ்வூரைத் திருநலக்குன்று எனவும் இங்குள்ள இறைவனை திருமூலட்டானத்து பெருமானடிகள் என்றும் அழைக்கின்றன. விநாயகர் சிற்பத்திற்கு சற்று மேலே "பரிவாதினி" என்ற கிரந்த எழுத்து கல்வெட்டு காணப்படுகிறது.

குடைவரையின் தெற்குப் பகுதியிலுள்ள பாறையில் இசை குறித்த கல்வெட்டு காணப்படுகிறது. இதனையொட்டி கி.பி. 12-13ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த விநாயகர் சிற்பம் ஒன்றும் உள்ளது. இந்த இசைக் கல்வெட்டு குடைவரையுடன் நேரடியான தொடர்பு பெறவில்லையாயினும், கோயிலின் வழிபாட்டு முறைகளில் இசை சிறப்புடன் இடம் பெற்று இருந்ததை தெரிந்து கொள்ள முடிகிறது. பரிவாதினி என்பது ஒரு வகை யாழ் எனவும், இது ஏழு அல்லது பெரு நாண் கொண்டது எனவும் சொல்லப்படுகிறது. ஆனால் இந்த இசைக் கருவிக்கும் இங்குள்ள இசைக் கல்வெட்டிற்கும் உள்ள தொடர்பு புலப்படவில்லை. இருப்பினும் இக்கல்வெட்டு குறித்த ஆய்வுகளும் தொடர்ந்து நடைபெறுகின்றன. சாளுக்கிய கலைப்பாணியின் தாக்கத்தினை இந்த குடைவரையில் அதிகமாக காணமுடிகிறது. குடைவரைக்கு முன்னால் உள்ளே மண்டபம் முற்கால சோழர் காலத்தில் கட்டப்பட்டது. தொடர்ந்து முன் மண்டபம் புதுக்கோட்டை தொண்டைமான் மன்னர்களால் கட்டப்பட்டுள்ளது. குடைவரையில் மட்டும் 20க்கும் மேற்பட்ட கல்வெட்டுகள் உள்ளன. பெரும்பாலும் கோயிலுக்குக் கொடையளித்த செய்திகளே இவற்றில் உள்ளன. இவற்றுள் காலத்தால் முற்பட்டது மாறன் சடையன் பாண்டியனின் காலக் கல்வெட்டாகும். எனவே, குடைவரை கி.பி.8ஆம் நூற்றாண்டில் எடுக்கப்பட்டதாகக் கொள்ளலாம். குடைவரை தனியொரு குன்றில் அமைந்துள்ளது. இதிலிருந்து சற்று கிழக்காக உள்ள சோழர்காலக் கோவில்,

பாண்டியர், விஜயநகர மன்னர்கள் காலத்தால் விரிவு பெற்று விளங்குகிறது. இக்கோயிலில் குடி கொண்டிருக்கும் இறைவன் சிகாநாதர் அல்லது குடுமிநாதர் என்று அழைக்கப்படுகிறார். இதைக் கொண்டே பின்னாளில் இவ்வூர் குடுமியான்மலை என அழைக்கப்படலாயிற்று. குடைவரையை ஒட்டியுள்ள இசை குறித்த கல்வெட்டு ஆய்வாளர்களின் கவனத்தை கவர்ந்து வருகிறது. இது குறித்து ஏற்புடையதொரு கருத்து இன்னும் எட்டப்படவில்லை என்று கூறலாம்.

**குன்றாண்டார் கோயில்**

கீரனூர் வட்டத்தில் உள்ள குன்றாண்டார்கோவில் உள்ள குன்றில் குடைவரை அமைந்துள்ளது. கிழக்கு நோக்கி அமைந்துள்ள குடைவரையின் மண்டப முகப்பில் தரங்க போதிகையுடன் கூடிய இரண்டு தூண்களும், இரண்டு அரைத்தூண்களும் காணப்படுகின்றன. இவை மேலும், கீழும் சதுரமாகவும், நடுவில் எட்டுப் பட்டையாகவும் காணப்படுகின்றன. குடைவரையினை ஒட்டி பிற்காலத்தில் கட்டப்பட்ட மண்டபங்கள் உள்ளன.

குடைவரையின் கருவறையில் தாய்ப் பாறையிலேயே அமைந்த எட்டுப்பட்டை கொண்ட ஆவுடையாருடன் லிங்கத் திருமேனி உள்ளது. இறைவன் பர்வதகிரிசுவரர் என்று அழைக்கப்படுகிறார். குடைவரையில் காணப்படும் காலத்தால் முற்பட்டக் கல்வெட்டு, இரண்டாம் நந்திவர்ம பல்லவன் காலத்தைச் சேர்ந்தது ஆகும். (கி.பி. 710 - 775). இக்காலத்தில் பல்லவரின் கீழ் ஆண்டு வந்த முத்தரையரின் கலைப் பணியாகும் இக்குடைவரை.

மண்டபத்தின் வடக்குச் சுவற்றில் வலம்புரி விநாயகர் சிற்பம் உள்ளது. இடது கையிலும் துதிக்கையிலும் மோதகம் காணப்படுகிறது. வடக்குச் சுவற்றில் அழகியதொரு சிற்பத் தொகுதி காணப்படுகிறது. உமையுடன் கூடிய சிவபெருமான்! இருவரும் அமர்ந்த நிலையில் காணப்படுகின்றனர். சிவபெருமான் ஜடாமகுடம் தறித்து அணிகலன்கள் அதிகமின்றி காணப்படுகிறார். நான்கு கைகள்-முப்புரிநூல் வலமிருந்து இடமாக அமைந்துள்ளது. முன்வலக்கை முப்புரி நூலைப் பிடித்துள்ளது. பொதுவாக சிவபிரான் தனது பின் வலக்கையில் மழுவும், பின் இடக்கையில் மானும் கொண்டு விளங்குவார். ஆனால் இங்கு பின் இடது கையில் மழுவும், வலது கை சடையைப் பிடித்தவாரும் உள்ளது. உமையவள் வலக்கையில் மட்டும் மலர் பிடித்துள்ளார். உமையவள் அருகில் ஒரு சேடிப் பெண். பிற குடைவரைகளில் இத்தகைய சிற்பம் இல்லை. மிகவும் எழிலான சிற்பம்! இதனை சோமாஸ்கந்தர் என சில ஆய்வாளர்கள் கூறியிருப்பது சரியல்ல.

குடைவரையின் வாயிலுக்கு இருபுறமும் துவாரபாலகர் சிற்பங்கள் உள்ளன. இடது புறம் உள்ள துவாரபாலகர் பாம்பு சுற்றிய கதையின் மீது இடது கையை நீட்டி ஊன்றி, வலது கையினால் பிடித்துள்ளார். தலையின் இருமருங்கிலும் கொம்பு போன்ற அமைப்பு உள்ளது. இந்த அமைப்பைக் கொண்டு கொம்பு அணிந்து இருப்பதாக பொதுவாக சொல்லப்படுகிறது. ஆனால் இவை கொம்பு அல்ல. திரிசூலமாகும். திரிசூலத்தின் ஒரு நாக்கு

சிற்பத்தின் தலைக்கு பின் மறைந்து உள்ளது. இந்த சிற்பம் ஆயுத புருஷர் என அழைக்கப்படும். இவ்வகை சிற்பங்கள் சீயமங்கலம் பல்லவ குடைவரையிலும், சாளுக்கிய நாட்டு கோவில்களிலும் காணப்படுகின்றன. கோயிலில் மூலவரின் ஆயுதங்களை வாயிற் காப்போருக்கு ஆயுத அடையாளமாக வைப்பது வழக்கமாக இருந்துள்ளது. இங்கு சிவபெருமானின் ஆயுதமான சூலம் துவார பாலகருக்கு வைக்கப்பட்டுள்ளது.[21] வலது பக்கத்திலுள்ள அழகிய துவாரபாலகர் சிற்பம் ஒரு சிற்றரசன் போன்று உடையணிந்து இரு கைகளுடன் காணப்படுகிறது.

குடைவரையின் வடக்குப் புறத்திலுள்ள மாடத்தில் சண்டிகேசுவரர் உருவம் உள்ளது. குடைவரையின் தென்பக்கமுள்ள குன்றுப்பகுதியில் மற்றுமொரு குடைவரை எடுக்க முயற்சித்திருப்பதைக் குன்றில் காணப்படும் குடைவு மூலம் அறிகிறோம்.

பல்லவர் கல்வெட்டு (பு.க. 15) மூலவரை குன்றக்குடி தேவர் என்று அழைக்கிறது. தொடர்ந்து காலக்கிரமமாகக் காணப்படும் சோழர் மற்றும் விஜயநகர மன்னர்களின் கல்வெட்டுகள் கோயிலில் தொடர்ந்து வழிபாடு நடைபெற வழங்கப்பட்ட கொடைகள் குறித்த செய்தியினைத் தெரிவிக்கின்றன. குடைவரை எடுக்கப்பட்ட காலம் முதல் தொடர்ச்சியாக வழங்கப்பட்ட கொடைகள் மூலம் கோயிலின் செலவினங்கள் ஈடுகட்டப்பட்டதையும், பல்வேறு கால கட்டங்களில் எடுக்கப்பட்ட கட்டுமானங்கள் குறித்த செய்திகளும் இதன் மூலம் தெரிய வருகின்றன.

### திருக்கோகர்ணம்

புதுக்கோட்டை நகரின் புறநகர் பகுதியான திருக்கோகர்ணம் பிரகதாம்பாள் - கோகர்னேசர் கோவிலினுள் உள்ள தாழ்வான குன்றின் கிழக்குச் சரிவில் குடைவரை எடுக்கப்பட்டுள்ளது. இது கருவறையையும் சிறியதொரு அர்த்த மண்டபத்தையும் கொண்டது. முகப்பு சற்று உயரம் குறைவாக உள்ளது. இரண்டு தூண்களும், இரண்டு அரைத்தூண்களும் உள்ளன. கீழும் மேலும் சதுரமாகவும் நடுவில் எட்டுப்பட்டையாகவும் உள்ள தூணில் தரங்கப் போதிகை நன்றாக அமைந்துள்ளது. அர்த்தமண்டபத்தின் வடக்குச் சுவற்றில் கங்காதரர் சிற்பமும், தெற்கு சுவற்றில் வலம்புரி வினாயகரும் உள்ளனர். கங்கையை தனது முடியில் தாங்கி நிற்கும் சிவபெருமான் கங்காதரர் என்று அழைக்கப்படுகிறார். பகீரதனின் தவத்தால் ஆகாயத்திலிருந்து பூமிக்கு இறங்கிய கங்கை நதியின் வேகத்திலிருந்து அழிவுகளைத் தடுக்கும் பொருட்டு தனது விரிசடையில் சிவபெருமான் அதனைத் தாங்கி கொண்டார். எழிலான இந்த திரிபங்க சிற்பம், தமிழ்நாட்டில் காணப்படும் பன்னிரெண்டு கங்காதரர் சிற்பங்களுள் ஒன்றாகும் என்பது இதன் சிறப்பு. தெற்கு மாடத்தில் உள்ள வலம்புரி விநாயகர் லலிதாசனத்தில் அமர்ந்துள்ளார்.

கருவறையில் தாய்ப்பாறையிலேயே அமைக்கப்பட்ட சதுர வடிவ ஆவுடையாருடன் லிங்கத் திருமேனி காணப்படுகிறது. கல்வெட்டுகளில் மூலவர் திருவேட்பூர் கோகர்ணத்து மகாதேவர் என்று அழைக்கப்படுகிறார்.

இக்குடைவரையில் காணப்படும் காலத்தால் முற்பட்ட கல்வெட்டு மாறன் சடையன் காலத்தைச் சேர்ந்ததாகும்.



திருக்கோகர்ணம் குடைவரை குறித்து எழுதியுள்ள கே.ஆர்.சீனிவாசன்,[22] கே.வி.சௌந்தர்ராஜன்,[23] சு.இராஜவேலு[24] ஆகியோர் குடுமியான்மலை, திருமயம், மலையக்கோவில் ஆகிய இடங்களிலுள்ள குடைவரைகளில் உள்ளது போல் பரிவாதினி என்ற கிரந்த எழுத்து கல்வெட்டு திருக்கோகர்ணம் குடைவரையிலும் உள்ளதாகக் குறிப்பிட்டுள்ளனர். ஆனால், இக்குடைவரையில் (எமது ஆய்வுக் குழு) கள ஆய்வு மேற்கொண்ட போது குடவரையில் 'பரிவாதினி' என்ற சொல் கொண்ட கல்வெட்டு இல்லை என்பது தெரிய வந்துள்ளது. ஆனால், இங்கு பியீறதொரு கிரந்த எழுத்துக் கல்வெட்டு உள்ளது. இதில் பரிவாதினி என்ற எழுத்து இல்லை. (இதில் "ஸ்தாபனாச்சார்யோ, பாகதாச்சார்யா" என்று உள்ளது).

குடைவரையின் முன்னால் பிற்காலத்தில் மண்டபம் கட்டப் பட்டுள்ளது. குடவரைக்கு செல்லும் பாதையில் இடது புறம் பாதையில் ஏழு தாய்மார்களின் சிற்பங்கள் வெகு அழகாக செதுக்கப்பட்டுள்ளன.

**மலையக்கோவில் (தெற்கு)**

மலையக்கோவில் குன்றில் தெற்கு சரிவில் குடைவரை ஒன்று உள்ளது. இது கருவறையும் மண்டபமும் கொண்டது. நீண்ட மண்டபத்தின் கிழக்குப் பகுதியில் கருவறை மேற்கு நோக்கி அமைந்துள்ளது. மண்டபத்தின் மேற்கு சுவற்றில் வலம்புரி விநாயகர் சிலை உள்ளது. கருவறையில் தாய்ப் பாறையிலேயெ எடுக்கப்பட்ட லிங்கபீடம் சதுரமாக உள்ளது. இரண்டு தூண்களும், இரண்டு அரைத்தூண்களும் உள்ளன. தரங்க போதிகை உள்ளது. இறைவனின் பெயர் குறித்த கல்வெட்டு ஏதும் குடைவரையில் இல்லை. அருகிலுள்ள பனையூர் கோவினுல் கல்வெட்டு ஒன்றில்[25] காணப்படும் திருக்காளிசுவரர் என்னும் பெயர் மலையக்கோவில் சிவபெருமானைக் குறிப்பதாகக் கொள்ளப்பட்டு இப்பெயரிலேயே இறைவன் பெயர் பெற்றுள்ளார்.

**மலையடிப்பட்டி - சிவபெருமான்**

மலையடிப்பட்டி கீரனூருக்கு அருகில் உள்ளது. இங்குள்ள குன்றில் சிவபெருமானுக்கும், விஷ்ணு பெருமானுக்கும் ஆக இரண்டு குடைவரைகள் எடுக்கப்பட்டுள்ளன.

சிவபெருமானின் குடைவரை குன்றின் தெற்குப் பகுதியிலிருந்து குடைவிக்கப்பட்டுள்ளது. குடைவரையின் நடுவில் இரண்டு தூண்களும், இரண்டு அரைத்தூண்களும் உள்ளன. மேலும், கீழும் சதுரமாகவும் நடுவில் எட்டுப் பட்டையாகவும் எண் கோண வடிவிலான போதிகைகளுடன் தூண்கள் காட்சியளிக்கின்றன. கிழக்கு அரைத்தூணின் உட்பகுதியில் கருவறை சுவற்றிற்கு இடையில் சண்டிகேசுவரர் சிற்பம் உள்ளது. இவ்வாறு பரசு தாங்கி தனியே அமர்ந்த, காலத்தால் முற்பட்ட சண்டிகேசுவரர் சிற்பங்கள் பாண்டியர் குடைவரைகளிலேயே காணப்படுகின்றன. (குன்றாண்டார்கோவில், மலையடிப்பட்டி இவை கருவறையின் வடக்குப் பகுதியிலேயே காணப்படுகின்றன. சுகாசனத்தில் அமர்ந்திருக்கும் சிற்பம் வலதுகையில் பரசு வைத்துள்ளது. கல்வெட்டுச் சான்றுகளிலிருந்து சண்டிகேசுவரர் வழிபாடு இப்பகுதியில் சிறப்பு பெற்றிருந்ததைத் தெரிந்து கொள்ள முடிகிறது. நீள்சதுர மண்டபத்தின் கிழக்குப் பகுதியில் அமைந்துள்ள கருவறை மேற்கு நோக்கி உள்ளது. கருவறையின் உள்ளே வட்டமான லிங்க பீடம் வைக்கப்பட்டுள்ளது. கோமுகி மிக நீண்டுள்ளது. லிங்கம் தாய்ப்பாறையிலில்லாமல் தனியாக வைக்கப்பட்டுள்ளது. தாய்ப்பாறையிலில்லாமல் தனியாக வைக்கப்பட்டுள்ளது. தாய்ப்பாறையில் லிங்கபீடம் குடைவித்திருப்பதாக சு.ராஜவேலு கூறியிருப்பது சரியல்ல.[26] கருவறையின் வாயிலின் இரண்டு கைகளுடன் காணப்படும் துவாரபாலகர் சிற்பங்கள் அழகு மிக்கவை.



குன்றாண்டார் கோயில்

கருவறைக்கு எதிரே உள்ள சிற்பத் தொகுதியில் வடக்கில் சுப்ரமணியர் சிற்பம் உள்ளது. சுப்ரமணியரை அடுத்துள்ளது ஹரிஹரன் சிற்பமாகும். இது வலப்பகுதி சிவனாகவும், இடப்பகுதி விஷ்ணுவாகவும் இணைந்த தோற்றம்.

சு.ராஜவேலு இந்த சிற்பத்தை சிவபெருமான் என்று சொல்லியிருப்பது சரியல்ல.[27] வடக்கில் உள்ள சிற்பம் கொற்றவையாகும். இதனை மகிஷாசுரமர்த்தினி என்று பல ஆய்வாளர்கள் கூறியுள்ளனர். (இந்த கட்டுரையாளர் உள்பட) இங்கு மகிஷன் என்று கருதப்படும் உருவம் மான் ஆகும் என்பதும் எருமை அல்ல என்பதும் மீளாய்வில் தெரிய வந்தது. மண்டபத்தின் தெற்கு சுவற்றில் ஏழு தாய்மார்களின் சிற்பங்கள் (மேற்கிலிருந்து கிழக்காக) பிராமி, மகேஸ்வரி, முருகி, வைஷ்ணவி, வராகி, இந்திராணி, சாமுண்டி என்ற வரிசையிலும், மேற்கே வீரபத்திரரும், கிழக்கே விநாயகரும் உள்ளனர். ஏழு தாய்மார்கள் சிற்பங்கள் ஆயுதங்களோடும் தங்களுக்குரிய கொடிகளுடனும் இவ்வாறு காட்சியளிப்பது தமிழ்நாட்டில் இங்கு மட்டும் தான் என்பது குறிப்பிடத்தக்கது. குடவரையோடு செதுக்கப்பட்டுள்ள ஏழு தாய்மார் சிற்பங்களை பல்லவர் குடைவரைகளில் காண முடியாது. மண்டபத்தின் நடுவில் தாய்ப்பாறையிலேயே குடைவிக்கப்பட்ட நந்தி உள்ளது.

இந்தக் குடைவரை நந்திவர்ம பல்லவனின் 16ம் ஆட்சியாண்டில் (கி.பி. 726) குவாவன் சாத்தன் என்னும் முத்தரைய சிற்றரசனால் எடுக்கப்பட்டது என்று இங்குள்ள கல்வெட்டு கூறுகிறது. இவ்வூர் கல்வெட்டுகளில் திருவலத்தூர்மலை எனவும் அழைக்கப்படுகிறது.

**மலையடிப்பட்டி**

மலையடிப்பட்டி விஷ்ணு குடைவரை சிவன் கோயிலை விட காலத்தால் பிந்தியதாகும். நீண்ட மண்டபத்தின் முகப்பில் நான்கு பட்டையான இரண்டு தூண்களும், இரண்டு அரைத் தூண்களும் உள்ளன. முழுத்தூண்களின் கீழ்ப்பகுதி அமர்ந்த நிலையில் உள்ள சிங்கத்தின் வடிவிலும், அரைத்தூண்களின் கீழ்ப்பகுதி யாளி வடிவிலும் அமைந்துள்ளன. இத்தூண்கள் பல்லவ ராஜசிம்மன் பாணியில் உருவாக்கப்பட்டவை. குடைவரை மூன்று வாயில்கள் (அங்கனம்) கொண்டது. வாயில் காவலர் சிற்பங்கள் உள்ளன.

கருவறையை ஒட்டி அமைந்துள்ள மண்டபத்தின் மேற்குப் பக்கத்தில் மலைப்பாறையிலேயே எடுக்கப்பட்டுள்ள விஷ்ணு, ஸ்ரீதேவி, பூதேவி சிற்பங்கள் உள்ளன. இதன் வலப்புறம் வராக அவதார சிற்பமும், கிழக்குப் பகுதியில் நரசிம்மரின் சிற்பமும் உள்ளன.

கருவறையின் முன்பு இரண்டு வட்ட வடிவ (ருத்ரகாந்த) தூண்களும் இரண்டு அரைத்தூண்களும் உள்ளன. கருவறை முழுவதும் பெருமாளின் கிடந்த கோலம் நிறைந்திருக்கிறது. நீளம் 4.6 மீட்டர் மேற்குச் சுவற்றில் மது, கைதபர் என்னும் இரண்டு அரக்கர்களின் வடிவங்கள் கிழக்குச் சுவற்றில் கருடன் மற்றும் தேவர்கள். தென் சுவற்றில், பெருமாளின் நாபியிலிருந்து தொடங்கும் நான்முகனின் உருவம் மற்றும் இசை விற்பன்னர்கள், தேவர்களின் வடிவங்கள். பெருமாளின் காலடியில் நிலமகள் மற்றும் மார்க்கண்டேயர் அமர்ந்துள்ளனர். கருவறை மற்றும் முன்மண்டபத்தில் காணப்படும் சிற்பங்கள் அனைத்தும் சுதையால் பூசப்பட்டு வண்ணம்

தீட்டப்பட்டிருக்கிறது. முன்மண்டபத்தின் கூரையில் பெருமாளின் பத்து திருக்கோல ஓவியங்கள் விஜயநகர நாயக்க பாணி ஓவியங்களாக தீட்டப்பட்டுள்ளன. ஆனால் பெருமளவு சிதைந்து காணப்படுகிறது. ஏற்கனவே இருந்த ஓவியத் தொகுதியில் மீண்டும் சுதை பூசி ஓவியம் வரையப்பட்டதற்கான அடையாளம் தென்படுகிறது. குடைவரையின் கட்டுமானம் குறித்த கல்வெட்டுகள் ஏதும் இல்லை. கலையமைப்பு முறை மற்றும் ஏனைய கல்வெட்டுகள், வரலாற்று எச்சங்கள் ஆகியவற்றின் துணை கொண்டு இக்குடைவரை கி.பி. 8 ஆம் நூற்றாண்டில் உருவாக்கப்பட்டதாகக் கொள்ளலாம்.

**திருமயம் - சிவன்**

திருமயம் புதுக்கோட்டை மதுரை சாலையில் உள்ளது. புதுக்கோட்டையிலிருந்து 14 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. இங்குள்ள உயர்ந்த குன்றில் ஒரு கோட்டை உள்ளது. குன்றின் தெற்குச் சரிவில் விஷ்ணு பெருமானுக்கும், சிவபெருமானுக்கும் ஆக இரண்டு குடைவரைகள் உள்ளன. இங்குள்ள மலை மெய்யமலை என்று அழைக்கப்படுகிறது.

சிவபெருமான் குடைவரை திருமாலின் குடைவரையை விடப் பழமையானது. இறைவன் சத்தியகிரிசுவரர் என்று அழைக்கப்படுகிறார். புதுக்கோட்டை குடைவரைகளுள் பகுதியில் உயரமான மண்டபம் கொண்டது இக்குடைவரை ஆகும். இரண்டு தூண்களும், இரண்டு அரைத் தூண்களும் உள்ளன. தரங்க போதிகை உள்ளது. மண்டபத்தின் நடுவில் நந்தி தாய்ப்பாறையிலேயே செதுக்கப்பட்டுள்ளது. நீண்ட மண்டபத்தின் மேற்குப் பகுதியில் கருவறை கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. கருவறையினுள் தாய்ப்பாறையிலேயே எடுக்கப்பட்ட லிங்க பீடம் வட்டவடிவமானது. மண்டபத்தின் கிழக்குச் சுவற்றில் மூலவரை நோக்கி லிங்கோத்பவர் சிற்பம் உள்ளது. காஞ்சிபுரத்திற்கு அடுத்து இத்தகைய அமைப்பு இங்குதான் உள்ளது.[28]





கருவறையின் வாயிலின் இருபுறமும் துவாரபாலகர் சிற்பங்கள் உள்ளன. இடதுபுறம் உள்ள சிற்பம் குன்றாண்டார் கோயிலில் உள்ளது போல் தலைப் பக்கவாட்டில் சூலத்துடன் உள்ளது. வலது புறம் உள்ள சிற்பமும் அழகுடன் விளங்குகிறது. இக்குடைவரை முழுவதும் சுதையால் பூசப்பட்டு வண்ணம் தீட்டப்பட்டிருந்தது தெரிய வருகிறது. இவையெல்லாம் பிற்காலத்தில் சுரண்டி எடுக்கப்பட்டது போலும். எமது ஆய்வில் மண்டபக் கூரையில் ஓவியங்கள் எச்சங்களைக் கண்டுள்ளோம்.

மண்டபத்தின் வடக்குச் சுவற்றில் 'பரிவாதினி' கல்வெட்டு உள்ளது. பரிவாதினி என்ற எழுத்திற்குக் கீழ் 'கற்க' என்ற தமிழ் எழுத்தினை புதிதாக எமது ஆய்வில் கண்டுள்ளோம். இக்குடைவரை கி.பி. 9 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகும்.

**திருமயம்**

திருமயம் விஷ்ணு குடைவரையை எடுப்பித்தது யார் என்பது தெரியவில்லை. எனினும் இங்குள்ள கல்வெட்டில் விடேல் விடுகு முத்தரையர் குவாவன் சாத்தன் மாறனின் தாயான பெரும்பிடுகு பெருந்தேவி என்பவரால் இக்குடைவரை புதுப்பிக்கப்பட்டதாக தெரிய வருகிறது. குவாவன் சாத்தன் இரண்டாம் நந்திவர்மனின் சமகாலத்தவன் ஆவான். எனவே, இதற்கு முன்பே குடைவரை இருந்திருக்க வேண்டும். கி.பி. 9 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இக்குடைவரை உருவாக்கப்பட்டிருக்க வேண்டும்.

குடைவரையில் விஷ்ணுவின் பள்ளி கொண்ட வடிவம் மிகப் பெரிய அளவில் செதுக்கப்பட்டுள்ளது. கருவறையின் முழு பகுதியிலும் உயிரோட்டமான சிற்பங்கள் பல வடிக்கப்பட்டுள்ளன. பெருமாளின் தலையருகே கருடனும், காலருகே மது, கைத்தபு என்ற அரக்கர்களும்

காணப்படுகின்றனர். தேவர்கள், கின்னரர்கள், நான்முகன், அடியவர் சிற்பங்கள் ஆகியன மலையடிப்பட்டி விஷ்ணு குடைவரையில் உள்ளது போல உள்ளன.

இங்குள்ள அரங்கனை திருமங்கை ஆழ்வார் பாடியுள்ளார். இந்தக் குடைவரை இயற்கையாக அமைந்திருந்த ஒரு குகையாகும் எனத் தெரிய வருகிறது. குடைவரை போன்ற இந்த அமைப்பைப் பயன்படுத்திக் கொண்டு இதில் திருமாலின் சிற்பத் தொகுதி செதுக்கப்பட்டு, பின் குடைவரை போன்ற தோற்றம் ஏற்படுத்த முன்புறம் தூண்கள் செருகப்பட்டுள்ளன. தூண்களை ஆய்வு செய்ததில் இவை தனியாக வைக்கப்பட்டிருப்பது தெரியலாகியது. மேலும் தூண்கள் ஒரே கல்லில் ஆனவை அல்ல. தூண்களின் நடுவில் இணைப்பு காணப்படுகிறது.

### தேவர்மலை

தேவர்மலை பொன்னமராவதி சாலையில் பேரையூருக்கு அருகில் உள்ளது. குடியிருப்புகள் ஏதும் இல்லாத காட்டுப்பகுதியில் உள்ள குன்றில் குடைவரை அமைந்துள்ளது. குடைவரையின் முன்னால் பிற்கால மண்டபம் கட்டப்பட்டுள்ளது. இக்குடைவரை மிகவும் எழில்மிக்க சிற்பங்களைக் கொண்டுள்ளது. ஆனால் இங்கு கல்வெட்டுகள் எதுவும் இல்லை. இக்குடைவரை பாசுபத-லகுலிச சைவப்பிரிவிற்கு உரியதாக உள்ளது.





குன்றின் கிழக்குச் சரிவில் குடைவரை எடுக்கப்பட்டுள்ளது. நுழைவு வாயிலின் இரு பக்கமும் இரண்டு முனிவர்களின் அழகான சிற்பங்கள் உள்ளன. தென்கோட்டத்தில் இருக்கும் முனிவரை புலத்தியரென்றும், வடகோட்டத்தில் இருப்பவர் அகத்தியர் என்றும் சொல்லப்படுகிறது. இது போன்ற சிற்பங்கள் திருக்கோளக்குடி மற்றும் வீரசிகாமணி குடைவரைகளில் காணப்படுகின்றன. சைவ சமயத்தின் அதிதீவிரப் பிரிவுகள் நிறைந்திருந்த கன்னட நாட்டிற்கும், புதுக்கோட்டைப் பகுதிக்கும் இருந்து

வந்த கலாச்சார தொடர்புகளை கொண்டு இங்கும் பாசுபத லகுலிச் பிரிவினைச் சேர்ந்தவர்களின் வருகை நிறைந்திருந்தது தெரிய வருகிறது. குடைவரையின் தெற்கு விளிம்பில் வலம்புரி விநாயகரும், வடக்கில் லகுலிசர் சிற்பமும் உள்ளன. இந்த சிற்பத்தினை சில ஆய்வாளர்கள் சண்டேசுவரர் எனக் குறித்துள்ளனர். சண்டேசுவரரின் ஆயுதம் மழு அல்லது கோடாரி ஆகும். ஆனால் இந்தச் சிற்பம் பாம்பு சுற்றிய தண்டம் வைத்துள்ளது என்பது கவனிக்கத்தக்கது. கருவறையில் லிங்க பீடம் தாய்ப்பாறையிலேயே எடுக்கப்பட்டுள்ளது. இக்குடைவரையின் சிற்பங்கள், கலையழகு ஆகியவற்றை நோக்கும் போது இது கி.பி. 8ம் நூற்றாண்டில் தொடக்கத்தில் எடுப்பிக்கப்பட்டதாகக் கொள்ளலாம்.

**நார்த்தாமலை - சமணர் குடகு**

நார்த்தாமலை மேலமலையில் பழியிழி ஈச்வரம் குடைவரைக்கு வடக்கு பகுதியில் பிறிதொரு குடைவரை உள்ளது. இது சமணர் குடகு என்று அழைக்கப்படுகிறது. ஆனால் இதன் முன் மண்டப பீடத்திலுள்ள 13ம் நூற்றாண்டு கல்வெட்டில் இக்கோயில் பதினெண் பூமி விண்ணகரம் என்று குறிப்பிடப்படுகிறது.

குன்றின் கிழக்குச் சரிவில் வாயிலுடன் தொடங்கும் குடைவரை அதன் வடக்குப் பகுதியில் நீண்டதொரு மண்டபமாகக் காட்சியளிக்கிறது. முகப்பில் உள்ள இரண்டு தூண்கள் முற்று பெறாத நிலையில் உள்ளன. குடைவரையில் கருவறையும் முகமண்டபமும் இணைந்து அமைந்துள்ளது. கருவறையில் சிற்பங்கள் ஏதும் இல்லை. ஆனால் மண்டபச் சுவற்றில் புடைப்புச் சிற்பமாக திருமாலின் பன்னிரெண்டு சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இது விஷ்ணுவின் பன்னிரெண்டு பெயர்களைக் குறிப்பதாக சொல்லப்படுகிறது. இவையனைத்தும் ஒரே மாதிரியாக நான்கு கைகளுடன் சுமார் 7 அடி உயரம் உள்ளன. வலது கையில் பிரயோகச் சக்கரம் உள்ளது. முன்னால் இருந்த முகமண்டபம் பிற்காலத்தில் அழிந்துபட அதன் அடிப்பகுதி பீடம் மட்டும் உள்ளது. இதில் பல அழகிய சிற்பங்கள் காணப்படுகின்றன. அவற்றில் ஒன்று எகிப்து பாணி ஸ்பிங்க்ஸ் உருவமாகும்.

இக்குடைவரை குறித்து எழுதியுள்ள ஆய்வாளர்கள் (இக்கட்டுரையாளர் உட்பட) இது சமணக் கோயிலாக இருந்து 13ஆம் நூற்றாண்டில் வைணவக் கோயிலாக மாற்றப்பட்டதாகக் கூறியுள்ளனர். கருவறையின் தரையில் 24 சிறு குழிகளைக் கொண்ட சதுரம் காணப் படுவதால் இது 24 தீர்த்தங்கரர்ளைக் குறிப்பதாகவும் குறிப்பிடுகின்றனர். இது தொடர்பாக மீளாய்வில் கிடைத்த கீழ்க்கண்ட செய்திகளை கவனத்தில் கொள்ள வேண்டியுள்ளது.

1. சமணர் குடகு என்று தற்போது வழங்கும் பெயருக்கு சான்று எதுவும் இல்லை. கல்வெட்டுகளில் இப்பெயர் இல்லை. இப்பகுதியில் இது ஒரு வழக்குப் பெயராக இருக்க வேண்டுமெனத் தெரிகிறது. குடைவரையின் கட்டுமானம் குறித்த கல்வெட்டு ஏதும் இல்லை.

2. சமணம் சார்ந்த குடைவரையாக இருந்ததற்கான கட்டுமான ஆதாரங்கள் ஏதும் இக்குடைவரையில் இல்லை.

3. கருவறையில் காணப்படும் 24 புள்ளிகள் 24 தீர்த்தங்கரர்களை மட்டும் குறிப்பதாக சொல்ல முடியாது. திருமாலுக்கும் 24 பெயர் உண்டு என பத்மபுராணம், ரூபமந்தனம் போன்ற புராணங்கள் கூறுகின்றன.[29]

4. விஷ்ணு சிற்பங்களின் கலையழகைக் கொண்டு இவை கி.பி. 10 ஆம் நூற்றாண்டு வாக்கில் செதுக்கப்பட்டிருக்கலாம் எனக் கருதலாம்.

எனவே, இக்குடைவரையை சமணர்குடகு என்று அழைப்பது ஏற்புடையதாக அமையவில்லை. இக்குடைவரை கி.பி. 10 ஆம் நூற்றாண்டு வாக்கில் வைணவத்திற்கான குடைவரையாகவே எடுப்பித்திருக்க வேண்டுமெனக் கருத வேண்டியுள்ளது.

**சித்தன்னவாசல்**

சித்தன்னவாசல் பகுதி முழுவதும் சமண சமய மையமாக இருந்திருக்க வேண்டும் என்பதற்கு நிறைய கல்வெட்டுச் சான்றுகளும் பிற சான்றுகளும் உள்ளன. புதுக்கோட்டை குடைவரைகளுள் சமணம் சார்ந்த குடைவரை சித்தன்னவாசல் குடைவரை மட்டுமே. தமிழகத்தில் சமணம், புத்தம் சார்ந்த வேறு குடைவரைகள் இல்லை.

கருவறையும், அர்த்தமண்டபமும் கொண்டது. இக்குடைவரை மண்டபத்தின் முன் இரண்டு அழகிய தூண்களும், இரண்டு அரைத்தூண்களும் உள்ளன. தூண்களில் தரங்க போதிகை உள்ளது. தூண்கள் கீழும், மேலும் சதுரமாகவும் நடுவில் எட்டுப் பட்டையாகவும் உள்ளன. குடைவரையின் பின் சுவற்றில் மூன்று சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. குடைவரையின் நடுவில் மூலவர் போன்றதொரு சிற்பம் தாய்ப்பாறையிலேயே அமைக்கப்பட்டு பின்னர் வெட்டி அகற்றப்பட்டதற்கான அடையாளம் தரையில் காணப்படுகிறது. இந்த மூலவருக்கு மேலே கூரையில் தாய்ப்பாறையிலேயே அமைக்கப்பட்டிருந்த தாமரை வடிவிலான குடை இருந்திருக்க வேண்டும். மலரின் காம்பு உடைந்த அடையாளம் கூரையில் காணப்படுகிறது. மேலும் குடைவரையின் வெளியே வைக்கப்பட்டுள்ள மலர்ந்த தாமரை வடிவிலான கல் கூரையிலிருந்து விழுந்ததாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது. முன் மண்டபத்தின் வடக்கு தெற்கு சுவர்களில் தீர்த்தங்கரர், ஆச்சாரியர் சிற்பங்கள் உள்ளன. சித்தன்னவாசல் குடைவரையில் உள்ள சிற்பங்களைவிட ஓவியங்களே நம்மை கவருகின்றன.

சித்தன்னவாசல் ஓவியங்கள் புகழ்பெற்றவை. குடைவரையின் மண்டபக் கூரையில் ஒரு தாமரைக் தாடாகக் காட்சி காணப்படுகிறது. இது சமண சமய புராண நிகழ்ச்சிகளைக் குறிப்பதாக உள்ளது. இதில் உள்ள ஓவியங்கள் அழகாக சித்தரிக்கப்பட்டுள்ளன. மண்டபத்தின் வலது தூணின் முகப்பில் ஒரு நடனமாதின் ஓவியம் காணப்படுகிறது. இடது தூணிலும் ஒரு

நடனமாதின் ஓவியம் உள்ளது. வலது தூணின் உட்புறத்தில் அரசன் அரசி ஓவியங்கள் உள்ளன. ஆனால் இவையெல்லாம் மிகவும் அழிந்த நிலையில் உள்ளன. தரைநீங்கலாக குடைவரை முழுவதும் சுதையால் பூசப்பட்டு ஓவியங்கள் வரைந்ததற்கான அடையாளங்கள் உள்ளன. ஆனால் கூரை தவிர இதர சுவர்ப்பகுதியிலிருந்து ஓவியங்கள் அனைத்தும் அழிந்துவிட்டன.

சித்தன்னவாசல் ஓவியங்கள் கி.பி. 9 ஆம் நூற்றாண்டில் ஸ்ரீமாற ஸ்ரீவல்லப பாண்டியன் (கி.பி. 815-62) காலத்தில் மதுரை ஆசிரியன் இளங்கௌதமன் என்பவரால் புதுப்பிக்கப்பட்டதாக இங்குள்ள கல்வெட்டு தெரிவிக்கிறது. எனவே, இதற்கு முன்பே இக்குடைவரை எழுப்பிக்கப்பட்டிருக்க வேண்டும். தற்போதுள்ள ஓவியங்களுக்குக் கீழே அசலான ஓவியங்களின் எச்சத்தைக் காண முடிகிறது. இக்குடைவரை மகேந்திரவர்மனின் கலைப்படைப்பு என சொல்லப்பட்டு வந்தது. ஆனால் இக்கருத்து ஏற்புடையதாக இல்லை. இது பாண்டியரின் கலைப்படைப்பு ஆகும்.

இங்குள்ள ஓவியங்களை எழுத கரி, காவிக்கல் போன்ற இயற்கை வண்ணங்களே பயன்படுத்தப்பட்டுள்ளன. இங்குள்ள ஓவியங்கள் மிகவும் அழிந்துபட்டிருந்தாலும் இவற்றின் வாயிலாக கி.பி. 8-9 ஆகும் நூற்றாண்டில் தமிழகத்தின் ஓவியக்கலை மற்றும் நாட்டியக்கலை வரலாற்றை தெரிந்து கொள்ள முடிகிறது.[30] இத்தகைய சான்றாக விளங்குவது சித்தன்னவாசல் ஓவியங்கள் மட்டுமே என்பதும் குறிப்பிடத்தக்கது.

பாண்டி நாட்டுக் குடைவரைகளைப் பற்றியும் குறிப்பாக புதுக்கோட்டை குடைவரைகளை குறித்தும் இன்னும் மிகவும் அதிகமான செய்திகள் சொல்லத்தக்கதாக உள்ளன. ஆனால் விரிவஞ்சி மிகச் சுருக்கமாக இங்கு செய்திகள் சொல்லப்பட்டுள்ளன. பல புதிய செய்திகளும், ஏற்கனவே சொல்லப்பட்டுள்ள கருத்துக்களும் மீளாய்வு செய்யப்பட்டுள்ளன. புதுக்கோட்டைப் பகுதி குடைவரைகள் குறித்து தொடர் ஆய்வும் மேற்கொள்ளப்பட்டு வருகிறது.

**அடிக்குறிப்புகள்**

1. கோனாடு, மிழலைக் கூற்றம். அழும்பில் எறிச்சலூர், ஒக்கூர் ஒல்லையூர், மாங்குடி.
2. குன்றுசூழ்நாடு, தென்மலைநாடு, புறமலைநாடு சூழ்ந்தநாடு, ஆளுருட்டி மலை, குடுமியான்மலை, குன்றாண்டார் கோவில், தேவர்மலை, தேனிமலை, திருநெற்குன்றம், நார்த்தாமலை, மலையக்கோவில், மலையடிப்பட்டி, மலையூர், மெய்யர்மலை.
3. புதுக்கோட்டை கல்வெட்டு 238 (பு.க.)
4. பு.க. 239.
5. பு.க. 240.
6. பு.க. 241.
7. திரு.கரு.இராசேந்திரன், ஆய்வுக் கண்டுபிடிப்பு.

8. ஜெ.ராஜாமுகமது, புதுக்கோட்டை மாவட்ட வரலாறு புதுக்கோட்டை 1992.
9. சு.ராஜவேலு, அ.கி.சேஷாத்ரி, தமிழகக் குடவரைக் கோயில்கள் சென்னை, 2000 பக்கம் 1-3.
10. கு.சேதுராமன், தமிழக தக்காண கலைப் பரிமாற்றங்கள், தமிழக தொல்லியல் கழக அறக்கட்டளை சொற்பொழிவு. ஆவண எண். 16, 2005.
11. Basil Gray (ed) The art of India, Oxford, 1981, p. 60.
12. சு.ராஜவேலு, மேலது பக்கம் 5.
13. Susan T, Huntington, The Art of Ancient India, Newyork, 1993, p. 289.
14. Encyclopedia of Indian Temple Architecture, South India, p. 678.
15. C.Sivaramamurti, Kalaugumalai and early Pandya Rock-cut Shrines, Bombay, 1961, p.13-17; V.Latha, Cave Temples of Pandya Country, New Delhi, 2005, K.R.Srinivasan, Temples of South India, New Delhi, 1972, p.p.34-50; K.V.Soundarrajan, Art of South India - Tamilnadu and Kerala Delhi, 1978, p.p.38-39, 82-86.

சு.ராஜவேலு மேலது பக்கம் 100-109, ஜெ.ராஜாமுகமது மேலது.
16. சு.ராஜவேலு, மேலது.
17. SII Vol. 23 No. 142.
18. K.R.Venkatarama Ayyar, A Manual of Pudukkottai State Vol. II Part II, 1944, p. 1188.
19. புதுக்கோட்டை கல்வெட்டுகள் - எண் 4.
20. Manual of Pudukkottai State, Vol. II Pt. II P.1159-1160/V.Latha, op. cit. p. 36.
21. பு.க. 19.
22. K.R.Srinivasan, op. cit., p. 48; V.R.Mani, The Iconography of Ayuthapurusha, New Delhi, 1985.
23. K.V.Soundararajan op. cit p. 86.
24. சு.ராஜவேலு, மேலது, பக்கம் 104.
25. பு.க. 944.
26. சு.ராஜவேலு, மேலது பக்கம் 118.
27. சு.ராஜவேலு, மேலது
28. K.V.Soundarrajan, op. cit., p. 87.
29. Kalpana Desai, Iconography of Vishnu, New Delhi, 1973, p. 151.

# 61. மண்கல தமிழ்பிராமி எழுத்துப் பொறிப்புகள்*

**எ.சுப்பராயலு,** புதுச்சேரி ஃபிரஞ்சு இந்திய நிறுவனம்

இந்தத் தலைப்பு பற்றி ஏற்கனவே பலர் ஆய்வுசெய்து கட்டுரைகள் எழுதியுள்ளனர். முதலில் 1946இல் அரிக்கமேடு அகழாய்வு அறிக்கையில் முறையாக மண்கல எழுத்துக்கள் படிக்கப்பட்டு பாடங்களோடு பதிப்பிக்கப்பட்டன. அவற்றின் சில பாடங்களைத் திருத்தி ஐராவதம் மகாதேவன் 1973இல் கட்டுரை வெளியிட்டார். தொடர்ந்து இதில் அக்கறை செலுத்தி வேறு சில கட்டுரைகள் வெளியிட்டார். விமலா பெக்லே செய்த அரிக்கமேடு அகழாய்வில் கிடைத்த எழுத்துகளைப் படித்து விரிவாக விளக்கம்செய்துள்ளார். அண்மையில் அவர் வெளியிட்ட பண்டைத் தமிழ்க் கல்வெட்டியல் என்ற நூலில் அவருடைய தேர்ந்த கருத்துகளைப் பதித்துள்ளார். 1962 லிருந்து சென்னைப் பல்கலைக் கழகம் பழம் வரலாறு தொல்லியல் துறை, தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை, மைய அரசு தொல்லியல் ஆய்வுத்துறை மற்றும் தமிழ்ப் பல்கலைக்கழக கல்வெட்டியல் தொல்லியல் துறை ஆகியன தொடர்ந்து பல அகழாய்வுகளைச் செய்துள்ளன. இதுவரை மொத்தம் ஏறக்குறைய 100 இடங்களில் அகழாய்வுகள் நடந்துள்ளன. அவற்றில் 15 இடங்களில் மண்கல எழுத்துகள் கிடைத்துள்ளன. மேற்பரப்பாய்விலும் சில இடங்களில் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. தமிழ்நாட்டுக்கப்பால் கேரளாவில் முசிறியென நினைக்கத்தகும் பட்டணத்திலும், எகிப்தில் இரு இடங்களிலும், இலங்கையில் சில இடங்களிலும் கிடைத்துள்ளன. மிக அதிக அளவில் கிடைத்த இடங்கள் கொடுமணல், அழகன்குளம், அரிக்கமேடு, உறையூர் ஆகியன. கரூர், கொற்கை, மாங்குடி, மாளிகைமேடு ஆகிய இடங்களில் ஓரளவு கிடைத்து உள்ளன. பெரிய, பழம் பட்டினங்களான காவிரிப்பூம்பட்டினம், காஞ்சிபுரம் ஆகிய இடங்களில் பெரிய அளவில் அகழாய்வுகள் நடந்தும் ஏன் அதிக அளவில் எழுத்தோடுகள் கிடைக்கவில்லை என்பது புதிராக உள்ளது. மதுரையில் பரந்த அளவில் அகழாய்வு மேற்கொள்ளப்படவில்லை.

இவற்றில் ஓரளவு முழுமையான எழுத்துகளின் பாடங்களைத் தொகுத்து அட்டவணையில் கொடுத்துள்ளேன். இதில் கொடுமணலில் கிடைத்தவை பெரும் விழுக்காட்டில் இருப்பதைப் பார்க்கலாம். காரணம்

* (இந்தக் கட்டுரை திரு.ஐராவதம் மகாதேவன் நிறுவிய தி.நா.சுப்பிரமணியன் அறக்கட்டளையின் கீழ் நடைபெற்ற 2007-ஆம் ஆண்டைய சொற்பொழிவின் சுருங்கிய வடிவமாகும். முதன்முதலில் 1938 இல் வெளியிட்ட தன் பண்டைத் தமிழ் எழுத்துக்கள் என்ற அரிய நூலில் தமிழ் பிராமி எழுத்தின் அடிப்படைத் தன்மைகளைப் பற்றி முறையாகச் சிந்தித்து கருத்து வெளியிட்டவர் திரு. தி.நா.சுப்பிரமணியன் ஆவார். அவருக்கு தமிழ்க் கல்வெட்டியலார் யாவரும் மிகவும் கடமைப்பட்டுள்ளோம்).

அவற்றை நேரில் பலமுறை நான் பார்த்தும் படம் வரைந்தும் பெற்ற அனுபவத்தால் அவற்றின் பாடங்களின் நம்பகத்தன்மைக்கு உறுதியளிக்க முடியும். மேலும், ஓரிரு எழுத்துகள் உள்ளவை கூட அவற்றின் வடிவங்கள் பயன்படும் எனக் கருதி சேர்க்கப்பட்டுள்ளன. மற்ற அகழாய்வுகள் ஓடுகளின் நல்ல ஒளிப்படங்களும் வரைபடங்களும் பெற்றவை மட்டும் சேர்க்கப் பட்டன. சில நீண்ட பொறிப்புகளாக இருப்பவை கூட மீண்டும் சரிபார்க்கப் பட வேண்டும். பாடங்களில் ஊகமானவற்றைப் பகர அடைப்பிலும் சந்தேகமானவற்றை கேள்விக்குறிகளோடும் காட்டப்பட்டு உள்ளன. அரிக்கமேடு, உறையூர், அழகன்குளம் ஆகியவற்றின் பாடங்களை அடியொட்டி சில மாற்றங்களோடு தரப்பட்டுள்ளன. காசிநாதன் கரூர் அழகன்குளம் ஆகியவற்றுக்குக் கொடுத்த பாடங்களும் பயன்படுத்தப் பட்டுள்ளன. வேறு சில ஆசிரியர் கட்டுரைகளும் பயன்பட்டன. மாறுபட்ட பாடங்களுக்கு மூல ஆசிரியர்கள் பொறுப்பில்லை.

| அகழாய்வுத் தொல்லியல் இடங்கள் | மூலச்சான்று | பொறிப்புப் பெற்ற ஓடுகள் | தேர்வு செய்யப் பட்டவை |
|---|---|---|---|
| அரிக்கமேடு | பெக்லே (மற்றும் மகாதேவன்) 1996, வீலர் 1946 | 66 | 29 |
| அழகன்குளம் | காசிநாதன் 1997 : ராஜகோபால் 2004: ஸ்ரீதர் 2005 | 73 | 30 |
| அழகரை | மகாலிங்கம், 1968, 1970 | 3 | |
| காஞ்சிபுரம் | ராஜகோபால் 2004 | 1 | |
| கரூர் | காசிநாதன் 1997 | 15 | 2 |
| காவேரிப் பூம்பட்டிணம் | ஆவணம் 10, ப. 154 | 1 | — |
| கொடுமணல் | சுப்பராயலு 1996 : ராஜகோபால் 2004: ஸ்ரீதர் 2006 | 250 | 182 |
| கொற்கை | நாகசுவாமி 1970 | 8 | |
| மதுரை (கோவலன் பொட்டல்) | ராஜகோபால் 2004 | 2 | |
| மாளிகைமேடு | வசந்தி 2002 | 8 | 5 |
| மாங்குடி | ஷெட்டி 2003 | 9 | 1 |
| மயிலாடும்பாறை | ராஜன் 2003 | 2 | |
| தேரிருவேலி | வசந்தி 2002 | 7 | 3 |
| உறையூர் | மகாலிங்கம் 1968: சண்முகம் 1988 | 20 | 12 |
| வல்லம் | சுப்பராயலு 1984 | 4 | 2 |
| எகிப்து (குஸேர் அல்காகிம், பெரெநிகெ) | மகாதேவன் 2003 | 4 | 4 |

எழுத்துப்பொறிப்புகள் பெரும்பாலும் உண்ணப்பயன்படும் கல வகைகளில் அதுவும் மண்டை அல்லது கிண்ணம், தட்டு ஆகியவைகளிலேயே உள்ளன. சில கலங்கள் மட்டுமே வாணலி, குடம் போன்ற பெரும் பானைகள், அரிக்கமேடு, அழகன்குளம் தவிர்ந்த பிற இடங்களில் கறுப்பு-சிவப்பு, சிவப்பு ஆகிய வகைகளில் உள்ளன. அரிக்கமேடு மற்றும் அழகன்குளத்தில் இவ்வகைககளோடு ரூலட் மண்கல வகை அதிகமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. பொறிப்புகள் கலங்களில் வெளிப்புறம் கழுத்துப் பகுதியில் அல்லது நடுப் பகுதியில் இடப்பட்டன. மூடிகள் போன்ற ஒரு சிலவற்றில் மட்டும் உள்பகுதியில் காணப்படுகின்றன. ஈமக் கல்லறைகளில் உள்ள தாழிகள் மற்றும் படையல்களாக இடப்பட்ட மண்கலங்களில் எழுத்துப் பொறிப்புகள் அறவே இல்லை. வேறு குறியீடுகள் அவற்றில் கீறப்பட்டுள்ளன. ஆயினும் விஸாகி என்ற பெண் பெயர் பொறித்த ஓடு ஒன்று ஒரு கல்லறையில் இருந்தது. இந்த ஓடு வீட்டில் பலகாலம் பயன்படுத்தப்பட்டு தேய்ந்து உடைந்த கலத்தின் பகுதியாகும். இறந்த பெண்ணுடன் இந்த ஓடு வீட்டிலிருந்து கொணரப்பட்டு சேர்த்துப் புதைக்கப்பட்டிருக்க வேண்டும். மாறாக, ஈமப்படையலில் இடப்பட்ட கலங்கள் யாவும் புதிதாக ஈமச்சடங்கிற்காகவே செய்து இடப்பட்டவை என்பதைக் குறிப்பிட வேண்டும்.

இந்த எழுத்துப் பொறிப்புகள் எல்லாமே கலங்கள் சுட்டபின் இடப்பட்டவை. ஆகவே, மண்கலங்களைச் செய்த குயவர்கள் இவற்றைப் பொறிக்கவில்லை. யாவும் அவற்றைப் பயன்படுத்தியவர்களால் பொறிக்கப்பட்டிருக்க வேண்டும். இப்பொறிப்புகள் பலருடைய கைகளால் செய்யப்பட்டவை என்று இவ்வெழுத்துகளை மேலோட்டமாகப் பார்த்தாலே தெரியும். எல்லாவற்றிற்குள்ளும் ஒரு சீர்மை இருக்கிறது என்று கூறவியலாது. சிலவற்றில் எழுத்துகள் பெரியனவாகவும், சிலவற்றில் எழுத்துகள் மிக நுணுகியும் எழுதப்பட்டுள்ளன. சராசரியாக எழுத்துகள் 2 மில்லி மீட்டர் நீளமும் 5 மில்லி மீட்டர் அகலமும், 12 மில்லி மீட்டர் வரை உயரமும் பெற்றுள்ளன. ஒரு கூரிய ஊசி போன்ற கருவியால் எழுத்துகள் கீறப்பட்டன. பொறிக்கப்பெற்ற ஓட்டுப்பகுதி வளைவாக இருந்ததன் காரணமாக எழுத்துகள் கோணங்கள் பெற்றன என்று கருத இடமுண்டு. ஓடுகளில் வளைவான கோடுகளை விட நேர் கோடுகளைக் கீறுவது எளிது. நேர்கோடுகள் சில நேரங்களில் உரிய எழுத்து வடிவத்துக்கு அப்பாலும் நீண்டிருப்பது இக்கருத்தைத் தெளிவாக்கும்.

அரிக்கமேடு (பெ3))க்லெ 1996). கொடுமணல் ஆகியவற்றில் பெற்ற அகழாய்வுச் சான்றுகளின் அடிப்படையிலும் இலங்கை பிராமி எழுத்துகள் (கருணரத்நா 1984), அசோகன் பிராமி எழுத்துகள், மற்றும் கஸ்ரவாத் (தி3))ஸ்கல்கர் 1949), சாஞ்சி, பா3))ர்ஹுத் முதலிய வடஇந்திய தொல்லியல் இடங்களில் கிடைக்கும் பிராமி எழுத்துகள் (தா3))நி 1986) ஆகியவற்றோடு ஒப்பீடு செய்ததன் அடிப்படையிலும், மண்கல எழுத்துப் பொறிப்புகள் சுமார் கி.மு. 250 லிருந்து தொடங்குகின்றன என்று கருதலாம். கொடுமணல், உறையூர் ஆகிய இடங்களில் உள்ள பெரும்பாலான பொறிப்புகள் கி.மு.இரண்டாம் நூற்றாண்டுத் தொடக்கமுதல் கி.பி. முதல் நூற்றாண்டு

முடிய உள்ள காலத்தைச் சேர்ந்தனவாகக் கொள்ளலாம். அதாவது பெரும்பான்மையான மண்கலப் பொறிப்புகள் மகாதேவன் பாகுபாடு செய்துள்ள பாறைக்கல்வெட்டுகளின் முதற்கட்டத்தைச் சேரும். அரிக்கமேடு, அழகன்குளம் ஆகிய இரு இடங்களில் மட்டும் இதற்குப் பின்பும் ஓரிரு நூற்றாண்டுகள் அவை கிடைக்கின்றன. அதன்பின் மண்கலங்களில் எழுத்துப் பொறிக்கும் வழக்கம் மிகவும் குறைந்துவிட்டது.

மண்கல எழுத்துப் பொறிப்புகளின் வடிவங்களும் எழுத்தியலும் பாறைக் கல்வெட்டுகளின் வடிவங்களையும் எழுத்தியலையும் ஒத்துள்ளன. இதுவரை கிடைத்துள்ள மண்கல எழுத்துகளின் வடிவமைப்பில் தெளிவான வளர்ச்சி இருப்பதாகக் கூறவியலாது. பொறித்தவர்களின் கை வண்ணத்தினால் எழுத்துகளில் வேறுபாடு உள்ளதே ஒழிய காலவரிசையின் அடிப்படையில் மாற்றம் இருப்பதாகத் தென்படவில்லை. அரிக்கமேட்டிலும் அழகன்குளத்திலும் மட்டும் ஓரளவு எழுத்து வளர்ச்சி காணப்படுகிறது.

மெய் இரட்டிக்க வேண்டும் இடத்தில் பெரும்பாலும் இல்லை. உயிர்மெய் எழுத்துகளில் ஆகார உயிர் நெடில் மிக அரிதாக உள்ளது. அ, ஆ வேறுபாடு காட்டுவதில் மயக்கம் உள்ளது. இ, ஈ இரண்டு எழுத்துகளும் ஒரே குறியீடு பெற்றுள்ளன. ஆயினும் ஆ, உ, ஊ, எ, ஒ ஆகியன ஒவ்வொன்றும் அரிதாகவே (ஒரே தடவை) வந்துள்ளன. உயிர்மெய்யைப் பொறுத்த வரையில், சமகாலத்தில் பிற இடங்களில் உள்ள அசோகன் பிராமி எழுத்துமுறையைப் போல கூட்டெழுத்து மூலம் மெய்யிரட்டித்தலைக் காட்டும் வழக்கம்இல்லை. பாறைக் கல்வெட்டுத் தமிழ்பிராமியிலும் இதே நிலைதான் உள்ளது. இலங்கை பிராமியிலும் தமிழ்பிராமி போல கூட்டெழுத்து முறை இல்லை. வட இந்தியாவிலும் கஸ்ரவாத் போன்ற இடங்களில் பிராகிருத பிராமி எழுத்துகள் கூட்டெழுத்தைப் பயன்படுத்தவில்லை என்பதையும் குறிப்பிடவேண்டும்.

உயிர்மெய் அகர ஆகாரக் குறியீட்டில் உள்ள மயக்கத்தை வைத்து மகாதேவன் தமிழ்பிராமி-1, தமிழ்பிராமி-2, தமிழ்பிராமி-3 என மூன்று எழுத்தியல்கட்டங்களாக வகைப்படுத்தினார். தமிழ்பிராமி-1இல் எழுத்தின் தலையில் வலப்பக்கம் படுக்கைக்கோடு இடப்பட்டால் அதை நெடிலாகவும் குறிலாகவும் படிக்கலாம். தலைக்கோடு இல்லாத எழுத்து வெறும் மெய்யாக இருக்கும் (வட இந்திய பிராமியில் இது முறையே நெடிலாகவும் குறிலாகவும் இருக்கும்). தமிழ்பிராமி-2இல் தலைக்கோடு இட்டவை நெடிலாகவும், கோடு இல்லாதவை குறில் அல்லது வெறும் மெய்யாகப் படிக்க வேண்டும். தமிழ்பிராமி-2, தமிழ்பிராமி-3க்கு இடையில் ஒரே வேறுபாடு மெய்யெழுத்துக்குப் புள்ளியிடல் ஆகும். இந்த மூன்று வகைகளும் கால வரிசையில் ஒன்றன் பின் ஒன்றாக வழக்குக்கு வந்தன என்று மகாதேவன் கருதினார். ஆயினும் சில கல்வெட்டுகளில் தமிழ்பிராமி-1, தமிழ்பிராமி-2 இணையாக வழங்கப்பட்டதைக் கண்ட அவர் இக்கருத்தை சிறிது மாற்றிக் கொண்டார். முதலில் தமிழ்பிராமி-1 பெருவழக்காக இருந்தது, பின்னால் தமிழ்பிராமி-1, 2 இணைந்து வழங்கப்பட்டன என்று இப்பொழுது கருதுகிறார். ஆயினும் ஒட்டுப் பொறிப்புகளில் முதலிலிருந்தே தமிழ்பிராமி-1, தமிழ்பிராமி-2 இரண்டு கூறுகளும் சேர்ந்தே வருகின்றன. தமிழ்பிராமி-1

என்பது பாறைக்கல்வெட்டுகளிலும் மிக அரிதாகவே தனித்து வருகிறது. இப்படி இரண்டும் சேர்ந்து வரும் நிலையில் இவற்றை இருவேறு எழுத்தியல் முறைகளாகக் கொள்வது பொருத்தமாகத் தெரியவில்லை. இதனடிப்படையில் எழுத்துகளுக்குக் காலம் கணிப்பதும் தவறு. உயிர்மெய்க் குறில், நெடில் மயக்கத்தை இரு எழுத்தியல் முறைகள் என்று கொள்வதை விட்டு வேறு வகையாக விளக்க வேண்டியுள்ளது. இந்த எழுத்துப் பொறிப்புகளில் குறில்களே பெரு வழக்காக இருப்பதைப் பார்க்கலாம். ஆகவே தலைக்கோடு குறில் உயிர்மெய்யைக் குறிக்கவே இடப்பட்டது. சில இடங்களில் மட்டும் அது நெடிலையும் குறித்தது. மேலும் முதல் நிலையில் பிராகிருதம் பேசியவர்கள் அல்லது தெரிந்தவர்கள் பிராமியில் தமிழை எழுதியதும் நெடில் குறில் மயக்கத்துக்கு ஒரு காரணமாகலாம். இருப்பினும் எந்தப் பொ்றிப்பிலும் சொல்லிறுதியில் வரும் மெய், இனமெய் ஆகிய மெய்யை மட்டும் குறிக்க வேண்டிய இடத்தில் தலைக்கோடு இல்லை என்பதைக் கூர்ந்து பார்த்தால் தெரியும். மூன்று முறைகளிலும் பொறிப்புகளை, அவை எழுதப்பட்டுள்ள மொழி தமிழ் என்று அறிந்தால் தான் படிக்க முடியும். இது புள்ளியிடாமலும் நெடில் குறில் வேறுபாடுகளைக் காட்டாமலும் பொறிக்கப்பட்டுள்ள இடைக்காலத் தமிழ்க் கல்வெட்டுகளைப் படிப்பதைப் போன்றதே.

இந்த எழுத்துப் பொறிப்புகள் ஒருசிலவற்றைத் தவிர யாவும் ஓரிரண்டு சொற்களால் அமைந்தவை. அவற்றிலும் பெரும்பாலானவை சில்லுகளாகவே காணப்படுவதால் தொடக்கமும், முடிவும் இல்லாமல் அரைகுறையாக உள்ளன. ஆயினும் கிடைக்கும் முழுச் சொற்களைக் கொண்டும் இறுதிப் பகுதியில் கிடைக்கும் அரைகுறை எழுத்துகளைக் கொண்டும் இவை யாவும் ஆட்பெயர்கள் என்று கருத முடியும். பல சொற்கள் ன் என்ற ஆண்பால் விகுதியுடன் முடிகின்றன. பொதுவாக, பழங்கால முதல் இன்று வரை ஆண்பெயர்கள் ன் விகுதி பெற்று முடிவது தமிழ்நாட்டு மரபு. ஒரு பத்து எழுத்துப் பொறிப்புகள் மட்டும் மூன்று அல்லது நான்கு சொற்களைக் கொண்ட சொற்றொடர் அல்லது வாக்கியமாக உள்ளன. இவற்றுள் நான்கில் இறுதிச்சொல் அகல் என்றும், இரண்டில் பாத்தி என்ற சொல்லும் ஒன்றில் தடா என்ற சொல்லும் வந்துள்ளன. பாத்தி பிராகிருத மொழியில் தட்டைக் குறிக்கும். அகலும் பழந்தமிழ்நாட்டில் உண்கலம் அல்லது தட்டு (பெரும்பாணாற்றுப்படை, வரி 377) என்ற பொருளிலும் நெய்விளக்கு (நெடுநல்வாடை, வரி 101-03) என்ற பொருளிலும் கையாளப்பட்டது.

இப்பொறிப்புகள் இன்னாருடைய உண்கலம் என்று பொருள் கொடுப்பனவாக உள்ளன. அதாவது அந்த பெயருக்கு உரியவருடைய கலம் என்று கொள்ளலாம். பிராகிருதச் சொற்களில் (எண் 34, 170, 197, 198, 200, 208, 210) இந்த கிழமைப் பொருள் தெளிவாக உள்ளது. அவற்றில் வரும் $ச_{o}$)), ஸ, ஹ என்ற ஆறாம் வேற்றுமை விகுதி இதை உறுதிப்படுத்தும். இதுபோன்ற பிராகிருதப் பொறிப்புகள் ஆந்திராவில் ஸாலிஹுண்டம், மத்திய பிரதேசத்தில் கஸ்ரவாத் போன்ற இடங்களில் கிடைத்த மண்கலங்களிலும் காணப்படுகின்றன. ஆகவே இப்பெயர்கள் யாவுமே அந்தந்த மண்கலங்களுக்கு உரிமையாளரைக் குறித்தன என்பது உண்மை.

இப்பெயர்களைப் பகுத்துப் பார்த்தால் பல பெயர்கள் பிராகிருதத் தொடர்பு கொண்டவை என்பது தெரியும். தமிழ் ஒலிகளுக்கு இயல்பாக வேண்டாத வர்க்க எழுத்துகளும் உரசொலி, மூச்சொலி எழுத்துகளும் (க2)), க3)), ஜ2)), ட3)), த3)), த4)), ப3)), ப4)), ச0)), ஸ, ஷ, ஹ) வழங்குவதிலிருந்து இச்சொற்களை இனம் காணலாம். ஆய்விற்கு எடுத்துக் கொண்ட 270 பொறிப்புகளில் ஐந்தில் ஒருபகுதி தூய பிராகிருதப் பெயர்கள் அல்லது சிறிது தமிழ்ப் படுத்தப்பட்ட பிராகிருதப் பெயர்களாக உள்ளன. வேறு பல பெயர்கள் பிராகிருத மொழியிலிருந்து கடன் வாங்கப்பட்டு முழுமையாகத் தமிழ்ப் படுத்தப்பட்டவை. இவற்றையெல்லாம் சேர்த்தால் இப்பெயர்களில் ஏறக்குறைய 50 விழுக்காடு பிராகிருதப் தொடர்பு கொண்டவை எனக் கணிக்கலாம். இந்த உண்மை பாறைக் கல்வெட்டுகளிலுள்ள பெயர்களிலும் தென்படுகிறது. அக்கல்வெட்டுகளில் வரும் பெயர்களையும் பிற சொற்களையும் பகுத்தாய்வு செய்த மகாதேவன் பிராகிருதச் சொற்கள் தவிர்த்துவிட்டு பெயர்களை மட்டும் பகுத்துப் பார்த்தால் ஏறக்குறைய ஐம்பது விழுக்காடு பிராகிருதச் சொற்களே உள்ளன எனக் கூற இடம் உள்ளது.

மண்கல எழுத்துப் பொறிப்புகளுக்கும் பாறை எழுத்துப் பொறிப்புகளுக்கும் சில பொதுத் தன்மைகள் உள்ளன. சில பெயர்கள் இரண்டிலும் உள்ளன. ஆனால் ஒரே விழுக்காட்டில் இல்லை. இரண்டிலும் பிராகிருதம் சார்ந்த பெயர்கள் ஒன்றுபோல் இருந்தாலும் பாறைப் பொறிப்புகளில் அவை அதிக அளவில் தமிழ்மயம் ஆக்கப்பட்டுள்ளன என்பதைக் காணலாம்.

சங்க இலக்கியத்தில் வரும் ஆட்பெயர்களையும் ஒப்பீட்டிற்கு எடுத்துக் கொள்ளலாம். மண்கல, பாறைப் பொறிப்புப் பெயர்களோடு ஒப்பிடும்பொழுது, இலக்கியத்தில் பிராகிருதச் சாயல் கொண்ட பெயர்கள் குறைந்த விழுக்காட்டில் உள்ளன. வடமொழி ஒலிகளுக்குப் பயன்படுத்தப்படும் எழுத்துகள் அறவேயில்லை. எல்லா பிராகிருதப் பெயர்களும் முழுமையாகத் தமிழ்மயம் செய்யப்பட்டுள்ளன. மெய் இரட்டிக்கும் இடங்கள் பிழையின்றி எழுதப்பட்டுள்ளன. இப்பெயர்களுக்கு உரியவர்கள் அக்காலத் தமிழ்ச் சமூகத்தில் பல நிலையில் இருந்து வந்தவர்கள். ஆளும் தட்டினர் (அரசர், வேள், கிழார்), வணிகர்கள், கைவினைஞர்கள், பிராமணர்கள் என்று பல்வேறுபட்ட குழுவினரை இங்குக் காணலாம். பெண்களும் குறிப்பிடத்தக்க அளவு உள்ளனர்.

தமிழ்நாட்டுக்கப்பால் ஒப்பீடு செய்ய சமகால இலங்கையிலும், வட இந்தியாவில் சில ஊர்களிலும் கிடைக்கும் கல்வெட்டு மற்றும் மண்கலப் பொறிப்புகளிலுள்ள பெயர்கள் பயன்படுகின்றன. இப்பெயர்கள் யாவுமே பிராகிருதப் பெயர்கள். இலங்கையில் இருந்த தமிழ் வணிகர்களும் பிராகிருதப் பெயர்களையே கொண்டிருந்தார்கள். இலங்கை பிராகிருதப் பெயர்களில் புத்தமதச் சார்பான பெயர்களுடன் பிற மதச் சார்பான பெயர்களும் தாராளமாக வழங்கப்பெற்றன. அவற்றில் வேத, புராண,

தெய்வங்களை அடிப்படையாகக் கொண்டு அமைந்த பெயர்கள் பல உள்ளன. மேலும் நட்சத்திரங்களை அடிப்படையாகக் கொண்ட பெயர்களும் நிறைய உள்ளன.

தமிழ்நாட்டு மண்கலங்களிலுள்ள பிராகிருதப் பெயர்கள் பல இலங்கைப் பெயர்களோடு ஒத்துள்ளன. சில நட்சத்திரப் பெயர்கள், இலங்கைப் பெயர்களை நினைவுபடுத்துகின்றன. இலங்கையில் வழங்கிய சில பெருவழக்குப் பெயர்கள் தமிழ் நாட்டில் அருகிக் காணப்படுகின்றன. ச$_{o}$)) எழுத்தை ஆறாம் வேற்றுமை விகுதியாகப் பயன்படுத்துவது இலங்கை பிராகிருதத்தின் தனிச்சிறப்பாகும். அதே வேற்றுமை விகுதி தமிழ் நாட்டிலும் கொடுமணல், அரிக்கமேடு, அழகன்குளம் ஆகிய இடங்களில் உள்ள பிராகிருதப் பெயர்களில் காணலாம். வேறு சில கூறுகள் எல்லா பிராகிருத பெயர்களுக்கும் பொதுவானவை. மெய் இரட்டிக்காத நிலை இலங்கையில் மட்டுமின்றி வட இந்தியாவிலும் இருந்தது.

மேற்கண்ட பெயர் ஒப்பீட்டிலிருந்து இந்தப் பெயர்களுக்குரியவர்கள் யார் என்ற கேள்விக்கு ஓரளவு விடை பெறலாம். இந்த ஓட்டுப் பொறிப்புகள் பரவலாக தமிழ்நாட்டில் பல இடங்களில் சிறுசிறு ஊர்களிலும் கிடைக்கின்றன. ஆகவே, அக்காலத்தில் தமிழ்நாட்டில் எழுத்தறிவு பரவலாக இருந்தது என்று ஐராவதம் மகாதேவன் கருதுகிறார். அப்படியானால் அக்காலத் தமிழ்ச் சமூகத்தில் பாதிப்பேர் பிராகிருதம் அறிந்தவர்களாக இருந்தார்கள் என்றும் முடிவு செய்யவேண்டும். இது ஏற்கஇயலாத முடிவு. தமிழ்பிராமி எழுத்துப் பொறிப்புகள் தரும் இடப்பெயர்கள் யாவும் தமிழ்ப் பெயர்களே, அதாவது வட இந்திய பிராகிருதப் பண்பாட்டுத் தாக்கம் ஒரு குறுகிய வட்டத்துக்குள் மட்டும் இருந்தது என்பதற்கு இது உறுதியான சான்றாகும்.

உண்மையில் பொறிப்புகள் ஒரு சில இடங்களில் தான் கணிசமாக உள்ளன என்று பார்த்தோம். இந்த இடங்களில் பிராகிருத மொழி சார்ந்தவர்கள் நிறையக் காணப்படுவதன் காரணத்தைக் கண்டறிவது எளிது. பழங்காலத்தில் மக்கள் நீண்ட பயணம் மேற்கொண்டது பொருள்தேடல் பொருட்டே. இயல்பாகவே இது வணிகந் தொடர்புடையது. புண்ணியத் தலங்களுக்கும் போயிருக்கலாம். ஆனால் கொடுமணல், அரிக்கமேடு முதலிய ஊர்கள் புண்ணிய தலங்கள் அல்ல, அக்காலச் சமணத் தலங்களுக்கு அருகிலும் இவை இருக்கவில்லை. அரிக்கமேடு, அழகன்குளம் இரண்டும் துறைமுகப்பட்டினங்கள். கொடுமணல் அரியகல்மணிகள் செய்யும் தொழில் மையமாக இருந்தது எனத் தொல்லியலகழாய்வு சான்று சொல்லும். உறையூர் ஓர் அரசியல் மையம், வணிக நகரமாகவும் இருந்திருக்க வேண்டும். ஆக இந்த எழுத்துப் பொறிப்புகள் மிக்கிருந்த இடங்களில் வணிகப் போக்குவரத்து கூடுதலாக இருந்ததில் வியப்பில்லை. பிராகிருதப் பெயர்களுக்குரியவர்கள் பெரும்பாலும் வெளியிலிருந்து வந்த வணிகர்களே என்று முடிவு செய்யலாம். இவர்களுள் இலங்கை வணிகர்களும் இருந்தார்கள், வட இந்திய வணிகர்களும் இருந்தார்கள். இதே காலத்தில் மேற்குத் தக்காணத்தில் (இன்றைய மஹாராஷ்டிரத்தின் கடற்பகுதி) உள்ள பல புத்தமதச் சார்பான

குடைவரைகளில் பொறிக்கப்பட்டிருக்கும் கல்வெட்டுகள் அங்கு பெரும்பாலும் வணிகர்களே வந்துபோனார்கள் என்பதைக் காட்டும். மேலே குறிப்பிட்ட கஸ்ரவாத் என்ற இடத்தில் கிடைத்த எழுத்துப் பொறிப்புகளில் உள்ள பல பெயர்கள் வணிகர்களுக்கே உரிய செட்டி போன்ற அடைமொழிகளைப் பெற்றிருந்தன என்பதையும் குறிப்பிடலாம். தமிழ்ப் பொறிப்புகளில் உள்ள குவிரன் (குபேரன்) போன்ற பெயர்களும் வணிகர்களால் விரும்பியேற்ற பெயர்களாகும். (அந்தை, அதன் ஆகிய இரு பெயர்களும் தமிழ் வணிகர்களோடு தொடர்புடைய சிறப்புப் பெயர்கள் எனக் கருத இடம் உள்ளது. இது குறித்து விளக்கம் வேறொரு கட்டுரையில் கொடுத்துள்ளேன்).

ஆக, இக்காலத்தில் இந்தியா முழுவதும் கடல் கடந்தும் சென்று வந்த வணிகர்களே கொடுமணல் போன்ற இடங்களுக்கும் வந்தார்கள். இந்த வணிகர்களே பிராகிருதப் பெயர்களுக்குரியவர்கள். நாளடைவில் இவர்களோடு உறவு கொண்ட தமிழ் வணிகர்களும் வட இந்தியப் பெயர்களை ஏற்றனர். முதல் நிலையில் பிராமி எழுத்து முறையை தமிழ் நாட்டுக்கு அறிமுகப்படுத்தியவர்கள் இந்த பிராகிருதம் பேசிய வணிகர்களே என்று கருதலாம். கூடவே சமணத் துறவிகளும் வந்திருக்கலாம். எழுத்தறிவு முறையாகப் பரவ சமணப் பள்ளிகள் துணை புரிந்திருக்கலாம். அந்தக் கட்டத்தில் (பாறைக் கல்வெட்டுகளில்) பிராகிருத ஒலிகளுக்குரிய எழுத்துகள் குறைவாகக் கையாளுவதைப் பார்க்கிறோம்.

**மண்கல த்மிழ்பிராமி எழுத்துப் பொறிப்புகள் அட்டவணை**

| எண் | பொறிப்பு ஓட்டின் சுட்டுக்குறிப்பு | மண்கல வகை | பாடம் |
|---|---|---|---|
| 1 | KDL-1(MEG-3-270) | RCBR | விஸாகீ |
| 2* | KDL-2(ZK-26-200) | BR | [வெ]தொடு$_3$த_ஐ |
| 3* | KDL-3(ZL-42-185) | RS | [இ]ய் தண் வெண் நிர் அழிஇய் தடா |
| 4 | KDL-4(ZL-44-185) | RS | ன் |
| 5 | KDL-5(ZL-42-180) | RS | ணன் # |
| 6 | KDL-6(ZK-25-175) | RCBR | ஸாதந்தை அந்தவன் |
| 7 | KDL-7(ZK-25-170) | RS | ன் தி |
| 8 | KDL-8(ZK-26-170) | BR | ஸா_ |
| 9 | KDL-9(ZL-24-170) | BR | _ன் ஸ_ |
| 10 | KDL-10(ZL-42-170) | RCBR | ண் ந |
| 11 | KDL-11(ZL-42-170) | RCBR | காவெ # (?) |
| 12 | KDL-12(ZL-43-170) | BR | வன் முலன் மு |

| | | | |
|---|---|---|---|
| 13 | KDL-13(ZM-43-165) | RCBR | த[ன்] க |
| 14 | KDL-14(ZL-43-165) | BR | இ[லக] |
| 15 | KDL-15(ZK-25-160) | RS | மாகி சம்ப_ |
| 16 | KDL-16(ZK-25-160) | BR | [ய]ண |
| 17 | KDL-17(ZK-25-160) | BR | மாஸாபாக_ |
| 18 | KDL-18(ZK-25-160) | RCBR | பண்ணன் |
| 19 | KDL-19(ZK-25-155) | BR | அ |
| 20 | KDL-20(ZL-25-155) | BR | ந[ரெ] |
| 21 | KDL-21(ZL-42-155) | BR | கோன் # |
| 22 | KDL-22(ZL-46-155) | RS | இலொகிபா |
| 23 | KDL-23(ZJ-25-150) | BR | [த]ன் அதன் |
| 24 | KDL-24(ZL-43-150) | BR | அந்திய[ன்] |
| 25 | KDL-25(ZL-44-150) | RCBR | நெ |
| 26 | KDL-26(ZM-46-150) | RCBR | எரிவ_ |
| 27 | KDL-27(ZL-42-145) | RS | சுழந்தை தி |
| 28 | KDL-28(ZL-43-145) | BR | தாத |
| 29 | KDL-29(ZL-46-145) | RCBR | [வலஸப]ஸந # |
| 30 | KDL-30(ZM-46-145) | RCBR | லன் |
| 31 | KDL-31(ZM-46-145) | BR | குவிரன் அதன் # |
| 32 | KDL-32(ZN-43-145) | BR | ஸன்_ |
| 33 | KDL-33(ZK-25-140) | BR | மி_ |
| 34 | KDL-34(ZK-26-140) | RS | [ப]லச$_0$ |
| 35 | KDL-35(ZL-43-140) | BR | ண்ணன் |
| 36 | KDL-36(ZL-25-135) | BR | லநத$_4$உ (?) |
| 37 | KDL-37(ZL-42-135) | BR | _ந்தை |
| 38* | KDL-38(ZN-47-133) | RCBR | அதன் அஸட[ன்] ______# |
| 39 | KDL-39(MX-0-130) | RCR | அந்த_ |
| 40 | KDL-40(ZK-25-130) | RCBR | அந்தவன் அதன் |
| 41 | KDL-41(ZL-25-130 pit) | R | தாகா |
| 42 | KDL-42(ZL-43-130) | BR | _ன் |
| 43 | KDL-43(ZM-43-125) | RCBR | சாத |
| 44 | KDL-44(ZJ-25-125) | RS | அந் |
| 45 | KDL-45(ZK-25-125 pit) | RCBR | பொ[க] |

| | | | |
|---|---|---|---|
| 46 | KDL-46(ZK-25-125) | BR | _குவிரிஅந் |
| 47 | KDL-47(ZL-25-125) | BR | சம்பன் கு[வ] |
| 48 | KDL-48(ZM-46-125) | BR | _விர |
| 49 | KDL-49(ZM-46-125) | BS | கித்த_ |
| 50 | KDL-50(ZN-47-125) | BR | மாம[ந] |
| 51 | KDL-51(MX-0-120) | RCBR | ன் அ |
| 52 | KDL-52(MX-0-120) | BR | ன் அத |
| 53 | KDL-53(ZK-26-120) | BR | யன் ஸா_ |
| 54 | KDL-54(ZL-24-120) | RCBR | தாக |
| 55 | KDL-55(ZL-25-120) | BR | யா (?) |
| 56* | KDL-56(ZM-42-120) | R | [அ]ந்தி யஸாளய் |
| 57 | KDL-57(ZM-42-120) | RCBR | பா_ |
| 58 | KDL-58(ZN-43-120) | RCBR | தன் |
| 59 | KDL-59(MX-0-117) | BR | ன் அதன் |
| 60 | KDL-60(ZK-26-115) | BR | ன் |
| 61 | KDL-61(ZM-42-115) | BR | ன் |
| 62 | KDL-62(ZN-47-115) | RS | தை வெந் |
| 63 | KDL-63(MX-0-110) | RS | _வ அ |
| 64 | KDL-64(ZL-25-110) | R | _வா_ஐ# |
| 65 | KDL-65(ZL-42-110) | BR | _ஸ_ |
| 66* | KDL-66(ZK-26-105) | BR | [கூ]லஅந்தைய் சம்பன் அகல் |
| 67 | KDL-67(ZM-42-105) | BR | அதன் |
| 68 | KDL-68(ZM-44-105) | RCBR | ஞ |
| 69 | KDL-69(ZM-44-105) | RCBR | [அ]த |
| 70 | KDL-70(ZJ-25-100) | BR | _ட$_3$காஸி |
| 71 | KDL-71(ZL-24-100) | RS | [அ]த |
| 72 | KDL-72(ZL-25-100) | BR | [ந]தை |
| 73 | KDL-73(A-1-95 pit) | BR | [வெ]ய |
| 74 | KDL-74(ZK-26-95) | RS | [_யமகவ_க] (?) |
| 75 | KDL-75(ZL-43-95) | BR | த__ |
| 76 | KDL-76(ZL-24-94 pit) | BR | _ன் |
| 77 | KDL-77(ZM-43-90) | BR | _அ[ற] |

| | | | |
|---|---|---|---|
| 78 | KDL-78(ZJ-25-90) | RS | செஸாசா |
| 79 | KDL-79(ZJ-34-90 pit) | RCBR | ஸந்ததன் # |
| 80 | KDL-80(ZL-43-90) | RCBR | [ரு]ஸு |
| 81 | KDL-81(ZL-46-90) | BR | நன் தெ |
| 82 | KDL-82(ZM-42-90) | BR | _ம்ப |
| 83 | KDL-84(ZJ-25-85) | BR | அ[ஸ] |
| 84 | KDL-83(ZJ-25-85) | RCBR | _ழி_ |
| 85 | KDL-85(ZK-26-85) | RS | [ன் தா]ய |
| 86 | KDL-86(ZL-25-85) | RS | திய் |
| 87 | KDL-87(ZL-42-85) | RCBR | ந்தை |
| 88 | KDL-88(XF-18-80) | BS | நிகாம |
| 89 | KDL-89(ZJ-25-80) | RS | [ற]ன் |
| 90 | KDL-90(ZJ-25-80) | BR | ன ரை (?) |
| 91 | KDL-91(ZL-24-80) | RCBR | [வ] |
| 92 | KDL-92(ZL-44-80) | BR | _கு_ |
| 93 | KDL-93(ZM-47-80) | RS | [த]ன் [வ] |
| 94 | KDL-94(ZL-24-78) | RCBR | _[ந்தை] |
| 95 | KDL-95(ZB-1-75) | RS | ல_ |
| 96 | KDL-96(ZJ-25-75) | RS | றந் அ |
| 97 | KDL-97(ZJ-26-75) | BR | _த்தி_ |
| 98 | KDL-99(ZK-25-75) | RCBR | புநி |
| 99 | KDL-98(ZL-42-75) | RS | த |
| 100 | KDL-100(ZL-43-75) | RCBR | தவன் |
| 101 | KDL-101(YZ-39-70) | RCBR | [கன்] |
| 102 | KDL-102(ZA-1-70) | BR | [அந்] |
| 103 | KDL-103(ZB-2-70) | RCBR | ணன் |
| 104 | KDL-104(ZL-47-70(pit)) | BR | லிகன் |
| 105 | KDL-105(ZM-42-70) | BR | அ_ |
| 106 | KDL-106(ZT-47-70) | BR | [விற]வந் |
| 107 | KDL-107(ZJ-34-68(pit)) | BR | ஸாதந்_ |
| 108 | KDL-108(ZM-42-65) | BR | தபசு (?) |
| 109 | KDL-109(ZM-46-65) | BR | _ஸுத |
| 110 | KDL-110(ZM-46-65) | BR | நெடுங் |

| | | | |
|---|---|---|---|
| 111 | KDL-111(ZM-43-60) | BR | _ன் அ |
| 112 | KDL-112(MX-0-60) | RCBR | வன் # |
| 113 | KDL-113(XG-18-60) | BR | கண்ணன் அதன் |
| 114 | KDL-114(XG-19-60) | RS | வாருணிஇய் அக[ல்] |
| 115 | KDL-115(YZ-39-60) | RCBR | தந்தை வேள்[ள] |
| 116 | KDL-116(ZJ-26-60) | BR | ண்டி அ |
| 117 | KDL-117(ZJ-26-60) | RCBR | கண |
| 118 | KDL-118(ZL-42-60) | RCBR | [ன் அ]த |
| 119 | KDL-119(ZL-44-60) | BR | கு |
| 120 | KDL-120(ZK-24-55) | RCBR | பெறஅந்தவ |
| 121 | KDL-121(ZL-42-55) | RCBR | [த] அ |
| 122 | KDL-122(ZL-43-55) | RS | _ன் |
| 123 | KDL-123(ZL-44-55) | RS | அ[து] |
| 124 | KDL-124(D-28-50) | RCBR | [ய]ஸாலை_ |
| 125 | KDL-125(MX-0-50) | RCBR | _பன் |
| 126 | KDL-126(MX-0-50) | RCBR | ஸாதன் |
| 127 | KDL-127(XF-19-50) | RCBR | [ப]ணத[ன்] |
| 128 | KDL-128(ZJ-26-50) | RCBR | தேவா |
| 129 | KDL-129(ZL-24-50) | RS | _தா |
| 130 | KDL-130(ZL-44-50) | BR | தொ |
| 131 | KDL-131(ZM-42-50) | BR | _[கந்] |
| 132 | KDL-132(ZL-42-45) | BR | [வ]ளக |
| 133 | KDL-133(ZJ-26-40) | RCBR | _தை |
| 134 | KDL-134(ZK-24-40) | BR | அ # |
| 135 | KDL-135(ZL-43-40) | RS | ய |
| 136 | KDL-136(ZL-43-40) | BR | _அந் |
| 137 | KDL-137(ZM-46-40) | BR | லிகன் |
| 138 | KDL-138(ZJ-26-35) | RCBR | [ளாஅ] |
| 139 | KDL-139(ZL-25-35) | BR | ன் |
| 140 | KDL-140(ZL-25-35) | R | கித_ |
| 141 | KDL-141(ZU-47-35) | BR | ஸ_ |
| 142 | KDL-142(ZL-47-30) | BR | தவ |
| 143 | KDL-143(ZM-42-30) | RCBR | க |

| | | | |
|---|---|---|---|
| 144 | KDL-144(ZM-44-28) | RS | தித[ர]ன் |
| 145 | KDL-145(ZL-24-25) | RS | _அத |
| 146 | KDL-146(ZL-25-25) | RCBR | ஸஸ_ |
| 147 | KDL-147(E-29-20) | RCBR | சாதன் |
| 148 | KDL-148(ZJ-25-20) | RS | [ன]ழ அயி |
| 149 | KDL-149(ZJ-26-20) | BR | ம்பன் |
| 150 | KDL-150(ZL-43-20) | BR | தை_ |
| 151 | KDL-151(ZL-43-20) | BR | _ட$_3$ அ_ |
| 152 | KDL-152(ZJ-26-16) | RS | _அ_ |
| 153 | KDL-153(E-29-15) | BR | தன் |
| 154* | KDL-154(ZJ-26-15) | RS | சாத_ |
| 155 | KDL-155(ZM-44-15) | BR | _த |
| 156 | KDL-156(ZM-44-15) | BR | _ம்பன் |
| 157 | KDL-157(ZM-44-15) | BR | புதன் |
| 158 | KDL-158(XF-19-5) | RS | [வ]ளிகன் |
| 159 | KDL-159(MX-0-5) | BR | [ச]ம்ப |
| 160 | KDL-160(ZL-25-5) | BR | [ன்]றன் |
| 161 | KDL-161(ZM-44-5) | RCBR | [ய]தி |
| 162 | KDL-162(ZM-45-5) | BR | த$_3$த |
| 163 | KDL-163(SF) | RCBR | ஸ |
| 164 | KDL-164(SF) | BR | _அழி[ஞ்] |
| 165 | KDL-165(SF) | BR | [ன்] அத_ |
| 166 | KDL-166(SF) | BR | அந்தந்தை ந_ |
| 167* | KDL-167(SF) | BR | _கட$_3$_ஸ (?) |
| 168 | KDL-168(SF) | BR | கனி # |
| 169 | KDL-169(SF) | BR | _கன் ம_ |
| 170 | KDL-170(SF) | RCBR | [த]னஸ |
| 171 | KDL-171(kml-10-70) | RC | ன் அதன் |
| 172 | KDL-172(kml-12-35) | RS | [னய்] அஸோ |
| 173 | KDL-173(kml-7-180) | BR | _ன் ஸோமந்[ந] |
| 174 | KDL-174(kml-9-130) | BR | ன் அஸோ |
| 175 | KDL-175(kml-b2-165) | BR | [வி]னை |
| 176 | KDL-176(kml-b2-105) | RC | [ப]யஸ_ |

| | | | |
|---|---|---|---|
| 177 | KDL-177(kml-b2-85) | RS | [ந்]மாகீ_ |
| 178 | KDL-178(kml-c1-80) | BR | தாதை |
| 179 | KDL-179(kml-c2-155) | R | ன் அதன் [அ] |
| 180 | KDL-180(kml-c2-125) | RC | தாவந் |
| 181 | KDL-181(SF) | RC | வேளத |
| 182 | KDL-182(SF) | BR | விஸகன் அதன் |
| 183 | AGM-01(AGM-1-410) | G | பிடி உறயு |
| 184 | AGM-03(AGM-3-80) | BR | சிரிக$_3$ |
| 185* | AGM-10(AGM-7-78) | R | _சிக#_ |
| 186 | AGM-11(AGM-7-81) | BR | ன் அ |
| 187* | AGM-13(AGM-7-174) | R | பதுமறுகோ# |
| 188 | AGM-17(AGM-8-70) | BR | அரஹ |
| 189 | AGM-18(AGM-8-70) | BR | தியு_ |
| 190 | AGM-19(AGM-8-335) | BRRLT | அத்தன் சா[த்] |
| 191 | AGM-20(AGM-8-335) | BRRLT | குவிரஅன் அ |
| 192 | AGM-24(AGM-8-385) | BRRLT | ளவடீ |
| 193* | AGM-25(AGM-8-410(pit)) | R | _ரஜ$_2$க$_3$ |
| 194 | AGM-28(AGM-10-225) | BR | ஊத்தி |
| 195 | AGM-29(AGM-10-300) | BR | வன் |
| 196 | AGM-33(AGM-11-380) | G | ம்பன் # |
| 197* | AGM-34(AGM-11-385) | BR | _ரகிதச$_0$ |
| 198 | AGM-36(AGM-12-160) | G | ரல ஊத |
| 199 | AGM-38(AGM-12-235) | BR | கை |
| 200 | AGM-39(AGM-12-230) | BR | த$_3$த[ச$_0$] |
| 201 | AGM-40(AGM-12-235) | BR | [தீ]ய |
| 202 | AGM-43(AGM-12-275) | BR | குத[ச$_0$] |
| 203 | AGM-45(AGM-15-280) | BR | ன்றன் |
| 204 | AGM-46(AGM-16-160) | RLT | ந்தன் |
| 205 | AGM-49(AGM-17-45) | BR | தாநிய[r$_3$]சாணமாண (?) |
| 206 | AGM-51(AGM-17-305) | RLT | ஊதின அரை |
| 207 | AGM-54(AGM-18-130) | BR | பதி |
| 208 | AGM-57(AGM-18-255) | R | அரஹஸ |
| 209 | AGM-60(SF) | RLT | ச$_0$மு |

| | | | |
|---|---|---|---|
| 210 | AGM-61(SF) | RLT | சமுதஹ |
| 211 | AGM-62(SF) | RLT | திசஅன் |
| 212 | AGM-63(SF) | G | [கு]ம்ம அல் |
| 213 | AKW-1(AK-I) | | [அ]_ _[ந்தை] |
| 214* | AKW-2(AK-I) | CW | _ன் பியம[ண]ர் |
| 215* | AKW-3(AK-IV) | | யக$_2$மித்ரஸ |
| 216 | AKW-5(AK-II) | | _வய் ஆழர் |
| 217 | AKW-6(AK-II) | | [ஆ]வி |
| 218 | AKW-8(AK-II) | | அம[ன்] |
| 219* | AKW-9(AK-II) | | சாத்தன் ஆவிஇன் கோதிரசன் ஆதிரையன் # |
| 220 | AKW-10(AK-II) | | த்தன் |
| 221 | AKW-12(AK-III) | | ர சிந்தம_ |
| 222 | AKW-15(AK-IV) | | முதி குயிரஅன் அகல் |
| 223* | AKW-16(AK-IV) | | நகைகழ[ச] |
| 224 | AKW-17(AK-VII) | | த்திராம |
| 225* | AKW-18(AK-V) | G | பு$_3$தச$_0$ |
| 226* | AKW-19(AK-?) | | ன் தெவ்வை தத்தை கோத்திராஅள் |
| 227* | AKW-20(AK-?) | | யறவலபு$_4$தய பதி |
| 228 | AKB-1 | CW2 | ன் குலவ[ய] |
| 229 | AKB-5 | CW2 | ணக்கன் 855 ய |
| 230 | AKB-6 | CW2 | தானிதுதெய |
| 231 | AKB-9 | CW1 | _ள் ஆதன் |
| 232 | AKB-16 | FW2 | _வணதி3கஸ |
| 233* | AKB-17 | CW1(R) | [த்]தன் இயத |
| 234 | AKB-21 | FW2 | [ன்] அகல் |
| 235 | AKB-22 | CW2 | _கணன் |
| 236 | AKB-23 | CW2 | ன் குத்தைய் பெரு__(?) |
| 237 | AKB-24 | CW2 | குயிரன் |
| 238 | AKB-26 | CW2 | யளெ சாதன் (?) |
| 239 | AKB-29 | CW2 | குபி$_3$ரஹ |
| 240 | AKB-30 | FW2 | உத்திரன் |

| | | | |
|---|---|---|---|
| 241 | AKB-31 | ? | [_ஈ]_ _ம ஆத்தீர[ய்] (?) |
| 242 | URY-2(URY-2-167) | BR | [க]ணகன் தி[ன] |
| 243* | URY-3(URY-2-240) | RS | முலன் பெறஅந்தனன் ஊம[ணெ] |
| 244 | URY-6(URY-2-138) | BR | கதஅன் அ_ _ |
| 245 | URY-9(URY-3-150) | BR | கள_ |
| 246 | URY-10(URY-4-30) | BR | புனகன் |
| 247 | URY-11(URY-4-30) | | அதன் |
| 248 | URY-12(URY-4-23) | R | அரைச (?) |
| 249 | URY-13(URY-7-250) | R | ரய்அன் திச |
| 250 | URY-14(URY-7-250) | R | குவி |
| 251 | URY-16(URY-8-460) | R | அதன் |
| 252 | URY-18(URY-8-430) | RC | ம்பன் |
| 253 | URY-19(URY-8-435) | | _அதன் |
| 254 | VLM-1 | BR | யிபகொதி |
| 255 | VLM-2 | BR | தி அழ |
| 256* | KARUR(KRR-105) | B | _ய்திய் அயமரைய் அயை பா |
| 257 | KARUR(SF) | RS | டிய்த |
| 258 | TIV(TIV-2-75) | BR | ல்லன் |
| 259 | TIV(TIV-7-12) | BR | கொற்றன் |
| 260 | TIV(TIV-7-38) | BR | நெடுங்கிள் |
| 261 | MGM(MGM-4-320) | BR | மதினகா_ _ |
| 262 | MGM(MGM-4-315) | R | அட |
| 263 | MGM(MGM-4-295) | BR | தாய_ |
| 264 | MGM(MGM-4-205) | BR | ன் அவி |
| 265 | MGM(MGM-1-350) | BR | வன் தல_ _ _ _? |
| 266 | MGD(MGD-1-108) | BR | குறும்மாங்கள அதன் யியானை [பெ]_ |
| 267* | EGYPT(Berenike) | Amphora | கொற்புமான் |
| 268 | EGYPT(Quseir al-Qadim) | | சாதன் |
| 269 | EGYPT(Quseir al-Qadim) | | கணன் |
| 270 | EGYPT(Quseir al-Qadim) | R | பனை ஓறி |

**அட்டவணை விளக்கம்**

பொறிப்பு ஓட்டின் சுட்டுக் குறிப்பு :

இதில் பொறிப்பு ஓடு கிடைத்த அகழாய்வில் அதன் அகழ்வாய்வாளர் அதற்குக் கொடுத்த வரிசை எண், அது கிடைத்த அகழாய்வுக் குழி, மற்றும் மண் அடுக்கின் ஆழம் ஆகியன முறையே உள்ளன. எடுத்துக்காட்டாக KDL-2(ZK-36-200) கொடுமணலில் கிடைத்த ஓட்டுப் பொறிப்பு எண் 2, ZK-36 என்ற அகழாய்வுக் குழியில் 200 சென்டி மீட்டர் ஆழத்தில் கிடைத்தது என்று பொருள்படும். SF, மேற்பரப்பில் பெற்ற பொறிப்பு ஓட்டைக் குறிக்கும்.

**மண்கல வகை**

| | |
|---|---|
| BR | கறுப்பு சிவப்பு |
| BRRLT | ரூலட் வரைவுடன் கூடிய கறுப்பு சிவப்பு |
| BS | கறுப்பு மேற்பூச்சு பெற்றது |
| CW | (அரிக்கமேட்டில்) சிறிது சுரசுரப்பான வகை |
| G | சாம்பல் |
| R | சிவப்பு |
| RC | வண்ணம் தீட்டப்பட்டு செம்பழுப்புப் பூச்சு பெற்றது |
| RS | சிவப்பு மேற்பூச்சு பெற்றது |
| RLT | ரூலட் வரைவு பெற்றது |
| FW | (அரிக்கமேட்டில்) நயமான வகை |

**தொல்லியல் இடங்கள்**

| | |
|---|---|
| KDL | கொடுமணல் |
| AGM | அழகன்குளம் |
| AKW | அரிக்கமேடு (மார்டிமெர் வீலர் அகழாய்வு) |
| AKB | அரிக்கமேடு (விமலா பெக்லே அகழாய்வு) |
| URY | உறையூர் |
| VLM | வல்லம் |
| KRR | கரூர் |
| TIV | தேரிருவேலி |
| MGM | மாளிகைமேடு |
| MGD | மாங்குடி |

**உடுக்குறியிட்டவை பற்றிய குறிப்பு**

1. மகாதேவன் (2003, ப. 189-90) இரண்டாவது எழுத்தை ழு என்று படிக்கிறார். 56, 197, 219, 225, 226 மகாதேவன் கொடுத்த பாடம்.

187. காசிநாதன் (1997) இதை பதுமாறு கோதை என்றும், மகாதேவன் (2003, ப. 60) பதுமற்கோதை என்றும் படித்துள்ளனர். இறுதியில் தை என்று படிக்கப்பட்டது. எழுத்தாக இருக்க வாய்ப்பில்லை. அது வெறும் குறியீடே.

215. தா 3))நி (1986) கொடுத்த யக$_2$)) மித்ரஸ்ய என்ற பாடம் தவறு. மகாதேவன் (1973) முதலில் கொடுத்த யக$_2$)) மித்ரஸ என்ற பாடமே சரி. ஸ எழுத்து அலங்காரமாக எழுதப்பட்டுள்ளது.

227. வீலர் அறிக்கையில் யது$_3$)) வலபூ$_4$))ய பதி என உள்ளது. மகாதேவன் (2003, ப. 190) இலங்கைக் கல்வெட்டாய்வாளர் கருணரத்நாவின் பாடத்தை யொட்டி து$_3$)) வை மு என்று படிக்கிறார்.

243. மகாலிங்கம் (1968), சண்முகம் (1988) ஆகியோர் இரண்டாவது கூறை, பேடு என்று படித்து மூலன்பேடு என்பதை ஊர்ப் பெயராகக் கொண்டனர். டு வடிவத்தை ற என்று படிக்க வாய்ப்புண்டு. எண் 120ஐ ஒப்பிடுக.

256. இறுதிக் கூறை மகாதேவன் பா((தி)) என்று ஊகித்துள்ளார்.

## மண்கல தமிழ்பிராமி வடிவங்கள்

| | | க் (k) | ங் (ṅ) | ச் (c) | ஞ் (ñ) |
|---|---|---|---|---|---|
| அ (a) | 3 15 23 | 13 154 | 260 118 | 15 | 164 |
| ஆ (aa) | 215 | | | 43 154 210 | |
| இ (i) | 3 14 | 15 43 | | 164 | |
| ஈ (ii) | | 4 | | | |
| உ (u) | 240 | 31 47 237 | | 27 | |
| ஊ (uu) | 154 | | | | |
| எ (e) | 26 | | | 178 | |
| | | | | | |
| ஒ (o) | | 259 | | | |
| ஓ (oo) | | 41 | | | |

| | ட் (ṭ) | ண் (ṇ) | த் (t) | ந் (n) | ப் (p) |
|---|---|---|---|---|---|
| அ (a) | 39 | 5 113 | 2 39 | 6 | 15 |
| ஆ (aa) | 3 | 127 | | | 17 57 |
| இ (i) | 116 | 114 | 7 24 86 | 88 98 | |
| ஈ (ii) | 192 | | | 3 | |
| உ (u) | 110 | | 187 | | 98 |
| ஊ (uu) | | | | | |
| எ (e) | | | 81 128 | 28 110 | 120 236 |
| ஐ (ai) | | | 6 27 | | |
| ஒ (o) | | | 2 130 | | 45 |
| ஓ (oo) | | | | | |

Ashok Vardan Shetty, K. 2003. *Excavations at Mangudi*. TSAD, Chennai.

Begley, Vimala., 2004. "The Dating of Arikamedu and its Bearing on the Archaeology of Early Historical South India", in *South-Indian Horizons: Felicitation Volume for Francois Gros*, ed. Jean-Luc Chevillard, Institut Francais de Pondichery and EFEO, pp. 513-37.

Begley, Vimala., *et.al.*, 1996. *The Ancient Port of Arikamedu: New Excavations and Researches 1989—1992*, Vol.1, Ecole Francaise d' Extreme-Orient, Pondichery.

Chhabra, B. Ch., 1950. "Peshawar Potsherds with Kharoshthi Writings", *Epigraphia Indica*, XXVIII, pp. 125-29.

Coningham, R.A.E., Allchin, F.R., Batta, C.M.,, & Lucy, D., 1996. "Passage to India? Anuradhapura and the Early Use of the Brahmi Script", *Cambridge Archaeological Journal* 6:1, 73-97.

Dani, A.H., 1986. *Indian Palaeography*, Munshiram Manoharlal, New Delhi.

Diskalkar, D.B., 1949. "Excavations at Kasrawad", *The Indian Historical Quarterly, vol. XXV*, pp. 1-18.

Karunaratne, Saddhamangala., 1984. *Epigraphia Zeylanica*, vol. VII (Special Volume). Archaeological Department, Ceylon.

Kasinathan, Natana., 1997. Archaic Tamil Inscriptions from Excavations, *Journal of the Epigraphical Society of India*, vol. 23, pp. 69—72. Reproduced in T.S. Sridhar, ed., 2005, pp. 91-99.

Mahadevan, Iravatham., 1971. "Tamil-Brahmi Inscriptions of the Sangam Age". *Proceedings of the Second International Conference-Seminar of Tamil Studies* I, Madras. 73-106.

Mahadevan, Iravatham., 1973. Arikamedu Graffiti: A Second Look, *Damilica*, Vol. 2, part 3, pp.60-64,

Mahadevan, Iravatham., 1996A. Old Sinhalese Inscriptions from Indian Ports: New Evidence for Ancient India Sri Lanka Contacts, *Journal of the Institute of Asian Studies*, 14(1), pp. 55 - 68.

Mahadevan, Iravatham., 1996B. "Pottery Inscriptions in Brahmi and Tamil Brahmi", in Begley, *et.al.*, 1996, Chapter 5, pp. 287-315.

Mahadevan, Iravatham., 2003. *Early Tamil Epigraphy: From the Earliest Times to the Sixth Century A.D.*, Cre-A, Chennai and Harvard University, USA.

Mahadevan, Iravatham. 2004. கொடுமணல் தாழியில் பழந்தமிழ்ச் சொற்கள், *வரலாறு* 14:ப.101-03.

Mahalingam, T.V., 1968. Inscribed Potsherds from Alagarai and Uraiyur, in R. Nagaswamy 1968, pp. 42-43,

Mahalingam, T.V., 1970. *Report on the Excavations in the Lower Kaveri Valley (Tirukkampuliyur and Alagarai)*, University of Madras, Madras

Nagaswamy, R., (ed.) 1968. *Seminar on Inscriptions 1966*. Books India Pvt Ltd, Madras.

Nagaswamy, R., 1970. "Korkai Excavations", *Damilica*, I, Tamilnadu State Archaeology Department, Chennai, pp. 50—54.

Paranavitana, S., 1970. *Inscriptions of Ceylon Vol.I* (containing cave inscriptions from 3rd century B.C. to 1st century A.C. and other inscriptions in the early Brahmi script), Department of Archaeology, Ceylon.

Rajagopal, S., 2002. "Pottery with writings from excavations of Tamilnadu State Archaeology Department", Presented in Seminar on Early Tamil Epigraphy, Madras Institute of Development Studies, Chennai. (*Mimeo*).

Rajan, K., 2001. பண்டைக் குறியீடுகளும் எழுத்துக்களும், தமிழ்க் கல்வெட்டியலும் வரலாறும் (Old Graffiti and Writings), in Y.Subbarāyalu and S.Raju (ed.), *Tamilk kalvettiyalum varalârum*, pp. 1-18.

Rajan, K., 2003. Report on Mayiladumparai Excavations. Tamil University, Tanjavur (mimeo).

Rajan, K., 2004. தொல்லியல் நோக்கில் சங்க காலம் (The Sangam Period in the Light of Archaeological Evidence). International Institute of Tamil Studies, Chennai.

Rajavelu, S. and Thirumoorthy, G., 1995, தமிழ்நாட்டுத் தொல்லியல் அகழ்வாய்வுகள் (Archaeological Excavations in Tamilnadu) Panpattu Veliyittakam, Chennai.

Raman, K.V., (ed.) 1998, *Excavation at Uraiyur (Tiruchirappalli), 1965-69*, University of Madras, Madras.

Ray, Himanshu Prabha, 1987. "Inscribed Sherds: A Study", *Indica*, vol. 24, no.1, pp. 1-14.

Selvakumar, V., 2007. Another Tamil-Brahmi sherd from Quseir al-Qadim (Mimeo).

Shanmugam, P., 1988. "Inscribed Sherds and Graffiti", in K.V. Raman, ed., 1998, pp.69—83.

Soloman, Richard, 1991. "Epigraphic Remains of Indian Traders in Egypt", *Journal of American Oriental Society*, 111.4, pp. 731—36.

Sridhar, T. S., (ed.) 2004. *Excavations of Archaeological Sites in Tamilnadu (1969-1995)*, TSAD, Chennai.

Sridhar, T. S., (ed.) 2005. *Alagankulam, an Ancient Port City of Tamil Nadu*, TSAD, Chennai.

Sridhar, T. S.; (ed.) 2006. தமிழ்பிராமி கல்வெட்டுகள் *(Tamil-Brahmi Inscriptions)*, TSAD, Chennai.

Subbarayalu, Y., 1984. "Vallam Excavations", *Tamil Civilization*, vol.2(4), p.9—98.

Subbarayalu, Y., 1988. Report on Kodumanal Excavations, Tamil University, Thanjavur (Mimeo).

Subbarayalu, Y., 1996. Illustrated Catalogue of Pottery Inscriptions from Kodumanal (Mimeo).

Subrahmanyam, R., 1964. *Salihundam, A Buddhist Site in Andhra Pradesh.* AP Government Archaeological Series No. 17. Hyderabad.

Subrahmaniyan, T.N., 1957. "The Tamil Palaeography" in *South Indian Temple Inscriptions*, vol. III, part II, pp. 1499-1610. Government Oriental Manuscripts Library, Chennai. (Slightly revised version of his original publication in Tamil: *Pandai Tamil Eluttukkal* 1938.)

Vasanti, S. 2002. Inscribed Potsherds from Maligaimedu and Teriruveli (மாளிகைமேடு தேரிருவேலி எழுத்துப் பொறிக்கப்பட்ட பானை ஓடுகள்) *Avanam*, 13, pp. 4-6.

Wheeler, R.E.M., *et al.* 1946. "Arikamedu: An Indo-Roman Trading Station on the East Coast of India", *Ancient India*, ASI, no. 2, pp. 17-124.

# 62. செய்தித் திரட்டு-புதிய கண்டுபிடிப்புகள்

## 62 : 1 தீண்டாங்கல் மலையில் சமணப்படுக்கை

தீண்டாங்கல் என்ற ஊர் கரூரிலிருந்து தென்மேற்காக 22 கி.மீ. தொலைவில் உள்ளது. இங்கு தீண்டாங்கல் என்ற சிறிய மலைக்குன்று உள்ளது. இம்மலையின் கிழக்குப்பகுதியில் நடுமலையில் இயற்கையான குகை ஒன்று உள்ளது. இக்குகையில் நான்கு கற்படுக்கைகள் செதுக்கப்பட்டுள்ளன. மலையின் அடிவாரத்திலிருந்து சுமார் 80 அடி உயரத்தில் இப்படுக்கைகள் அமைந்துள்ளன. படுக்கையின் முகப்பு தெற்கு நோக்கி அமைந்துள்ளது. படுக்கைக்குள் மழைநீர் புகாமல் இருக்க விளிம்புகளும், செங்குத்தாக உள்ள மலையில் ஏறிச் செல்வதற்குப் படிக்கட்டுக்களும் வெட்டப்படவில்லை. படுக்கைகள் வெட்டும்போது பாறைகளைச் சமதளப்படுத்தி வெட்டவில்லை. சுமார் 30 டிகிரி சாய்வு நிலையில் உள்ள பாறையில் படுக்கைகள் நேர்த்தியாக கிழக்கு மேற்காக வெட்டப்பட்டுள்ளன. தலைவைத்துப் படுப்பதற்கு படுக்கையிலிருந்து சராசரியாக 25 செ.மீ. உயரம் வைத்து வெட்டப்பட்டுள்ளன. இம்மலையைச் சுற்றிலும் மிக வறண்ட நிலப்பகுதியாக காணப்படுகிறது. நீர் ஆதாரத்திற்கான இயற்கையான பாழிகள் (சுனைகள்) இம்மலையில் உள்ளன. கரூரைச் சுற்றிலும் இதுவரை புகளூர், ஐவர்மலை, சுக்காலியூர், குண்டாங்கல் பாறை ஆகிய இடங்களில் சமணப்படுக்கைகள் கண்டறியப்பட்டுள்ளன. தொல்லியல்துறை கரூர் அருங்காட்சியகக் காப்பாட்சியர் திரு.நாக.கணேசன் அவர்களும், கரூர் மார்னிங் ஸ்டார் பள்ளி ஆசிரியர் பாலசுப்பிரமணியனவர்களும் கள ஆய்வின் போது உடனிருந்தனர்.



**வி.ப.யதீஸ்குமார்**, புதுச்சேரி

## 62 : 2 செங்காளிபுரம் சி ற்பங்கள், கல்வெட்டு

செங்காளிபுரம் கரூர் வட்டத்தில், கரூர் மாவட்டத்தில் உள்ளது. இவ்வூர் கரூரிலிருந்து 20 கி.மீ. தொலைவில் கோவை செல்லும் சாலையில் அமைந்துள்ளது. இவ்வூரின் வடகிழக்கில் சிவன்கோயில் உள்ளது. இக்கோயிலில் சுமார் பத்திற்கும் மேற்பட்ட சிற்பங்கள் உள்ளன. கோயிலில் இருந்த கல்வெட்டுக்கள் புணரமைப்பு மற்றும் விநாயகர் செய்வதற்காக முற்றிலும் சேதப்படுத்தப்பட்டுள்ளன. இதிலுள்ள சிற்பங்கள் மட்டும் சேதமின்றி உள்ளன. அவற்றில் சப்தமாதர் சிற்பங்கள், ஜேஸ்டா தேவி, சூரியன் சிற்பங்கள் உள்ளன. இச்சிற்பங்கள் கி.பி. 9-10ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவையாகும்.

இக்கோயிலின் வடபுறம் ஒரு துண்டுக்கல்வெட்டு மட்டும் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது.

1. … ….டிய தேவர்கு யாண்டு ஒந்பதா… … …
2. … … ரில் … … காணியான நிலத்திலே மு … …. ம் கட்டு
3. … …. லையில் ஆ … … ழ … நியம் அரைக்காலும் இ …
4. … … … குறிப்பிட இ… … … … … ணமும்

இக்கல்வெட்டு பெரிதும் சேதமடைந்த காரணத்தினால் அரசனின் பெயர் தெரியவில்லை. கல்வெட்டில் தேவர்க்கு யாண்டு ஒன்பதாவது என்ற செய்தியை வைத்து அரசனின் 9-வது ஆட்சியாண்டில் இக்கோவிலுக்கு நிலம் கொடை அளித்தது பற்றியும், நில அளவுகள் பற்றியும் அறிய முடிகின்றது.



சப்தமாதர் சிற்பங்கள்



சேட்டை



சூரியன்

வி.ப.யதீஸ்குமார், புதுச்சேரி
வி.செல்வக்குமார், புதுச்சேரி

## 62 : 3 துர்க்கை சிற்பம்

கோனூர் நாமக்கல்லிருந்து 12 கி.மீ. தொலைவில் தென்மேற்காக அமைந்துள்ளது. இவ்வூரின் கிழக்குப் பகுதியில் சிவன் கோவிலுக்கு எதிர்புறம் உள்ள சசிகுமார் என்பவருக்குச் சொந்தமான தோட்டத்தில் துர்க்கை சிற்பம் ஒன்று உள்ளது. இச்சிற்பம் 4 அடி உயர பலகைக் கல்லில் நின்ற கோலத்தில் புடைப்புச் சிற்பமாக வடிவமைப்பட்டுள்ளது. வலது கையில் சக்கரமும் இடது கையில் சங்கும் உள்ளன. இதன் காலம் கி.பி. 8-9 ஆம் நூற்றாண்டு.



சி.செல்வக்குமார், புதுச்சேரி.

## 62 : 4 புத்தர் சிற்பம்

சிவகங்கை மாவட்டம் திருப்பாச்சேத்தியிலிருந்து 5 கி.மீ. தொலைவில் மாரநாடு என்னும் ஊர் அமைந்துள்ளது. இவ்வூரின் பின்புறம் சந்தவெளிப்பனை என்னும் இடம் மண் மேடாக உள்ளது. வயல் வெளியில் அமைந்துள்ள இம்மண்மேட்டை மாரநாட்டிலிருந்து வரும் வண்டிப்பாதை இரண்டாகப் பிரிக்கிறது. அடர்ந்த வேலிக்கருவை மரங்களைக் கொண்ட இந்த இடத்தில் புத்தர் சிற்பம், ஐயனார் சிலை உள்ளன. சமண சிற்பம், புத்தர் உருவம் அர்த்த பரியங்காசனத்தில் இடது கையை மடியில் வைத்தும், வலது கையை பூமியைத் தொடும் நிலையில் வைத்தும் அமைக்கப்பட்டுள்ளது.

இச்சிலை தற்பொழுதும் வழிபாட்டில் உள்ளது. இச்சிலை கி.பி. 10-11ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த உருவ அமைதியை பெற்றுள்ளது.

இம்மண்மேட்டின் ஒரு பகுதியில் பெருங்கற்கால மட்பாண்டங்களான கருப்பு மற்றும் கருப்பு சிவப்பு மட்பாண்டங்களின் ஓடுகள் பரவலாக தரையின் மேற்பகுதியிலேயே கிடைக்கின்றன. சிலைகள் காணப்படும் பகுதியில் வரலாற்றுக்கால மட்பாண்டங்களின் ஓடுகள், பீங்கான் வளையல்களின் துண்டுகள் கிடைக்கின்றன. மேலும் செப்பு நாணயங்கள் சில கிடைத்ததாக ஊரார் கூறுகின்றனர். எனவே இப்பகுதி பெருங்கற்காலம் மற்றும் வரலாற்றுக் காலங்களில் ஊரின் குடியிருப்புப் பகுதியாக இருந்துள்ளது என்பதை அறியமுடிகிறது.



**வீ.முத்துக்குமார்**, புதுச்சேரி

**62 : 5 வளையமாபுரத்தில் புத்தர் சிலை**

திருவாரூர் மாவட்டம் வலங்கைமான் வட்டத்திலுள்ள வளையமாபுரம் என்னும் சிற்றூரில் அமர்ந்த நிலையில் தியான கோலத்திலுள்ள ஒரு புத்தர்சிலை கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. பழைய திருச்சி, பழைய தஞ்சாவூர் மற்றும் புதுக்கோட்டை மாவட்டங்களை உள்ளடக்கிய சோழ நாட்டில் சுமார் அறுபதுக்கும் மேற்பட்ட புத்தர் சிலைகள் உள்ளன. வளையமாபுரத்தில் காணப்படும் புத்தர் சிலை 92 செமீ உயரமுள்ளது. இப்பகுதியில் காணப்படும் பெரிய சிலைகளில் இதுவும் ஒன்றாகும். இந்த கற்சிலையானது சோழ நாட்டில் காணப்படுகின்ற 64ஆவது புத்தர்

சிலையாகும். அமர்ந்த நிலையில் பத்மாசன நிலையில் தியான கோலத்தில் உள்ள இச்சிலையின் மார்பில் மேலாடை, இடுப்பில் ஆடை போன்றவை நேர்த்தியாக வடிவமைக்கப்பட்டுள்ளன. திண்ணிய மார்புடனுடம், பரந்த தோள்களுடனும் இச்சிலை மிக அழகாக உள்ளது. வலது கையில் சக்கரக்குறி காணப்படுகிறது. இச்சிலையின் தலைப்பகுதி காணப்படவில்லை. சோழ நாட்டில் பரவலாக ஆங்காங்கு காணப்படுகின்ற புத்தர் சிலைகள் பௌத்த சமயம் இங்கு செழிப்பான நிலையில் இருந்தமைக்குச் சான்றுகளாகும்.



பா.ஜம்புலிங்கம், தஞ்சாவூர்.

## 62 : 6 : 1 வளாகம் - பிற்காலப் பாண்டியர் சிற்பங்கள்

கடலூர் மாவட்டம், சிதம்பரம் வட்டம், சேத்தியார் தோப்பிலிருந்து காட்டுமன்னார்கோயில் செல்லும் வழியில் இடப்புறம் தெ. நெடுஞ் சேரியிலிருந்து சுமார் 2 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள வளாகம் என்னும் ஊருக்கு வடக்குப்புறம் குழவித் தோப்பின் மண்மேட்டில் உள்ள சிற்பம் முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் உருவச்சிலை போன்றுள்ளது. சுமார் 3' உயரம் கொண்ட இச்சிலை நின்ற நிலையில் வலது காலை மட்டும் சற்று மடித்தவாறும், உடல் நறுங்கிய நிலையில், தலைமுடி தூக்கி கட்டப்பட்டு பின்புறம் கொண்டையிட்டு காட்சிதருகிறது. காது நீண்டு தோள்வரை செல்கிறது. மீசையானது மேல்நோக்கி முறுக்கிய நிலையிலும் தாடி அடர்ந்து சீராகவும் முகம் நீள்வட்டமாக சாந்தநிலையில் உள்ளார்ந்த சிரிப்புடன் காணப்படுகிறது. கழுத்தில் ருத்திராட்ச மாலை, கையில் ருத்திராட்ச காப்பும், கைகள் அஞ்சலி முத்திரையுடன் காணப்படுகிறது. இரு கைகளின் இடையில் ருத்திராட்ச மாலையும், கீழாடையானது பாதம் வரையில் கணுக்காலைதொட்ட நிலையில் காணப்படுகிறது. கீழாடையின் குஞ்சங்கள் இரண்டு கால்களுக்கிடையே தொங்கியவாறும், கீழாடையின் மீது கட்டப்பட்டுள்ள இடைக்கச்சையின் வரிவரியான கோடுகளால் அலங்கரிக்கப்பட்டுள்ளது. இதே போன்ற தோற்றமுடைய சிலை, சிதம்பரம்

நடராஜர் கோயிலின் மேற்குக் கோபுர நுழைவாயிலில் உள்ளது. இது பாண்டிய மன்னன் சுந்தரபாண்டியனாக அடையாளப்படுத்தப்பட்டுள்ளது. எனவே வளாகத்தில் காணப்படும் இச்சிற்பமும் சுந்தரபாண்டியனே என்பதில் ஐயமில்லை.



### 62 : 6 : 2 வளாகம் - பிற்காலப் பாண்டியர் சிற்பங்கள்

காலம் கி.பி. 11-12 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கால பைரவர் சிற்பம் வளாகத்தில் உள்ளது. இது நின்ற சமபாத ஸ்தான நிலையுள்ளது. அணிகலன்களாக ஆரம், கண்டிகை, சரபளியோடு முகம் வட்ட வடிவம். கிரீடமானது புஷ்ப கோபுர அமைப்பாலும், உதரபந்தம், உடலில் முப்புரி நூல், அரைக்கால் சட்டையை போன்று முழங்காலுக்கு மேலே தொடை அளவில் காணப்படுகிறது. கீழ் ஆடையின் மீது கட்டப்பட்டுள்ள இடைக் கச்சையின் நடுவே சிம்மமுகம் காலில் தண்டையும் அணிந்துள்ளது.

இவ்வளாகத்தில் கிடைத்த லிங்கோத்பவர் சிலையானது உருளைவடிவத் தூணின் (லிங்கம்) மையத்தில் நீள் வட்ட வடிவ பள்ளம் அமைத்து அதனுள் சிவன் (லிங்கோத்பவர்) உருவம் அமைக்கப்பட்டுள்ளது. லிங்கோத்பவரின் தோன்மத்தோடு தொடர்புடைய பிரம்மன் அன்னப் பறவை வடிவிலும், விஷ்ணு பன்றி வடிவிலும், லிங்கத்தின் முறையே மேல் இடது மற்றும் கீழ் வலது ஓரங்களில் சித்தரிக்கப்பட்டுள்ளன.

### 62 : 6 : 3 சண்டிகேஸ்வரர், துர்க்கை சிற்பங்கள்

கடலூர் மாவட்டம், பண்ருட்டியில் இருந்து கும்பகோணம் செல்லும் நெடுஞ்சாலையின் கிழக்கு பகுதியில் சந்தவெளிப்பேட்டை என்ற ஊர் உள்ளது. இவ்வூருக்குத் தென்புறம் ஓடும் சிற்றாரின் வடக்குகரையில் உள்ள புதர்மண்டிய காட்டில் கி.பி. 9-10 ஆம் நூற்றாண்டு சிற்பம் உள்ளது. சண்டிகேஸ்வரர் சுகாசனத்தில் அதிக அலங்காரமின்றி எளிய அணிகலன்களுடன், வட்ட வடிவ முகம், தடிமனான தலைமுடி பல்லவர் கால சாயலுடன் உள்ளது. இச்சிற்பத்தில் வட்டாரக் கலையின் தாக்கம் குறிப்பாக கால்விரல், உடல்கூறு கை அமைப்புகளில் காணப்படுகிறது.



கடலூர் மாவட்டம் சிதம்பரம், கடலூர் தேசிய நெடுஞ்சாலையில் அமைந்துள்ள ஆலப்பாக்கத்திற்கு மேற்குப் பகுதியில் சிந்தாமணிக்குப்பம் என்ற ஊர் உள்ளது. இவ்வூரின் தென்புறம் உள்ள பெரிய வாய்க்காலின் வடகரை. காலம் கி.பி. 9 - 10ஆம் நூற்றாண்டு. நின்ற நிலையில் உள்ள துர்க்கை சிற்பம் உள்ளது. இது 120 செ.மீ. உயரம் உடைய கி.பி.9-10 ஆம் நூற்றாண்டு சிற்பமாகும். நீண்ட கூம்பு வடிவ கிரீடம், நீள்வட்ட வடிவ முகம் பல்லவர் கலைநுட்பத்தைக் காட்டுகிறது.



ஜே.ஆர்.சிவராமகிருஷ்ணன், அண்ணாமலை நகர்
ப.கலைச்செல்வன், அண்ணாமலைநகர்

## 62 : 6 : 4 வடலூர் அருகில் சங்ககாலக் கட்டடம்

கடலூர் மாவட்டம், வடலூர் அருகே பார்வதிபுரம் பஞ்சாயத்திற்கு உட்பட்ட கோட்டைக்கரை தெருவின் தார்சாலைக்கு மேற்குப்புறம் திரு.தங்கராசு என்பவருக்குச் சொந்தமான நிலத்தில் மழை நீர் வெளியேறு வதற்காக வாய்க்கால் தோண்டும் பொழுது தரையின் மேற்பகுதியில் இருந்து 6 அடி ஆழத்தில் 7×4 அடி அகலமும், உயரமும் கொண்ட ஒரு பெரிய பழங்கால கட்டடப்பகுதி ஒன்று காணப்பட்டது. இதில் மூன்று விதமான அளவுகளைக் கொண்ட சுட்டசெங்கற்கள் பயன்படுத்தப்பட்டிருப்பதை அறியமுடிகிறது.



முதல் வகை : 40×21×8 செ.மீ. நீளம்×அகலம்×உயரம் கொண்டது.

இரண்டாம் வகை : 28×21×8 செ.மீ. நீளம்×அகலம்×உயரம் உடையது.

மூன்றாம் வகை : 20×18×6 செ.மீ. நீளம்×அகலம்×உயரம் கொண்டது.

இது போன்ற செங்கற்கள் காவிரிப்பூம்பட்டிணம், உறையூர் போன்ற இடங்களில் நடைபெற்ற அகழாய்வுகளிலும்வெளிக்கொணரப்பட்டுள்ளன. வடலூரிலும் அதன் தாக்கம் இருந்து வந்துள்ளதை இக்கண்டுபிடிப்பு உறுதிப்படுத்தியுள்ளது.

**ஜே.ஆர்.சிவராமகிருஷ்ணன்**, அண்ணாமலை நகர்
**ப.கலைச்செல்வன்**, அண்ணாமலை நகர்.

**62 : 7 கற்கருவி - தாம்பரம்**

சென்னைக்கு அருகேயுள்ள தாம்பரம் பகுதியில் கற்காலக் கருவிகள் ஏற்கனவே கண்டெடுக்கப்பட்டுள்ளன. அண்மையில், ஏறக்குறைய ஐந்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த மனிதர்கள் பயன்படுத்திய புதிய கற்காலக் கருவி ஒன்று பழைய தாம்பரம் மலையடிவாரத்தில் கண்டெடுக்கப்பட்டுள்ளது.



**தா.ஜான்ஸன் வெஸ்லி**, தாம்பரம்

**62 : 8 : 1 செம்பியன்களரியில் சில தொல்லியல் எச்சங்கள்**

தஞ்சாவூர் மாவட்டத்தில் திருக்காட்டுப்பள்ளிக்கு தென்மேற்கே 9 கி.மீ. தொலைவில் செம்பியன்களரி என்னும் கிராமம் உள்ளது. வெண்ணாற்றுக்கு வடக்கே அமைந்துள்ள இந்த ஊரில் சில தொல்லியல் எச்சங்கள் அண்மையில் கண்டெடுக்கப்பட்டன.

இவ்வூர்க்கு மேற்காக சுமார் ஒரு கி.மீ. தூரத்தில் "நத்தம் கொல்லை" என்று ஊர் மக்களால் அழைக்கப்படும் பெரிய மண்திடல் காணப்படுகிறது. இங்கு களஆய்வின் பொழுது திடலைச் சுற்றி உள்ள பகுதிகளில் மிகுதியான 'கறுப்புசிவப்பு' பானை ஓடுகள் சிவப்பு பானை ஓடுகள் கண்டெடுக்கப் பட்டன. இந்த மண்திடல் தனியார் இடத்தில் இருப்பதால் அதை சுற்றி முள்வேலி போடப்பட்டுள்ளது. இதன் காரணத்தால் முழுவதுமாக மண்திடல் மேல் கள ஆய்வு செய்ய இயலவில்லை. மண் திடலில் உள்ள மண்ணின் நிறம்

சாம்பல் கலந்து காட்சியளிக்கிறது. இந்த இடம் பழங்காலத்து மக்களின் வசிப்பிடமாக இருந்ததற்கு வாய்ப்புள்ளது. இந்த நத்தக் கொல்லை 'அரசன் கொல்லை', மற்றும் 'மூங்கில் கொல்லை' என்ற பெயரில் ஊர் மக்களால் அழைக்கப்படுகின்றது.

### 62 : 8 : 2 சமண தீர்த்தங்களின் சிற்பம்

நத்தம் கொல்லைக்கு வடக்கே சுமார் 1/2 கி.மீ. தூரத்தில் பிள்ளையார் கொல்லை என்னும் மண் திடல் உள்ளது. இந்த மண் திடலுக்கு தெற்குப் பக்கமாக மிக அருகாமையில் வயல்களுக்கு இடையே பாதி அளவு புதையுண்ட 56 செ.மீ. நீளமும், 50 செ.மீ. அகலமும் கொண்ட ஒரு சமண தீர்த்தங்கரரின் கற்சிலை காணப்படுகிறது. இச்சிற்பத்தில் தலைக்குமேல் முக்குடை காட்டப்பட்டுள்ளது. மேலும், இருபுறமும் இயக்கர்கள் காணப்படுகின்றனர். இதன் வடிவ அமைப்பைக் கொண்டு சுமார் 10-11ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கருதலாம். இங்கு காணப்படும் மண் திடல் தற்பொழுது களத்து மேடாகப் பயன்பட்டு வருகிறது. இந்த திடலிலும், தீர்த்தங்கரின் சிற்பத்திற்கு அருகாமையிலும் மற்றும் அருகே காணப்படும் கால்வாயிலும் மிகுதியான அளவில் கறுப்பு சிவப்பு, சிவப்பு பானை ஓடுகள் கண்டெடுக்கப்பட்டன.

### 62 : 8 : 3 லிங்கத்தடி

பிள்ளையார்க் கொல்லைக்கு வடகிழக்கில் சுமார் 1/2 கி.மீ. தூரத்தில் 'லிங்கத்தை' என்னும் இடத்தில் ஒரு கருங்கல்லால் ஆன சிவலிங்கம் காணப்படுகிறது. இந்தப் பகுதியிலும் ஏராளமான கறுப்பு சிவப்பு, கறுப்பு பானை ஓடுகள் கண்டெடுக்கப்பட்டன.



### 62 : 8 : 4 பிற்காலச் சோழர் கோயில்

நத்தம் கொல்லைக்கு மேற்கில் சில அடி தூரத்தில் பிற்காலச் சோழர் கோயில் ஒன்று இருந்துள்ளது. தற்பொழுது அந்த கோயில் புதிய கட்டுமானப் பொருட்களால் புதுப்பிக்கப்பட்டு தற்கால கோவில் போல் காட்சியளிக்கிறது. அழிந்த நிலையில் எடுத்த புகைப்படம் சில மட்டும் இக்கோயிலின் பூசாரியிடம் தற்பொழுது உள்ளது. அந்தப் புகைப்படங்கள் மட்டுமே இங்கு பிற்காலச் சோழர்களின் கோயில் இருந்தற்கான ஆதாரமாகும். இவ்வாறாக செம்பியன்களரியில் ஓர் தொடர்ச்சியான வரலாற்றை வெளிக்காட்டும் இடமாகத் திகழ்கிறது.

**சி.ஆர்.காயத்ரீ, சென்னை**

### 62 : 9 : 1 மூதேவி

பேரங்கியூர் திருவெண்ணெய் நல்லூர், விழுப்புரம் வட்டம் சிவன்கோயில் அருகில் உள்ள மூதேவி. உயரம் 4½ அடி அகலம் 2 அடி. வலப்பக்கம் மாந்தன் காக்கை உருவம், இடப்பக்கம் மாந்தி.



திம்மச்சூர், திருக்கோயிலூர் வட்டம், விழுப்புரம் மாவட்டம், தாமரைமேல் சேட்டாதேவி. உயரம் 3¼ அடி, அகலம் 2¾ அடி.

### 62 : 9 : 2 புத்தர் சிற்பங்கள்

புத்தர் - ஆர்ப்பாக்கம், காஞ்சிபுரம் மாவட்டம், காஞ்சிபுரம் பெருநகர் செல்லும் சாலை பெருமாள் கோயில் சுவர் பக்கமாக நின்ற நிலையில் புத்தர். உயரம் 5 அடி அகலம் 2½ அடி.



செயங்கொண்டம், உடையார்பாளையம் வட்டம், அரியலூர் மாவட்டம், ஊர்த்தெருவில் அமைந்துள்ள புத்தர் சிலை. உயரம் 3¼ அடி, அகலம் 2¼ அடி.

**62 : 9 : 3 நவகண்ட சிற்பங்கள்**

மணிமங்கலம், சிவன்கோயில் முன்புறம் உள்ளது.

**62 : 9 : 4 பள்ளிகொண்ட பெருமாள்**



தொண்டூர், செஞ்சி வட்டம், விழுப்புரம் மாவட்டம், மலைப்பாறையில் செதுக்கப்பட்ட பள்ளிகொண்ட அரங்கர். நீளம் 3 மீட்டர், அகலம் 1 மீட்டர் 30 செ.மீ. பாம்பணைமேல் பள்ளி கொண்டுள்ளார். மார்பில் பூணூல், தலையில் மகுடம். இடுப்பிலிருந்து கணுக்கால்வரை ஆடை, கைகளில் கடகம்.

முத்துஎத்திராசன், சென்னை.

**62 : 10 : 1 திருமுண்டீஸ்வரம் சிற்பங்கள்**

உளுந்தூர்ப்பேட்டை வட்டம், விழுப்புரம் மாவட்டம். பண்ருட்டியில் இருந்து திருக்கோவிலூர் செல்லும் சாலையில் பண்ருட்டியிலிருந்து வடமேற்கே 15 கி.மீ. தொலைவில் மத்தாற்றின் வலக்கரையில் இவ்வூர் அமைந்துள்ளது.

**விஷ்ணு** : திருமுண்டீஸ்வரத்தின் வடக்கே மத்தாற்றின் இடக்கரையில் இச்சிற்பம் உள்ளது. சிற்பத்தின் தலை உடைந்துள்ளது. மேலும் இதில் இருக்கும் நான்கு கைகளில் இரண்டு கைகள் உடைந்துள்ளன. சிற்பத்தின் அமைப்பைக் கொண்டு நோக்கும் போது இதன் காலம் கி.பி. 8-9 ஆம் நூற்றாண்டாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.



குமரப்பநாயக்கன் பேட்டை, கடலூர் வட்டம், விழுப்புரம் மாவட்டம். கடலூரிலிருந்து பண்ருட்டி செல்லும் வழியில் பெண்ணையாற்றின் வலக்கரையில் கடலூரிலிருந்து மேற்கே 3 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இவ்வூரில் உள்ள புத்த கோயிலில் 10-11 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த புத்தர் சிற்பம் உள்ளது.

**முகலிங்கம்** : திருமுண்டீஸ்வரத்திலிருந்து தெற்கே கீரிமேடு செல்லும் வழியில் 1 கி.மீ. தொலைவில் சாலையின் வலபுறம் உள்ளது.



ஜேஸ்டா தேவி : ஊரில் உள்ள சிவன் கோவில் முன்பாக சாலையின் ஒரமாக இச்சிற்பம் உள்ளது. இச்சிற்பத்தினை அப்பகுதி மக்கள் மூத்ததேவி அம்மா என்று அழைக்கின்றனர்.

ரா.ரமேஷ், காளையனூர்.

**62 : 10 : 2 காவிரியாற்றங்கரையில் சில புதிய நடுகற்கள்**

ஆலம்பாடி. இவ்வூர் கர்நாடக மாநிலம் சாம்ராஜ் நகர் வட்டத்தில் அமைந்துள்ளது. மேட்டூரிலிருந்து மாதேஸ்வரம் மலை செல்லும் சாலையில் மேற்கே 32 கி.மீ. தொலைவில் பாலாறு அமைந்துள்ளது. பாலாற்றிலிருந்து வடக்கே 40 கி.மீ. தொலைவில் காவிரியாற்றின் வலக்கரையில் இவ்வூர் அமைந்துள்ளது. இவ்வூரிலுள்ள விஷ்ணு கோயிலுக்கு முன்பாக மூன்று நடுகற்கள் உள்ளன.



**நடுகல் - 1 :** கிழக்கு நோக்கி நடப்பட்டுள்ள இந்நடுகல்லில் வீரன் மற்றும் அவனது மனைவியின் உருவங்கள் உள்ளன. வீரனின் வலது கையில் வாளும், இடது கையில் கேடயமும் உள்ளவாறு காட்டப்பட்டுள்ளது. வீரனின் இடுப்பில் ஆடையும், குறுவாளும் உள்ளவாறு காட்டப்பட்டுள்ளன. அவனது மனைவி வீரனுக்கு வலப்புறம் உள்ளவாறு காட்டப்பட்டுள்ளது. மனைவியின் தலைக்குமேல் தொடங்கி கெத்தசெடம் என ஒரு வரியில் கல்வெட்டுள்ளது.

**நடுகல் - 2 :** முதல் நடுகல்லின் அருகிலேயே மேலும் இரண்டு நடுகற்கள் உள்ளன. இரண்டாவது நடுகல்லில் வீரனின் வலது கையில் வாளும், இடது கையில் கேடயமும் உள்ளவாறு காட்டப்பட்டுள்ளது. வீரனின் இடுப்பில் ஆடையும், குறுவாளும் உள்ளவாறு காட்டப்பட்டுள்ளன. கல்வெட்டு ஏதும் இல்லை.

**நடுகல் - 3 :** இரண்டாவது நடுகல்லைப் போலவே இந்நடுகல்லிலும் வீரனின் வலது கையில் வாளும், இடது கையில் கேடயமும் உள்ளவாறு காட்டப்பட்டுள்ளது. வீரனின் இடுப்பில் ஆடையும், குறுவாளும் உள்ளவாறு காட்டப்பட்டுள்ளன. கல்வெட்டு ஏதும் இல்லை.



சின்னதண்டா, மேட்டூர் வட்டம், சேலம் மாவட்டம். மேட்டூரிலிருந்து நீதிபுரம் செல்லும் வழியில் மேற்கே 15 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. ஊரின் அருகே சாலையின் இடதுபுறம் உள்ள கவுண்டர் வீட்டின் அருகில் இந்நடுகல் உள்ளது. இந்நடுகல்லில் வீரனின் வலது கையில் அம்பும், இடது கையில் வில்லும் உள்ளவாறு காட்டப்பட்டுள்ளன. இடுப்பில் ஆடையுடன் குறுவாள் உள்ளது. வீரனின் தலையில் கொண்டை தெளிவாக காட்டப்பட்டுள்ளது. வீரனின் இடதுபுறம் மேலே ஒருவர் தியான நிலையில் உள்ளவாறும் அவரின் இருபுறமும் இரண்டு தேவகன்னிகள் உள்ளவாறு காட்டப்பட்டுள்ளன.

**ரா.ரமேஷ்**, காளையனூர்.

## 62 : 11 வணிகக்குழு கல்வெட்டுகள்

**காரையூர்** : இவ்வூர் தாராபுரம் - மூலனூர் சாலையில் 6 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இவ்வூரின் கீழ்புறமாக உள்ள வயல்வெளியில் 0.80 மீ. அகலமும், 1 மீ. உயரமும் உள்ள பலகைக் கல்லில் 10 ஆம் நூற்றாண்டு வட்டெழுத்து கல்வெட்டும், வணிகக்குழு சின்னங்களும் பொறிக்கப்பட்டுள்ளன. வணிகக்குழு சின்னங்களின் மேல்புறம் 7 வரிகளிலும், கீழ்புறம் 2 வரிகளிலும் கல்வெட்டுகள் வெட்டப்பட்டுள்ளன. அரிவாள், ஈட்டி, கோடாரி, வாள் ஆகிய வணிகக்குழு சின்னங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

**கோட்டமங்கலம்** : பழனியிலிருந்து வடக்கே 5 கி.மீ. தொலைவில் இவ்வூர் அமைந்துள்ளது. இவ்வூருக்குச் செல்லும் பாதையின் ஓரத்தில் பலகைக் கல்லில் கல்வெட்டும், வணிகக்குழு சின்னங்களும் உள்ளன. முன்புறத்தில் கல்வெட்டும், வணிகக்குழு சின்னங்களும், பின்புறமாக கல்வெட்டும் காணப்படுகின்றன. மேல்புறத்தில் குடையும், அதற்குக் கீழ் இருபுறத்தில் சாமரங்களும் உள்ளன. கல்லின் நடுவில் சூலாயுதமும், சூலாயுதத்தின் வலப்புறத்தில் உடுக்கையும், விளக்கும், மழுவும், இடப்புறத்தில் வில்லும், பந்தமும் உள்ளன. இவற்றின் கீழ் புறத்தில் இரு குதிரைகள் உள்ளன.

**வி.ப.யதீஷ்குமார்,** புதுச்சேரி.

## 62 : 12 மகாதேவி மங்கலம்

**சண்டிகேசுவரர்** : திருவண்ணாமலை மாவட்டம் வந்தவாசி வட்டத்தின் மேற்குப் பகுதியில் மகாதேவிமங்கலம் என்றொரு பழைய ஊர் உள்ளது. இவ்வூரின் நடுவில் ஒரு சிவன் கோவில் தரைமட்டமாகி மூன்று கற்சிலைகள் மட்டும் காணப்படுகின்றன. 1. சண்டிகேசுவரர், 2. கணேசர் 3. நந்தி. சண்டிகேசுவரர் கற்சிலை ஒரு கற்பலகையில் புடைப்பாகச் செதுக்கப்பட்டிருக்கிறது. சண்டிகேசுவரர் ஓர் உயரமான பீடத்தில் பெருமிதமாக அமர்ந்திருக்கிறார். தலையில் கூரிய சிறிய சடை முடியும் அதன் இரு மருங்கிலும் பெரிய பெரிய சடைகள் தொங்குகின்றன. முகம் நீள் சதுரமானது. இரண்டு காதுகளிலும் பெரிய பத்ர குண்டலங்கள் தொங்குகின்றன. கழுத்தில் பூணூல் வலது கையின் மீது செல்கிறது. வலது கை நன்கு வனப்பு செய்யப்பட்ட பருமனான மழுவை உயர்த்திப் பிடித்திருக்கிறது. இடது கை மடித்த இடது தொடைமீதுள்ளது. இந்தச் சிலை கி.பி. 10 ஆம் நூற்றாண்டின் முதல் பகுதியாகும்.

**கணேசர்** : இந்தக் கற்சிலையும் மகாதேவிமங்கலத்தில் இருக்கின்றது. கணேசர் சிலையும் கற்பலகையில் வடிக்கப்பட்டது. கணேசர் பத்ர பீடத்தில் இரண்டு கால்களையும் மடித்து அமர்ந்துள்ளார். கணேசரின் தலையை உயரமான கரண்ட மகுடம் அழகு செய்கின்றது. நான்கு கைகளைக் கொண்டுள்ளார். இந்தச் சிலை கி.பி. 10 ஆம் நூற்றாண்டின் முதல் பகுதியைச் சேர்ந்தது.

**ம.காந்தி,** வேலூர்.

## 62 : 13 ஜம்பு கோணாம்பட்டு - தீர்த்தங்கரர் சிற்பம்



திருவண்ணாமலை மாவட்டம், போளூர் வட்டத்தில் செய்யாற்றின் வடகரையில் புகழ் பெற்ற சமண கோயில்களைக் கொண்ட திருமலைக்குக் கிழக்கில் ஜம்பு கோணாம்பட்டு உள்ளது. ஜம்பு கோணாம்பட்டு ஊரின் புறத்தில் தலையற்ற தியானத்தில் எளிய பீடத்தில் அமர்ந்த தீர்த்தங்கரர் கற்சிலை உள்ளது. மூன்று அடி உயரம் கொண்டது. சிலையின் இடது கை கால் பீடம் ஆகியன உடைந்துள்ளன.

ம.காந்தி, வேலூர்.

## 62 : 14 சவரப்பூண்டி பாறைச் சிற்பங்கள்



திருவண்ணாமலை மாவட்டம், போளூர் சேத்துப்பட்டுச்சாலையில் நம்பேட்டிற்குத் தெற்கில் சவரப்பூண்டி அமைந்திருக்கிறது. ஊரின் அரசு மேனிலைப் பள்ளியின் எதிரில் இருக்கின்ற பாறையின் கிழக்குப் பக்கத்தில் இரண்டுப் புடைப்புச் சிற்பங்கள் செதுக்கப்பட்டிருக்கின்றன.

**கணேசர் :** தாமரை பீடத்தில் கணேசர் அமர்ந்திருக்கிறார். தலையில் சிறிய கரண்ட மகுடம் உள்ளது. பின் கைகளில் வலது பக்கத்தில் மழுவையும் இடது பக்கத்தில் பாசத்தையும் முன் வலது கையில் உடைத்த தந்தத்தையும் பிடித்துள்ளார்.

**அனுமன் :** கணேசருக்கு இடது பக்கத்தில் கணேசரை நோக்கி நடப்பது போல செதுக்கப்பட்டிருக்கிறது. ஆனால் அனுமன் சிற்பம் கணேசருடன் தொடர்பற்ற நிலையில் உள்ளது. வலதுகையில் முஷ்டியும் இடது கையை தலைக்குமேல் ஓங்கியும் காட்டப்பட்டுள்ளன. இரண்டு சிற்பங்களும் கி.பி. 15ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவையாகும்.

**ம.காந்தி,** வேலூர்.

**62 : 15 குடிமல்லம் காளி**

ஆந்திர மாநிலம், சித்தூர் மாவட்டம், ரேணிகுண்டா வட்டத்தில் மலைத்தொடரின் கீழ் குடிமல்லம் அமைந்துள்ளது. ரேணிகுண்டாவிலிருந்து குடிமல்லம் செல்லும் பாதையின் வலது பக்கத்தில் ஊருக்கு முன்பு இச்சிலை உள்ளது. நெடிய கரண்ட மகுடத்துடன் அமர்ந்துள்ளது. நான்கு கைகள் உள்ளன. வலது கைகளில் உடுக்கையும் பட்டை வாளும், இடது கைகளில் சூலமும் கபாலமும் காணப்படுகின்றன. இந்தச் சிலை விசயநகர பாணியில் உள்ளது.

**ம.காந்தி,** வேலூர்.

**62 : 16 பல்லவர்காலச் சிற்பங்கள்**

**திருமகள் சிற்பம் :** திருவலம் வேலூர் மாவட்டம். இவ்வூர் செல்லி அம்மன் கோயில் வாயிலில் திருமகள், மூதேவி சிற்பங்கள் உள்ளன. இவை பல்லவர் காலத்தவை. இவற்றில் திருமகள் சிற்பம் தனிச்சிறப்பு வாய்ந்தது. இருகரங்களில் தாமரை மொட்டுக்களை ஏந்தி தாமரை மலர்மீது திருமகள் அமர்ந்துள்ளாள். தலைக்கு மேலே அவளை நீராட்டும் இரு யானைகள் உள்ளன. திருமகளுக்கு இருபுறமிருந்து பக்கத்திற்கு ஒருவராக இரண்டு பெண்கள் சாமரம் வீசுகின்றனர்.

**சங்கநிதி, பதுமநிதி :** மேல்சித்தாமூர், செஞ்சி வட்டம், விழுப்புரம் மாவட்டம் இவ்வூர் மலைநாதர் எனப்படும் சமணத் தீர்த்தங்கரர் கோயில் வாயிலில் குபேரனின் செல்வங்களான சங்கநிதி, பதுமநிதி ஆகியோரது சிற்பங்கள் உள்ளன. பல்லவர் காலத்தினைச் சார்ந்த இச்சிற்பங்களில் சங்கநிதியின் பின்புறம் இரு பக்கங்களில் சங்கும் பதுமநிதியின் பின்புறம் இருபுறமும் மலர்ந்த தாமரையும் காணப்படுகின்றன.



**கொற்றவை** : மாரங்கியூர், திருக்கோயிலூர் வட்டம், விழுப்புரம் மாவட்டம். இவ்வூரில் கற்பலகையில் செய்விக்கப்பட்டு இன்றும் வழிபடப் படும் பல்லவர்காலக் கொற்றவை சிற்பம் உள்ளது. எட்டுக்கரங்களில் ஆயுதங்கள் ஏந்தி நின்றநிலையில் காட்சியளிக்கிறது. வலக்கரம் ஒன்றில் மலரையும் துடைக்கருகிலுள்ள இடக்கரத்தில் கிளியும் உள்ளன. இவளது வாகனமான மான் வலப்புறம் நிற்கிறது. இடப்புறம் சிம்மம் உள்ளது.

**சி.வீரராகவன் - வீ.மங்கையர்க்கரசி,** விழுப்புரம்

**62 : 17 போளூர் வட்டாரத் தொல்லியல்**

திருவண்ணாமலை மாவட்டம், போளூர் வட்டாரத்தில் மேற் கொள்ளப்பட்ட களஆய்வில் பதினெட்டிற்கும் மேற்பட்ட இடங்களில் தொல்லியல் எச்சங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. போளூருக்குக் கிழக்கே 2 கி.மீ. தொலைவில் குன்னத்தூர் என்ற ஊர் அமைந்துள்ளது. இவ்விடத்தில் சுமார் முப்பது ஏக்கர் பரப்பளவில் நூற்றுக்கும் மேற்பட்ட கல்வட்டங்கள், கற்பதுக்கையுடன் கூடிய கல்வட்டங்கள் காணப்படுகின்றன. ஒரு கல்வட்டம் எந்த பாதிப்புமின்றி காணப்படுகிறது. இதன் விட்டம் 23 மீ. ஆகும். மற்றொன்று 108 செ.மீ. விட்டம் கொண்டது. ஒரு கல்வட்டத்தில் கற்பதுக்கையின் மூடுகல் மிகப்பெரிய அளவில் காணப்படுகிறது. குன்னத்தூருக்கு அருகாமையில் அமைந்துள்ள செங்குணம் என்ற இடத்திலும் நூற்றுக்கும் மேற்பட்ட கல்வட்டங்கள், கற்பலகையுடன் கூடிய கல்வட்டங்கள் ஆகியவை காணப்படுகின்றன. குன்னத்தூருக்கு கிழக்கே 2 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள போத்தரை என்னும் இடத்தில் சாலையின் இரு பக்கங்களிலும் கல்வட்டங்கள் நிறைந்து காணப்படுகின்றன. பெரும்பாலானவை சிதைந்த நிலையில் காணப்படுகின்றன. ஒரு கல்வட்டம் 108 செ.மீ. விட்டத்துடன் முழுமையான நிலையில் உள்ளது. போளூருக்கு கிழக்கே சுமார் 10 கி.மீ. தொலைவில் ஜவ்வாது மலை அடிவாரத்தில் தானியார் என்னும் ஊரிலும் கல்வட்டங்கள் சிதைந்த நிலையில் காணப்படுகின்றன. மேலும் ஆத்தூவாம்பாடி, முனிவன்தாங்கல், எத்திவாடி, புதுப்பாளையம் போன்ற ஊர்களிலும் இரும்புகால எச்சங்கள் நிறைந்து காணப்படுகின்றன.

**இ.இனியன்,** சென்னை

# 63. புதிய வெளியீடுகள்

சு.இராசவேல், **தொல்லியல் சுடர்கள்**, சேகர் பதிப்பகம், 66 எம்.ஜி.ஆர் நகர், சென்னை - 600 078. ஜூலை 2007, பக். 216, விலை ரூ.125.

இந்நூல் தொல்லியல்துறையில் பல்லாண்டு அனுபவம் படைத்த களஆய்வில் சிறந்துவிளங்கும் கல்வெட்டாய்வாளரின் பதினொரு கட்டுரைகளின் தொகுப்பு. இந்நூல் அண்மைக்கால அகழாய்வு, கல்வெட்டாய்வு, கோயில்கலை ஆய்வு, பராம்பரிய வரலாற்றுச் சின்னங்கள் குறித்த ஆய்வு ஆகியவற்றை அறிந்து கொள்ள விழைவோர்க்கு மிகுந்த துணைபுரியும். அறிவியல்பூர்வமாக மத்திய தொல்லியல் துறையால் அண்மையில் ஆதிச்சநல்லூரில் செய்யப்பட்ட அகழாய்வு குறித்த பல உண்மைகளை திரட்டித்தந்துள்ளது. ஆதிச்சநல்லூரில் முதுமக்கள் தாழி ஈமச்சின்னங்களின் காலத்தை கி.மு.1000 வரை கொண்டு செல்லலாம் என்கிறது. அசோகன் பிராமிக்கும் தமிழ் பிராமிக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை ஆய்வு செய்து தமிழ்பிராமி என்றழைக்கப்படும் பண்டைத்தமிழ் எழுத்துகள் அசோகன் காலத்திற்கு முற்பட்ட காலத்தினைச் சார்ந்தது எனக் கூறுகிறது. மாமல்லபுரத்தின் அருகிலுள்ள சாளுவன்குப்பம் பகுதியில் சங்க காலத்தில் எடுப்பிக்கப்பட்ட முருகன் கோயில் பல்லவர் காலத்தில் திருத்திக் கட்டப்பட்டு தொடர்ந்து சிறப்புடன் திகழ்ந்துவந்துள்ளது என்பதை இந்நூலில் உள்ள ஒரு கட்டுரை திறம்பட விளக்குகிறது. இதுபோன்ற பல அண்மைகாலத் தொல்லியல் ஆய்வுகள் குறித்த அரிய செய்திகள் அடங்கிய பெட்டகமாக இந்நூல் திகழ்கிறது.

**வெ.வேதாசலம்**, மதுரை.

பா.ஜெயக்குமார், **பாண்டி நாட்டின் ஆனையூர்**, அன்பு வெளீட்டகம், மனை எண் 59, கருப்ஸ் நகர், புதிய பேருந்து நிலையம் அருகில், தஞ்சாவூர் - 613 005, 2008, பக். 188.

தமிழக வரலாற்றில் தமிழ்நாட்டின் தென்பகுதியாக விளங்கிய பாண்டிய நாடு குறித்த ஆய்வுகள் அதிகம் வெளிவரவில்லை என்ற குறைபாடு தொல்லியல் ஆய்வாளர்களிடையே இன்றும் இருந்து வருகிறது. இந்நிலையில் இக்குறையைப் போக்கும் வகையில் இந்நூல் உள்ளது. மதுரை மாவட்டம், உசிலம்பட்டிக்கு அருகிலுள்ள ஆனையூர் வரலாற்றை வரலாற்றிற்கு முற்பட்ட காலந்தொடங்கி அண்மைகாலம் வரை நிரல்பட பல புதிய செய்திகளுடன் இந்நூல் எடுத்துக் கூறுகிறது. ஆனையூர் ஐராவதேசுவரர் கோயிலில் காணப்படும் சோழன் தலைகொண்ட வீரபாண்டியன், முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திர சோழன், சோழ பாண்டியன், பிற்காலப் பாண்டியர் கல்வெட்டுகள் இவ்வூர் பலமன்னர்களை ஈர்த்த பேரூராக விளங்கியது என்பதைக் காட்டுகிறது.

ஆனையூர் கோயிலின் அமைப்பு, சிறப்பு வழிபாடு, நீர்வளம் ஆகியவை குறித்தும் ஊரின் பழங்காலச் சமுதாயம், பொருளாதாரம் பற்றியும் இந்நூல் விரிவாக ஆய்வு செய்கிறது. இந்நூலின் பின்இணைப்பில் உள்ள இதுவரை வெளியிடப்பெறாத ஆனையூர் கல்வெட்டுகளின் மூலபாடங்கள் இப்பகுதி குறித்து ஆய்வு செய்வோர்க்கு மிகுந்த துணைபுரியும். மேலும் இப்பகுதியில் இந்நூலுக்கு அணிசேர்க்கும் பட்டியல்கள், வரைபடங்கள் இணைக்கப்பட்டுள்ளன. பாண்டிய நாட்டு ஊராய்வு குறித்த நூல் வரிசைக்கு அணி சேர்க்கும் ஓர் அரிய முயற்சி இந்நூல் எனலாம்.

**கு.சேதுராமன்**, மதுரை.

வெ.கேசவராஜ், **தென்னிந்திய நடுகற்கள்**, காவ்யா, டிரஸ்ட் புரம் கோடம்பாக்கம், சென்னை - 600 024, மே 2008, பக். 544, விலை ரூ. 300/-.

தமிழ்நாட்டு நடுகற்கள் குறித்து ஆழமான ஆய்வும் அவற்றைப் பிறமாநிலங்களோடு ஒப்பீட்டு செய்த ஒப்பீட்டாய்வும் கொண்ட அமரர் முனைவர் வெ.கேசவராஜ் அவர்களின் முனைவர் பட்ட ஆய்வேடு இது. தென்னிந்தியா முழுமையும் நடுகற்கள் குறித்த தரவுகளைத் திரட்டித் தந்துள்ளது. நினைவுக் கற்களும் வீரக்கற்களும், தென்னிந்திய இலக்கண இலக்கியங்கள் காட்டும் வீரக்கல் மரபு, வீரக்கல் குறித்த பொதுச் செய்திகள் (சூழல், அமைப்பு, மொழி, இடம் முதலியன) வீரக்கற் சாசனங்களின் அமைப்பு, வீரக்கற் சிற்பங்கள், வீரவழிபாடு, என்ற பல இயல்களைக் கொண்டுள்ளது. இந்நூலின் பின்னிணைப்பில் நினைவுச் சின்னங்கள், சிறப்புப்பெயர் அகராதி, வீரகற்களின் அட்டவணைகள், புகைப்படங்கள் என்று ஆய்வாளர்களுக்குப் பயன்படும் தரவுகள் சேர்க்கப்பட்டுள்ளன. நடுகற்கள் குறித்த இலக்கிய இலக்கண மரபுகளை மட்டும் ஆய்வு செய்யாமல் சங்ககாலத்திற்குப் பின்னர் எடுக்கப்பட்ட நடுகற்களோடு அவற்றை ஒப்பிட்டு ஆய்வு செய்கிறது இந்நூல். இந்நூலாசிரியர் தமது முடிவுரையில் தந்த சில கருத்துக்களை அண்மைக்காலத்தில் தென்தமிழ் நாட்டில் மதுரைப் பகுதியில் கண்டறியப்பட்ட சங்ககால நடுகற்கள் மாற்றும் வகையில் அமைந்துள்ளன. நடுகல் மரபு, வடதமிழ்நாட்டில் தோன்றி பிற பகுதிகளுக்குப் பரவியிருக்க வேண்டும் என்று கருதும் இந்நூலாசிரியர் புதிய சான்றுகள் கிடைக்கும் பொழுது இம்முடிவில் மாற்றம் ஏற்பட இடமுண்டு என்று கூறியுள்ளது நூலாசிரியரின் காலத்தைக் கடந்த எதிர்கால ஆய்வுநோக்கு நேர்மையைக் காட்டுகிறது. நடுகற்கள் குறித்த அனைத்து தரவுகளையும் ஆய்வு செய்து வெளியிடப்பட்ட சிறந்த நூற்களில் ஒன்றாக இதனைக் கருதலாம். இதன் பதிப்பும் கட்டமைப்பும் தலைசிறந்த தரம் கொண்டதாய் தமிழ்நூல் பதிப்புக்குப் பெருமை சேர்க்கிறது என்பதைக் குறிப்பிடாமல் இருக்க முடியாது.

**வெ.வேதாசலம்**, மதுரை.

சிவ.விவேகானந்தன், **நாகராஜகோவில்**, காவ்யா, 16, இரண்டாம் குறுக்குத்தெரு, டிரஸ்ட் புரம், கோடம்பாக்கம், சென்னை - 600 024, பக். 293, விலை ரூ.150/-.

அண்மைகாலம் வரை சமணக் கோயிலாக இருந்து இன்று சைவ, வைணவக் கோயிலாக தொன்மையான நாகவழிப்பாட்டைத் தாங்கிநிற்கும் நாகராஜாகோயில் பற்றிய விரிவான ஆய்வு நூல். இக்கோயிலின் தொன்மை வரலாற்றோடு இன்றைய கோயிலின், கட்டடக்கலை, சிற்பக் கலை, வழிபாடு, திருவிழாக்கள், கல்வெட்டுகள் முதலியன குறித்து நுணுகி ஆய்வு செய்த நூல் இதுவாகும். இவற்றோடு கன்னியாகுமரி மாவட்ட சமணத் தடயங்கள், கோயில்கள் குறித்தும் இந்நூலின் இறுதியில் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. இந்நூலிற்கு அணி செய்யும் வகையில் ஏராளமான ஒளிப்படங்களும் வரைபடங்களும் இந்நூலுள் ஆங்காங்கே சேர்க்கப்பட்டுள்ளன. கல்வெட்டு ஆவணங்களின் முழுமையான வாசகங்களும் இதில் இணைக்கப்பட்டுள்ளன. குமரிமாவட்டத்தில் சமணசமயம் சிறந்து விளங்கிய வரலாறும் அது விட்டுச் சென்ற எச்சங்களையும் நூலாசிரியர் தனது களஆய்வின் மூலம் வெளிப்படுத்தி யுள்ளார். மேலும் குமரிமாவட்ட வைதீகம் மற்றும் நாட்டுப்புற சமயமரபுகளை அறிந்து கொள்ள இது துணைபுரியும். இடைக்காலப் பாண்டிய நாட்டில் தலைசிறந்து விளங்கிய வெண்புநாட்டுக் குறண்டி கன்னியாகுமரி மாவட்டக் குறண்டி தொடர்பான இவரது ஆய்வு சிந்திக்கத்தக்கது. இந்நூல் நன்கு வடிவமைக்கப்பட்டு பதிப்புலகம் போற்றும் முறையில் உருவாக்கப் ,பட்டுள்ளது.

**வெ.வேதாசலம், மதுரை.**

# 64. தமிழகத் தொல்லியல் கழக 17 ஆம் ஆண்டுக் கருத்தரங்கு அறிக்கை

பா. ஜெயக்குமார், செயலர்.

தமிழகத் தொல்லியல் கழகத்தின் 17 ஆம் ஆண்டின் மாநாட்டுக் கருத்தரங்கம் மற்றும் ஆவணம் இதழ் 18 இன் வெளியீட்டு விழா 2007 ஜூலை 21, 22 (சனி, ஞாயிறு) ஆகிய இரு நாட்கள் கோயம்புத்தூர் பூ.சா.கோ. கலை மற்றும் அறிவியல் கல்லூரியில் சங்கமம் அறையில் நடைபெற்றது.

கருத்தரங்க துவக்க விழா 21.07.07 அன்று காலை 10.10 மணிக்கு மேற்சுட்டிய கல்லூரியின் தமிழ்த்துறை மாணவர்களின் இறை வணக்கத்துடன் தொடங்கி நண்பகல் 1.00 மணிவரை நடைபெற்றது. இத்துவக்க விழா தமிழ்நாடு அரசு தொல்பொருள் துறையின் மேனாள் இயக்குநர் முனைவர் இரா.நாகசாமி அவர்களுக்கான பாராட்டு விழாவாகவும் அமைந்தமை சிறப்பானதாகும்.

வரவேற்புரை நல்கிய கழகச் செயலர் வருகை புரிந்த அனைவரையும் கழகத்தின் சார்பில் வரவேற்றதோடு தமிழகத் தொல்லியல் கழகம் தொய்வின்றி நடந்து வருவதையும் அதன் சிறப்புக்களையும் எடுத்துரைத்ததோடு முனைவர் இரா.நாகசாமி அவர்களின் பாராட்டு விழாவுக்கான முக்கியத்துவத்தையும் விளக்கினார். தொடர்ந்து சிறப்பு விருந்தினர்களுக்குப் பொன்னாடை அணிவிக்கப்பட்டது.

விழாவிற்குத் தலைமை தாங்கிய பூ.சா.கோ.கலை மற்றும் அறிவியல் கல்லூரியின் செயலர் முனைவர் பா.சம்பத்குமார் அவர்கள் தமிழகத் தொல்லியல் கழகம் தமிழ்ச் சமுதாயத்திற்கு எத்தகைய ஒரு சிறந்த பங்களிப்பினைச் செய்து வருகிறது என்பதையும் தொல்லியல் ஒவ்வொரு கல்லூரியிலும் பாடமாக வைக்கப்பெற வேண்டும் என்பதையும் இப்பாடத்தைக் குறிப்பாக தமிழ் இலக்கிய மாணவர்களுக்கும் கற்பிக்க வேண்டும் என்ற தனது கருத்தையும் தெளிவுபட எடுத்து வைத்தார்.

கழகத் தலைவரின் தொடக்க உரையைத் தொடர்ந்து ஜப்பான் நாட்டின் தைசோ பல்கலைக்கழகத்தின் சிறப்புநிலை பேராசிரியரும் தென் இந்திய வரலாற்று ஆசிரியர்களில் குறிப்பிடத்தக்கவருமான முனைவர் நொபொரு கராஷிமா அவர்களின் சிறப்புரையில் தென் இந்திய வரலாற்றாய்விற்கு தமிழகத் தொல்லியல் கழகத்தின் வெளியீடான ஆவணம் சிறந்த வரலாற்றுக் கருவூலமாகத் திகழ்கிறது என்பதை மையப்படுத்திப் பேசினார்.

ஆவணம் இதழ் 18ஐ திரு.ஐராவதம் மகாதேவன், இ.ஆ.ப. (ஓய்வு) அவர்கள் வெளியிட தமிழகத் தொல்லியல் கழகத்தின் முன்னாள் தலைவரும் ஈரோடு கொங்கு ஆய்வு மையத்தின் நிறுவனத் தலைவருமான பேராசிரியர் முனைவர் செ.இராசு அவர்கள் முதல் இதழைப் பெற்றுக் கொண்டார். இதனைத் தொடர்ந்து முனைவர் இரா.நாகசாமி அவர்கள் தமிழகத்

தொல்லியலுக்கு ஆற்றிய வாழ்நாள் சாதனைகளைப் பாராட்டும் வண்ணம் தமிழகத் தொல்லியல் கழகத்தின் சார்பாக பேராசிரியர் செ.இராசு அவர்கள் வாசித்தளிக்க டாக்டர் இரா.நாகசாமி அவர்களுக்கு "செப்புப் பட்டயம்" வழங்கி சிறப்புச் செய்தனர்.

தொடர்ந்து திரு.ஐராவதம் மகாதேவன் அவர்களும் பேராசிரியர் செ.இராசு அவர்களும் தங்களது உரைகளில் ஆவணம் இதழின் சிறப்புக்களையும் முனைவர் இரா.நாகசாமி அவர்களின் சிறப்புக்களையும் பேராளர்களிடம் பகிர்ந்து கொண்டனர். திரு. பெ.வெங்கடேசன் (இயக்குநர், இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறை, கல்வெட்டுப் பிரிவு, மைசூர்), முனைவர் வெ.இரா.சத்தியமூர்த்தி (தலைவர், தமிழ்த்துறை, பூ.சா.கோ.கலை மற்றும் அறிவியல் கல்லூரி), வள்ளல் திரு. ஒ.ஆறுமுகசாமி (பொதுப்பணிச் சங்கத் தலைவர்) ஆகியோரும் வாழ்த்துரை வழங்கினர்.

இம்மாநாட்டுக் கருத்தரங்கின் உள்ளூர்ச் செயலர் முனைவர் ச.இரவி (தமிழ்த்துறை, பூ.சா.கோ. கலை மற்றும் அறிவியல் கல்லூரி, கோவை) அவர்கள் நல்கிய நன்றியுரையுடன் தொடக்கவிழா இனிதே நிறைவுற்றது.

நண்பகல் 2.30 முதல் அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் நடைபெற்றன. இந்த அமர்விற்கு திரு. அழ.முத்துப்பழனியப்பன், எம்.ஏ., பி.எல். (உதவி ஆணையர், இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை, கோவை) அவர்கள் தலைமை ஏற்று சொற்பொழிவாளர்களை வாழ்த்தி அவர்களது சிறப்புக்களை எடுத்தியம்பியதுடன் ஆவணம் இதழ் எந்தளவிற்குச் சிறப்பாக மக்களைச் சென்றடைகிறது என்பதையும் தமிழகத் தொல்லியல் கழகத்தின் சீரிய பணியின்பால் மகிழ்ச்சி கொண்டு அதன் செயல்பாடுகளுக்கு தனது நன்றியினையும் தெரிவித்துக் கொண்டார். இவ்அமர்வில் தி.நா.சுப்பிரமணியன் அறக்கட்டளைச் சொற்பொழிவு வரிசையில் 9ஆவது சொற்பொழிவை பேராசிரியர் முனைவர். எ.சுப்பராயலு (ஒருங்கிணைப்பாளர், தென்னிந்திய வரலாற்று நிலப்படத் திட்டம், பிரெஞ்சு ஆய்வு நிறுவனம், புதுச்சேரி) அவர்கள் "மண்கல தமிழ்பிராமி எழுத்துப் பொறிப்புகள்" என்ற தலைப்பிலும், கோவிலூர் ஆதீன அறக்கட்டளைச் சொற்பொழிவு வரிசையில் 6ஆவது பொழிவை முனைவர் ஜெ.ராஜாமுகமது (உதவி இயக்குநர் (ஓய்வு), தமிழக அரசு அருங்காட்சியகங்கள், சென்னை) அவர்கள் "புதுக்கோட்டைப் பகுதி குடைவரைகள்" என்ற தலைப்பிலும் நிகழ்த்தினார்கள். இரு பொழிவுகளும் பேராளர்களை மிகவும் கவர்ந்தன.

பிற்பகல் 4.30 முதல் மாணவர்கள் மற்றும் இளம் ஆய்வாளர்களுக்கான போட்டி அமர்வு நடைபெற்றது. இவ் அமர்விற்கு பேராசிரியர் முனைவர் கு.சேதுராமன் மற்றும் முனைவர் வெ.வேதாசலம் ஆகியோர் நடுவர்களாக செயல்பட்டனர். இப்போட்டியில் பங்கேற்ற மாணவர்கள்/ஆய்வாளர்கள் அளித்த கட்டுரைகள் பின்வருமாறு :

| வ.எண் | கட்டுரையாளர் | தலைப்பு |
|---|---|---|
| 1. | சா.வெற்றிசெல்வி | திருவானைக்கோயில் தொல்லியல் ஆதாரங்கள் |
| 2. | மு.பிரபாகரன் | லாடபுரத்தில் தொல்லியல் சின்னங்கள் |
| 3. | வெ.யோகேஸ்வரன் | புதுக்கோட்டை மற்றும் கொடைக்கானல் பகுதிகளில் புதிய தொல்லியல் கண்டுபிடிப்புகள் |
| 4. | அ.செந்தில்குமார் | நடுகல் |
| 5. | ப.கணேசமூர்த்தி | சேலூர் அக்கசாலீசுவரமுடையார் கோவிலின் வரலாற்றுச் சிறப்பு |
| 6. | த.சுதாகர் | திட்டக்குடி வட்டாரத் தொல்லியல் |
| 7. | செ.கௌரிசங்கர் | மணப்பாறை வட்டாரத்தில் புதிய தொல்லியல் கண்டுபிடிப்புகள் |
| 8. | எம்.எஸ்.ராம்ஜி | தமிழகத் தொல்பழங்கால புதிய தடயங்கள் |

**பரிசுக்குத் தேர்வு செய்யப்பட்டவர்கள் விவரம் வருமாறு :**

1. **தமிழகத் தொல்லியல் கழகத்தின் பரிசு ரூ.1000/-**

ப.கணேசமூர்த்தி

2. **பேரா. ம. இராசசேகரதங்கமணி அவர்களின் பரிசு ரூ.1000/-** (பெண்களுக்கு மட்டும்)

சா.வெற்றிசெல்வி

2. **பேரா. முனைவர் இராசு.பவுன்துரை அவர்களின் பரிசு ரூ.1000/-** (இருவருக்குச் சமமாகப் பிரித்தளிக்கப்பட்டது).

மு.பிரபாகரன்
எம்.எஸ்.ராம்ஜி

3. **விழுப்புரம் திரு.சி.வீரராகவன் அவர்களின் ப.சின்னக்கண்ணு நினைவுப் பரிசு ரூ.1000/-**

செ.கௌரிசங்கர்

இரவு 7.30 மணி முதல் 8.45 வரை செயற்குழுக் கூட்டம் நடைபெற்றது.

22.07.07 அன்று காலை 9.15 மணி முதல் நண்பகல் 2.30 மணி வரை கருத்தரங்க அமர்வுகள் நடைபெற்றன.

## முதல் அமர்வு

தலைவர் : **திரு. வெ.வெங்கடேசன்**
(இயக்குநர், இந்தியத் தொல்லியல் அளவீட்டுத்துறை,
கல்வெட்டுப் பிரிவு, மைசூர்)

| | **கட்டுரையாளர்** | **கட்டுரைத் தலைப்பு** |
|---|---|---|
| 1. | P.J.Cherian | - Archaeological Excavations at Pattinam, Kerala, 2007. |
| 2. | Sanal Kumar | - Archaeological Discoveries of Kollangodu Area, Palakadu District, Kerala. |

## இரண்டாம் அமர்வு

தலைவர் : **முனைவர் இல.தியாகராஜன்**
(தலைவர், வரலாற்றுத்துறை, அரசு கலைக் கல்லூரி, அரியலூர்)

| | **கட்டுரையாளர்** | **கட்டுரைத் தலைப்பு** |
|---|---|---|
| 3. | க.கருப்பையா | - வீரசோழபுரம் கல்வெட்டுக்களில் அறியப் படும் நீட்டல் அளவுகோல் |
| 4. | கோ.திருமூர்த்தி | - கோயில்களில் இரகசிய அறைகள் |
| 5. | முத்துசாமி | - மடப்புறம் - ஓர் ஆய்வு |
| 6. | கூ.பிச்சைப்பிள்ளை | - முகாசா பரூர் ஜமீன் - ஓர் வரலாற்று ஆய்வு |
| 7. | செ.சௌந்திரராஜன் | - பனப்பாக்கத்தில் கிடைக்கப்பெற்ற விஜயநகர காலத்துக் கல்வெட்டு |
| 8. | செ.கோவிந்தராஜ் | - புதுக்கோட்டை மாவட்டத்தில் கற்றளிச் சுவடுகள் |
| 9. | சு.கண்ணன் | - அத்தாளநல்லூர் முற்காலப் பாண்டியர் துவாரபால ஆயுத புருஷர்கள் சிற்பங்கள் |
| 10. | செந்தீ நடராஜன் | - சுசீந்திரம் கல்வெட்டுகள் (ஒன்று புதியது, ஒன்று திருத்திய வாசிப்பு) |
| 11. | க.பன்னீர்செல்வம் | - பேரூர் நாட்டில் வரலாற்றுப் பெயராய்வு |
| 12. | புதிய நடுகல் கல்வெட்டுக்கள் | - வி.பி.யதீஸ்குமார் |
| 13. | இரா.ரமேஷ் | - பூனாத்து தொல்லியல் கண்டுபிடிப்புகள் |
| 14. | ந.வேங்கடேசன் | - கோவை மாவட்ட அளவுகள் |
| 15. | பாலசுப்பிரமணியன் | - ஒரிசா : கலிங்க - தமிழகத் தொடர்புகள் |

## மூன்றாம் அமர்வு

**தலைவர் : முனைவர் ரா.பூங்குன்றன்**
(மேனாள் உதவி இயக்குநர், தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை)

| | கட்டுரையாளர் | கட்டுரைத் தலைப்பு |
|---|---|---|
| 16. | ஆர்.பாலசந்திரன் | - விருதுநகர் வட்டாரத் தொல்லியல் செய்திகள் |
| 17. | A.Banumathi | - Jain Beds in Namakkal District |
| 18. | பா.சாம் சத்தியராஜ் | - மதுரை மாவட்டம் கரையிப்பட்டி கிராமம் சிவன்கோயில் சிற்பங்கள் மற்றும் கல்வெட்டுகள் |
| 19. | பாண்டுரங்கன் | - துறையூர் அருகே 9ஆம் நூற்றாண்டு நடுகல் கண்டுபிடிப்பு |
| 20. | சி.வீரராகவன் | - அண்மைக்காலக் கண்டுபிடிப்புகள் |

மாலை 3.00 மணி முதல் 4.00 மணி வரை நடைபெற்ற பொதுக்குழு கூட்டத்துடன் 18வது மாநாட்டுக் கருத்தரங்கின் இரண்டு நாள் விழா நிறைவுற்றது.

## இரங்கல்

**காப்பாட்சியர் சாம்சத்தியராஜ்**

தோற்றம் : 16.04.1960

மறைவு : 04.06.2008

மதுரை அரசு அருங்காட்சியகத்தின் துடிப்புமிக்க காப்பாட்சியராய் செயல்பட்டு வந்தவர் சாம் சத்தியராஜ். அருங்காட்சியக அமைப்புப் பணியோடு பல பயிற்சிப் பட்டறைகள், கருத்தரங்குகள் நடத்தி மதுரை அரசு அருங்காட்சியகத்தினைச் சிறப்புற நடத்தி வந்த திறமைமிக்க காப்பாட்சியர். பல அரிய கண்டுபிடிப்புகளைச் செய்தவர். அருங்காட்சியகத்திற்கென ஏராளமான அரும்பொருட்களைச் சேகரித்துக் காட்சிக்கூடத்தினை அலங்கரித்து வந்தவர். எப்போதும் சிரித்த முகத்துடன் துடிப்புடன் சோர்வின்றி செயல்பட்டு வந்தவர். ஆவணம் வாழ்நாள் உறுப்பினரான இவர் ஆவணத்தில் பல கட்டுரைகள் தொடர்ந்து எழுதி வந்தவர். ஒவ்வொரு ஆவணக் கருத்தரங்கின்போதும் புதிய தொல்லியல் கண்டுபிடிப்புகளை வெளிக்கொண்டு வந்து கட்டுரை வாசிப்பது இவரது வழக்கம். அருங்காட்சியகப் பணியை முடித்து மாலை வீடு திரும்பும் வேளையில் எதிர்பாராது அவரது இன்னுயிர் பிரிந்தது. இவரது மறைவு மதுரை அரசு அருங்காட்சியகத்திற்கும், தமிழக வரலாற்றிற்கும் ஈடுசெய்ய முடியாத இழப்பு. அவரைப் பிரிந்து மீளாத் துயரில் வாடும் அவரது குடும்பத்திற்குத் தமிழகத் தொல்லியல் கழகம் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறது.

# கட்டுரையாளர்கள்

ஆறுமுகசீதாராமன்
12, ராஜாராஜன் நகர்
மானோஜிப்பட்டி (தெற்கு), தஞ்சை.

இராசகோபால் சு.
இராஜாஜி இல்லம்
4அ, முதல் தெரு, அடையாறு
சென்னை – 20.

இராசன், கா.
வரலாற்றுத்துறைத் தலைவர்
மத்திய பல்கலைக்கழகம், புதுச்சேரி.

இராசவேல், சு.
துணைக் கல்வெட்டுக்
கண்காணிப்பாளர் அலுவலகம்
மத்திய தொல்லியல் துறை, சென்னை.

இராசேந்திரன், கரு.
மேலப்பனையூர் (அஞ்சல்)
புதுக்கோட்டை மாவட்டம்.

இரவிச்சந்திரன், பெ.
கௌரவ விரிவுரையாளர்
அரசு கலைக்கல்லூரி
வரலாற்றுத்துறை, அரியலூர்.

கண்ணன், சு.
விரிவுரையாளர் வரலாற்றுத்துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

கணேசன், நாக.
காப்பாட்சியர்
தமிழகத் தொல்லியல் துறை
கரூர் அருங்காட்சியகம், கரூர்.

கலைவாணன், மா.
காப்பாட்சியர்
தமிழகத் தொல்லியல் துறை
அருங்காட்சியகம், ஆற்காடு.

காயத்திரி தேவி, எம்.
விரிவுரையாளர்
அரசு மகளிர் கலைக்கல்லூரி
புதுக்கோட்டை.

குமார், கி.
இ.103, பொதுப்பணித்துறை
குடியிருப்பு, சைதாப்பேட்டை
சென்னை.

கோபாலகிருஷ்ணன், மா.ஒர்.சே.
பிரான்ஸ்.

கோபாலன், தே.
தொல்லியல் அலுவலர்
தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை
மதுரை.

கோவிந்தராஜ், செ.
காப்பாட்சியர், அரசு அருங்காட்சியகம்
புதுக்கோட்டை.

சுப்பராயலு, எ.
பிரெஞ்சு இந்திய நிறுவனம்
11, செயிண்ட் லூயிஸ் தெரு
புதுச்சேரி.

செந்தில்குமார், தெ.
விரிவுரையாளர், வரலாற்றுத்துறை
அரசு கலைக்கல்லூரி, அரியலூர்.

செந்தீ நடராஜன்
122, கல்படித் தெரு
நாகராஜா கோயில் அருகில்
நாகர்கோவில்.

செல்வக்குமார், சி.
பிரெஞ்சு இந்திய நிறுவனம், புதுச்சேரி.

செல்வக்குமார், வீ.
விரிவுரையாளர்
கல்வெட்டியல் தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சை.

செல்வகணபதி, எம்.என்.
இராசிபுரம்.

செவ்வேள், வே.
ஆய்வாளர், வரலாற்றுத்துறை
அரசு கலைக்கல்லூரி,
அரியலூர்.

சேதுராமன், கு.
கலை வரலாற்றுத்துறைத் தலைவர்
மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம்.

தவசிமுத்து, த.த.
ஆறுமுகநேரி.

தியாகராசன், இல.
வரலாற்றுத்துறைத் தலைவர்
அரசுக் கலைக்கல்லூரி, அரியலூர்.

துளசேந்திரன், ஆ.
விரிவுரையாளர்
கல்வெட்டியல் – தொல்லியல் துறை
தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சை.

திருநங்கை, வே.
ஆய்வாளர், கலை வரலாற்றுத்துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.

பன்னீர்செல்வம், க.
கல்வெட்டாய்வாளர்
மத்திய அரசு கல்வெட்டுத்துறை
மைசூர்–5.

பழனியப்பன், அ.
சம்பை, ஈரோடு மாவட்டம்.

பவானி, மா.
விரிவுரையாளர்
கல்வெட்டியல் – தொல்லியல் துறை
தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சை.

பவுன்துரை, இராசு.
கட்டடக்கலைத்துறை
தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சை.

பூபாலன், ப., நவல்பூர்.

பிரசன்னா, மோ.
வரலாற்றுத்துறை
மத்தியப்பல்கலைக்கழகம், புதுச்சேரி.

வேங்கடேசன், ந.
11, கிழக்கு சந்நிதி வீதி, வில்லியனூர்.

வெங்கடேசன், ப.
3.178, கம்பன் தெரு
பெல்லியப்பா நகர், வாலாஜா பேட்டை.

முத்துக்குமார், வீ.
பிரெஞ்சு இந்திய நிறுவனம், புதுச்சேரி.

விசயவேணுகோபால், கோ.
பிரெஞ்சு இந்திய நிறுவனம், புதுச்சேரி.

வேதாசலம், வெ.
51/12E, இரத்தினசாமி நாடார் ரோடு
பி.பி.குளம், மதுரை – 2.

யதீஸ்குமார், வி.ப.
ஆய்வாளர், வரலாற்றுத்துறை
மத்தியப்பல்கலைக்கழகம், புதுச்சேரி.

ரமேஷ், த.
முண்டியம்பாக்கம், விழுப்புரம் மாவ.

ரமேஷ், ரா.
வரலாற்றுத்துறை
மத்தியப்பல்கலைக்கழகம், புதுச்சேரி.

ராஜாமுகமது, ஜெ.
1:107டி, ஜீவாநகர் முதல் தெரு
புதுக்கோட்டை.

ஸ்ரீதரன், கி.
324, முதல் தெரு, நடேச நகர்
விருகம்பாக்கம், சென்னை – 92.

செரியன், பி.ஜே.
ஷாஜன், கே.பி.
கேரள மாநிலம்.

# TAMIL NADU ARCHAEOLOGICAL SOCIETY, THANJAVUR

## RECEIPTS AND PAYMENTS ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2007

| | | | |
|---|---|---|---|
| Opening Balance : | | Printing | 32,330.00 |
| Cash in hand | 173.80 | Xerox & Stationary | 3,853.50 |
| Cash at Bank | | Auditor Fees | 1,000.00 |
| Indian Bank, | 6,230.00 | | |
| SBI, TNJ | 20,872.12 | Salary | 2,500.00 |
| Sale of Books | 16,580.20 | Honorarium | 6,000.00 |
| Membership Fees | 23,500.00 | Postage & Courier | 3,143.00 |
| Interest | 20,532.00 | Freight Charges | 699.00 |
| Donation | 14,000.00 | Bank Charges | 358.00 |
| ICHR Grand (For Vol.17) | 25,000.00 | Travelling Expenses | 1,989.00 |
| Fixed Deposit | 2,15,000.00 | Steel Cup-Board | 7,700.00 |
| | | Gift & Compliments | 8,850.00 |
| | | Tea & Coffee | 50.00 |
| | | Fixed Deposit | 1,90,000.00 |
| | | Creditors | 32,000.00 |
| | | **Closing Balance** | |
| | | SBI, Thanjavur | 11,355.12 |
| | | Indian Bank, TNJ | 10,755.00 |
| | | Cash in Hand | 29,305.50 |
| | **3,41,888.12** | | **3,41,888.12** |

(Sd.) V.Ramasamy
Chartered Account
951, East Main St., Thanjavur - 1

# TAMIL NADU ARCHAEOLOGICAL SOCIETY, THANJAVUR

## INCOME AND EXPENDITURE ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2007

| | | | |
|---|---|---|---|
| To Printing Charges | 32,330.00 | By Sales of Books | 16,580.20 |
| To Xerox & Stationary | 3,853.50 | By Membership Fees | 23,500.00 |
| To Auditor Fees | 1,000.00 | By Interest | 20,532.00 |
| To Salary | 2,500.00 | By Donation | 14,000.00 |
| To Honorarium | 6,000.00 | By ICHR Grant | 25,000.00 |
| To Postage & Courier | 3,143.00 | | |
| To Freight Charges | 699.00 | | |
| To Bank Charges | 358.00 | | |
| To Travelling Expenses | 1,989.00 | | |
| To Gift & Compliments | 8,850.00 | | |
| To Tea & Coffee | 50.00 | | |
| To Excess of Income Over Expenditure | 38,839.70 | | |
| | **99,612.20** | | **99,612.20** |

## BALANCE SHEET AS ON 31.03.2007

| LIABILITIES | | ASSETS | |
|---|---|---|---|
| FUND ACCOUNT :<br>Opening Balance | 2,61,275.92 | Fixed Deposit | 2,30,000.00 |
| Add<br>Excess of Income over Expenditure | 38,839.70 | Furniture<br>Steel Cup-Board | 11,000.00<br>7,700.00 |
| | **3,00,115.62** | Cash at Bank :<br>SBI, TNJ<br>Indian Bank, TNJ | <br>11,355.12<br>10,755.00 |
| | | Cash in hand | 29,305.00 |
| | **3,00,115.62** | | **3,00,115.62** |

(Sd.) V.Ramasamy
Chartered Account
951, East Main St., Thanjavur - 1

# AVANAM

## Annual issue of the Tamilnadu Archaeological Society

Avanam aims at bringing to lime light all kinds of primary sources, which unravel the history of Tamilnadu. It carries reports on the hitherto unpublished epigraphs, copper plate records, palm leaf manuscripts, paper documents, archaeological artifacts, coins, art objects and articles. It is a treasure house of original resources to be adorned in the library of each and every one, who is interested in the history of Tamilnadu.

| | |
|---|---|
| **Avanam** 1 – 4, 13 | not available |
| **Avanam** 5 – 12, 14 | Rs. 100/- (per copy) |
| **Avanam** 15 – 19 | Rs. 150/- (per copy) |

Those who wish to buy the back volumes of the **Avanam** may send a D.D. or Cheque for Rs.100/- (per copy), drawn in favour of the **Tamilnadu Archaeological Society**, to the Treasurer, C/o Department of Epigraphy and Archaeology, Tamil University, Thanjavur - 613 005. Cheques should be sent with an additional amount of Rs.100/- to meet the Bank commission.

Those who wish to become life members may send Rs.1000/- to the Treasurer.

Those who want to get their newly published books reviewed in the **Avanam** should send three copies of the book to be reviewed, along with a sum of Rs.50/- for postal expenditure, to the Secretary.

Noburu Karashima, **Varalarruppokkil Thennagacchamugam,** Rs.100/-
Kaveri Rs. 450/-
Ancient and Medievel Commercial Activities in the Indian Ocean Testimonly of Inscriptions and Ceramic - Sherds, Rs.300/-

<u>Address to be contacted</u>

Secretary / Treasurer
Tamil Nadu Archaeological Society,
C/o. Department of Epigraphy and Archaeology,
Tamil University, Thanjavur - 613 005.

# ஆவணம்

## தமிழகத் தொல்லியல் கழகத்தின் ஆண்டு இதழ்

**ஆவணம்** தமிழக வரலாற்றை வளப்படுத்தும் எல்லா அடிப்படைச் சான்றுகளையும் வெளியிடும் நோக்கம் கொண்டது. இதுவரை வெளியிடப்படாத கல்வெட்டுகள், செப்பேடுகள், ஓலைச்சுவடிகள், காகித ஆவணங்கள், தொல்பொருள்கள், காசுகள், கலைப்பொருள்கள் ஆகியவற்றைப் பற்றிய செய்திகளையும், கட்டுரைகளையும், ஏந்தி வருகிறது. இது தமிழக வரலாற்றில் ஈடுபாடுடைய அனைவரின் நூலகங்களிலும் இடம் பெற வேண்டிய இன்றியமையாத வரலாற்றுக் கருவூலம்.

| | |
|---|---|
| ஆவணம் 1 - 4, 13 | இருப்பு இல்லை |
| ஆவணம் 5 - 12, 14 | ரூ.100/- (இதழ் ஒன்றுக்கு) |
| ஆவணம் 15 - 19 | ரூ.150/- (இதழ் ஒன்றுக்கு) |

| | |
|---|---|
| நொபொரு கராஷிமா, ***வரலாற்றுப்போக்கில் தென்னகச் சமூகம்*** | - ரூ.100/- |
| காவேரி, (Kaveri) | - ரூ.450/- |
| Ancient and Medievel Commercial Activities in the Indian Ocean Testimonly of Inscriptions and Ceramic - Sherds (நொபொரு கராஷிமா) | - ரூ.300/- |

தமிழகத் தொல்லியல் கழக இதழ்களைப் பெறவிழைவோர், சரியான தொகையை வரைவோலை, காசோலை அல்லது பணவிடை மூலம் பொருளாளர் முகவரிக்கு அனுப்ப வேண்டும்.

கழகத்தின் வாழ்நாள் உறுப்பினர் கட்டணம் ரூ.1000/-

நிறுவனங்களுக்கு உறுப்பினர் கட்டணம் ரூ.2000/-

புதிய வெளியீடுகள் பகுதியில் நூல்களைச் சேர்க்க விரும்புவோர் ஒவ்வொரு நூலுக்கும் மூன்று படிகளையும், அஞ்சல் செலவுக்கு ரூ.50/-ம் செயலாளருக்கு அனுப்பி வைக்க வேண்டும்.

வரைவோலை, காசோலை, பணவிடைகள் தமிழகத் தொல்லியல் கழகம் என்ற பெயரில் இருத்தல் வேண்டும். காசோலையாக இருந்தால் கூடவே வங்கிப் பிடித்தம் ரூ.100/-ஐச் சேர்த்து அனுப்ப வேண்டும். ஆவணம் இதழ் நேரில் பெற்றுக் கொள்ளலாம். அல்லது அஞ்சலில் பெற ரூ.50/- மணியார்டர் அனுப்பவும்.

**முகவரி**
செயலர்/பொருளாளர்
தமிழகத் தொல்லியல் கழகம்
(மே/பா) கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் 613 010.

Contact :
Secretary/Treasurer, Tamil Nadu Archaeological Society
C/o Department of Epigraphy and Archaeology
Tamil University, Thanjavur - 613 005.